# சொல் மாலை

கலைமாமணி, வித்யாவாசஸ்பதி பெரும்பாணநம்பி,
தொல்லியல் புலவன் சிலைமீட்ட செம்மல்,
பரதகலா நிபுணன்

**டாக்டர். இரா. நாகசாமி**

முன்னாள் தொல்லியல் துறை இயக்குநர்

**தமிழ் ஆர்ட்ஸ் அகெடெமி**

சென்னை

2000

**சொல்மாலை**

| | | |
|---|---|---|
| முதல் பதிப்பு | : | டிசம்பர், 2000 |
| உரிமை | : | ஆசிரியருக்கே |
| ஆசிரியர் | : | டாக்டர் இரா. நாகசாமி |
| பக்கங்கள் | : | 280 - படங்களுடன் |
| நூல் அளவு | : | 1/8 டிமை |
| தாள் | : | சேசசாயி 16 .kg |
| விலை | : | ரூ.80.00 |
| வெளியீடு | : | தமிழ் ஆர்ட்ஸ் அகெடமி<br>11, 22வது குறுக்குத் தெரு<br>பெசண்ட் நகர்,<br>சென்னை 600 090.<br>போன்: 4916005 |
| அச்சிட்டோர் | : | மாசறு கணினி<br>2, பார்த்தசாரதி நாயுடு தெரு,<br>திருவல்லிக்கேணி,<br>சென்னை-5<br>போன்: 8555 426 |



## பொள்ளாச்சி வள்ளல், அருட்செல்வர், டாக்டர். நா. மகாலிங்கம் அவர்களின்

# அணிந்துரை

சிதம்பர நடராஜர் திருக்கோயிலில் ஆண்டு தோறும் சிறப்பாக நடைபெற்று வரும் நாட்டியக் கலை நிகழ்ச்சி நமது நடனக் கலையின் மறுமலர்ச்சியை வேகப்படுத்தி வருகிறது என்று சொன்னால் அது மிகையல்ல.

இந்த ஆண்டு ஒரு தனிச் சிறப்பு சேர்ந்துள்ளது. பிப்ரவரி 22-ந் தேதி அன்று சமயம் மற்றும் கலை சம்பந்தப்பட்ட சர்வதேசக் கருத்தரங்கம் ஒன்று சிதம்பரத்தில் நிகழ உள்ளது. அதில் வெளிநாட்டு கலைப் படைப்பாளிகள் பலர் கலந்துகொள்ள உள்ளனர்.

அந்நிகழ்ச்சியில் "சொல்மாலை" என்ற ஒரு நூலும் வெளியிடப் பெற உள்ளது. தமிழ்நாட்டுத் திருக்கோயில்களில் உள்ள கலைச் சிற்பங்களைப் பற்றிய நுட்பமான தகவல் களஞ்சியமாக இந்நூல் அமைந்துள்ளது.

கலைமாமணி டாக்டர் இரா. நாகசாமி அவர்கள் இந்நூலை மிகச் சிறந்த முறையில் எழுதியுள்ளார். தமிழக அரசின் தொல்பொருள் துறை இயக்குநராக இருந்து ஓய்வு பெற்றவர். கல்வெட்டு ஆராய்ச்சிகளில் 40 ஆண்டுகளாக ஈடுபட்டு அத்துறையில் அரிய புலமையும் புகழும் பெற்றவர். கல்வெட்டுத்துறை மட்டுமல்லாமல், சிற்பம், படிமம், ஓவியம், செப்புப் பட்டயம், கட்டடம், இலக்கியம் ஆகிய துறைகளிலும் அரிய திறமையும் அளப்பரிய ஆற்றலும் பெற்றவர்.

குடவாசல் அருகில் பத்தூரில் கிடைத்த நடராஜர் சிலை கடத்தப்பட்டு லண்டன் மாநகரில் அச்சிலை கண்டுபிடிக்கப்பட்ட பிறகு, அதனைத் தமிழகத்திற்கு மீட்டுக் கொண்டு வந்த பெருமை கலைமாமணி நாகசாமி அவர்களையே சாரும். அதன் காரணமாக 'சிலைமீட்ட செம்மல்' என்று அவர் அழைக்கப் பெறுகிறார்.

சொல் மாலை என்ற இந்நூல் சுமார் 300 பக்கங்களுடன் அரிய செய்திகளைக் கொண்ட ஆலயங்களின் சரித்திரமாக அமைந்துள்ளது. 49 கட்டுரைகள். பல கட்டுரைகள் பல ஆண்டுகளுக்கு முன்பு 'ஓம் சக்தி', 'ஞான பூமி' போன்ற ஆன்மிகப் பத்திரிகைகளில் அவை வெளிவந்துள்ளன.

வேதாரண்யத்தைப் பற்றிய கட்டுரை தருகின்ற செய்திகள் நம்மை வியக்கும்படி செய்கின்றன.

வேதாரண்யம் என்பது திருமறைக்காடு. இங்குள்ள திருக்கோயிலில் எழுந்தருளி உள்ள பரமனை அப்பர் பெருமான், 'ஆரியன் கண்டாய் தமிழன்

கண்டாய்' எனப் பாடிப் பரவி உள்ளார். இங்குள்ள திருக்கோயில் அப்பரும் சம்பந்தரும் சேர்ந்து வந்து தரிசித்த சிறப்புக்குரியது.

இன்னுமொரு இணையற்ற சிறப்பு. இத்திருக்கோயிலின் திருக் கதவுகள் வேதங்களால் திருக்காப்பிடப்பட்டு கிடந்தன. மூடப்பட்ட அக்கதவுகளைத் திறக்கும் முயற்சியில் இறங்காமல், தனி வழி அமைத்து பக்தர்கள் தரிசித்து வந்தனர். அப்போதுதான் தமிழ் ஞானசம்பந்தன் அப்பர் சுவாமிகளிடம் திருக்கதவம் திறக்குமாறு பதிகம் பாட வேண்டினார்.

நாவுக்கரசரின் நற்றமிழ்ப் பதிகத்துக்குத் திருக்கதவுகள் தாமாகவே திறந்தன.

இத்தகைய அரிய செய்திகளை மிக அழகாக டாக்டர் நாகசாமி கட்டுரையில் விவரித்து செல்கிறார்.

தேவாரப் திருப்பதிகங்கள் வேதத்துக்குச் சமமானவை என்பதை மெய்ப்பித்த கீர்த்தியை உடைய இத்திருக்கோயில் பற்றியத் தகவல்கள் ஒரு வரலாறாக உள்ளது. ஏறக்குறைய 1000 ஆண்டு ஆன்மிக வரலாற்றை இத்திருக்கோயில் மூலமாகத் தெரிந்துகொள்ள முடிகிறது. அத்தனை தகவல்களையும் தருகின்ற கல்வெட்டுகள் பல அதில் உள்ளன.

கல்வெட்டுகள் மட்டுமல்ல, இங்குள்ள பெரியபுராண ஓவியம் 250 ஆண்டுகள் பழமையானவை. அதுமட்டுமல்ல. பெரியபுராணத்தை வசன நூலாகவே இங்கே எழுதி வைத்திருந்தனர். அதில் பெரும் பகுதி அழிந்துவிட்டது.

வேதாரண்யப் புராணம் என்ற தலபுராணம் இக்கோயிலுக்கு இருக்கிறது என்பதை அறிகிறோம். அகோர தேவர் அதை எழுதியுள்ளார். யாழ்ப்பாணம் வேள்பிள்ளை என்பர் சுமார் 100 ஆண்டுகளுக்கு முன்பு இதனை வெளியிட்டுள்ளார்.

கந்தபுராணம், திருவிளையாடல் புராணம், பெரிய புராணம் போல வேதாரண்யப் புராணம் இலக்கியச் சுவையும் பக்திச் சுவையும் கொண்ட அரிய புராணம் என்பதை அறிகிறோம். இப்புராணம் குழந்தைகளுக்கு மிக நல்லது எனக் கருதப்படுகிறது. இப்புராணத்தில் விசுவாமித்திரருக்கு உபதேசம் செய்த சருக்கம் இடம் பெற்றுள்ளது. அதில் மனிதர்கள் என்னென்ன நடைமுறைகளைக் கைப்பற்ற வேண்டும் என்ற விதிமுறைகள் பேசப்படுகின்றன.

இதேபோல காஞ்சி மாநகரில் உள்ள கயிலாயநாதர் கோயில் பற்றிய செய்திகளும் அதனை எழுப்பிய மாமன்னன் இராஜசிம்மன் பற்றிய செய்திகளும் சரித்திரமாகக் கருதப்படத் தக்கவை.

அழியாப் புகழ் பெற வேண்டும் என்று ஆசைப்பட்ட மன்னன் இராஜசிம்மன், அதற்காகவே உருவாக்கிய கோயில்தான் கயிலாயநாதர்

கோயில். தஞ்சைப் பெரிய கோயிலை உருவாக்கிய ராஜராஜனே காஞ்சிக் கோயிலை பெரிய கற்கோயில் என்று பிரமித்துப் பேசியுள்ளான்.

அதுமட்டுமல்ல. இன்னொரு அரிய செய்தி தனது குடிமக்களின் எண்ணங்களையும் ஆசைகளையும் நிறைவேற்றுவதற்காகவே இந்தக் கோயிலைக் கட்டினேன் என்கிறான். அரசன் அம்மன்னன் தனது மக்கள் மீது கொண்ட பற்றும் சிவபெருமான் மீது கொண்ட பக்தியும் பற்றி இதன்மூலம் அறிய முடிகிறது.

காஞ்சிக் கோயிலின் சிறப்பை பெரிய புராணத்தில் சேக்கிழார் மூலமாக அறிந்து வியந்து போகிறோம்.

இராஜசிம்மன் இரவு பகலாக இக்கோயிலைக் கட்டி இதன் குட நீராட்டுப் பெரு விழாவுக்கு சிவபெருமானை அழைக்கின்றபோது, பெருமானோ அவனுடைய ஆட்சிக்கு உட்பட்ட திருநின்ற ஊரில் பூசலார் என்ற சிவனடியாரின் கோயிலுக்கு செல்ல முதலிடம் தருகின்ற செய்தி நம்மைப் புல்லரிக்கச் செய்கிறது.

இதேபோல திருவாரூருக்கு அருகில் உள்ள அச்சுத மங்கலம் கோயில் வங்காளத்தைச் சேர்ந்த கோஸ்வாமி மிச்ரர் 11-ஆம் நூற்றாண்டில் கட்டியுள்ள செய்தி கிடைக்கிறது.

ராஜராஜன் எழுப்பிய பெரிய கோயில், ராஜராஜன் முடிசூடிய திருநாள் இப்படி பயனுள்ள பல்வேறு கட்டுரைகளும் இந்நூலில் உள்ளன.

தமிழ்நாட்டின் பக்தி இயக்கம் சைவ சமயத்துக்கு ஆக்கமும் ஊக்கமும் உண்டாக்கிய இயக்கம். அந்த இயக்கத்தின் ஊற்றங்களாக விளங்கியவை நமது திருக்கோயில்கள்.

கோயில்கள்தான் ஒரு காலத்தில் நமது நாட்டின் பிரதான மையமாக இருந்தன. கோயில்களில்தான் வைத்தியசாலையும் பாடசாலையும் செயல்பட்டன. நாட்டிய சாலையும் ஓவிய சாலையும் இருந்தன. கவிவாணர்களும் கலைஞர்களும் கூடும் இடமாக இருந்தன. கோயில்கள்தான் தேசத்தின் கருவூலங்களாகவும் களஞ்சியங்களாகவும் விளங்கின.

அத்தகைய கோயில்களைப் பற்றிய கலைமாமணி நாகசாமியின் கட்டுரைகள் நூல் வடிவில் வெளிவருவது சரித்திரத்திற்குச் சான்றுகள் தரும் பெட்டகமாக அமைந்துள்ளது என்றால் அது மிகையல்ல.

இந்நூல் கல்லூரிகளிலும் மேல்நிலைப் பள்ளிகளிலும் இடம்பெற வேண்டும். வரலாற்று அறிஞர்களும் தமிழ் இலக்கிய அறிஞர்களும் இந்நூலை மாணவர்களுக்கு அறிமுகப்படுத்தி இளைய தலைமுறையினரின் இதயத்தில் பக்தி உணர்வும் தமிழ் உணர்வும் வளரச் செய்ய வேண்டும் என்பது எனது ஆசையாகும்.

**நா. மகாலிங்கம்.**

# நூன்முகம்

'சொல்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே' என்பது அப்பர் பெருமானின் வாக்கு. அப்பாடலின் சொல்லே இந்நூலின் தலைப்பாக அமைகிறது. தமிழகக் கோயில்கள் அவற்றோடு இணைந்த பக்திப் பாக்கள், அப்பக்தியால் பண்பட்ட பெரியோர்கள், அரசர்கள், பெண்டிர் என பல்லோர் உள்ளமும், வரலாறும் இந்நூலில் இடம் பெறுகின்றன. பல தேவாரப் பாக்களுக்கு புதிய நோக்கில் கருத்துகளும் இங்கு இடம்பெறுகின்றன. இவை ஓம்சக்தி, தினமலர், மெய்கண்டார், ஞானசம்பந்தம், போன்ற பத்திரிகைகளில் பல்லாண்டுகளாக வெளிவந்தவை. இவற்றை எழுத என்னை பெரியோர்கள் ஊக்குவித்துள்ளனர். தருமை ஆதினம் ஸ்ரீலஸ்ரீ குரு மகாசந்நிதானம், ஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசார்ய சுவாமிகள் அவர்களும், திருவாவடுதுறை ஆதீனம், ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் சிவபிரகாச பண்டார சந்நிதி சுவாமிகள் அவர்களும், திருப்பனந்தாள் அதிபர், கயிலை மாமுனிவர், முத்துக் குமாரசுவாமித் தம்பிரான் அவர்களும், என்னை இப்பணியில் ஊக்குவித்தருளினர். அத்தவ முனிவர்களின் திருத்தாள் மலர்களுக்கு வணக்கத்துடன் நன்றி கூறிக் கொள்கிறேன்.

தமிழ் நாடெங்கும் ஆன்மீகமும், இயல், இசை, நாடகமும், என்றென்றும் ஒலித்திட, நிறைந்திட உடலாலும், பொருளாலும், உழைப்பாலும், மனத்தாலும் பணி செய்யும் செம்மல், 20-21ம் நூற்றாண்டின் "தமிழகத் தவப் பெரும் தனிச் செம்மல்", அருட்செல்வர், பொள்ளாச்சி வள்ளல் அவர்களை எவ்வளவு போற்றினாலும் தகும். தூய்மையே வடிவும், எளிமையான தோற்றமும், இன்முகமும், எங்கும் எவருக்கும் அள்ளி வழங்கும் அண்ணல் இவர்கள். இவரது ஊக்குவிப்பால், வடிக்கப்பட்ட பலகட்டுரைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. அன்னாரின் ஆசிக்கு என் வணக்கமும் நன்றியும் அர்ப்பணிக்கிறேன். வேதாரண்யம் பற்றிய தொகுப்பு எழுத அமரர் அப்பாகுட்டி அவர்கள் பலகருத்துகள் நல்கி உதவினார்கள். அப்பெரியாரின் நினைவுக்கு என் அஞ்சலி. திரு பகீரதன் அவர்கள் என் எழுத்துருக்களை தொடர்ந்து ஊக்குவித்து, வந்து பெற்றுச்சென்று, ஓம் சக்தியில் வெளியிட்டார்கள். அவர்களுக்கும் நன்றி.

தினமலர் ஆசிரியர் இரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள், தமிழக வரலாற்றுக்கும், நாணய இயலுக்கும் பெரும் தொண்டாற்றி வருகிறார்கள். தமது நாளிதழில் வரலாற்றுச் செய்திகளைத் தொடர்ந்து வெளியிட்டு வருகிறார்கள். அவர்களது அன்பால் இதில் உள்ள பல கட்டுரைகள் வெளியாகியுள்ளன. அவருக்கு என்றென்றும் நன்றிக் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூல் வெளிவர பல்வகையிலும் உதவிய நண்பர், வழக்கறிஞர். ஆ. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கும் இந்நூலை அச்சுக் கோர்த்து விரைவில் வெளியிட உதவிய மாசறு திரு. ஜெயராஜ் தம்பதியினருக்கும் எனது மனமார்ந்த நன்றிகள்.

**டாக்டர்.இரா. நாகசாமி**

# பொருளடக்கம்

# 1. வேதாரண்யம்

**மறைவனம்**

இந்திய நாட்டில் பல்லாயிரம் ஆண்டுகளாக உயர்ந்த தத்துவங்களை. உணர்வுகளை உள்ளடக்கி நம் உள்ளங்களை உயர்நிலைக்கு எடுத்துச் செல்பவை வேதங்கள் என்னும் இறவாக் கவிதைகள்.

வேதங்களைப் படிக்கப் படிக்க, நம் கருத்துகள் எல்லாம், படிப்படியாக நிலமாகி, நீராகி, ஒளியாகி, வளியாகி, விண்ணாகி, விண்ணவராய், விண்ணவர் தம் தலைவருமாய பரமனின் முன் கொண்டு நிறுத்தும் தகைமை உடையவை.

தெய்வத்தைத் திறந்து காட்டும் திருக்கதவுகளாகவே திகழ்கின்றன வேதங்கள். அந்த வேதங்களே பரமனை அர்ச்சித்தனவாம். ஒருநாள் அல்ல. பலநாள் அல்ல. நீண்ட நெடுங்காலம் அர்ச்சித்தனவாம்.

அப்படிப்பட்ட ஓர் இடம் எவ்வளவு புண்ணியத் தலமாகத் திகழும் என்று எண்ணிப் பாருங்கள்!

அதுதான் வேதாரண்யம். திருமறைக்காடு என்றும் அழைக்கப் பெறும் புண்ணியத்தலம்.

தஞ்சை மாவட்டத்தில் கடற்கரை ஓரத்தில் திகழும் மூதூர்.

வங்கக் கடல் வந்து அலைக்கும் அதன் கரையில் வெண்மணல் பரவி நிற்கும்.

அங்கு குரவம், குருக்கத்தி, புன்னை, ஞாழல் முதலிய மலர்ச்செடிகள் மண்டி நிற்கும். தாழைப்புதர்கள் அங்குமிங்கும் தழைந்திருக்கும்.

மாதவி என்னும் பூக்கள் மீதமர்ந்து வண்டினங்கள் ரீங்காரம் செய்ய.

அதன் ஊடே தென்றல் வீசி வரும்.

சோலையின் மரங்கள் தோறும் உயர் இன வண்டுகள் மதுவுண்டு இசைகள் பாடிக் கொண்டே இருக்கும். வெண் திரைகள் செம்பவளமும் முத்தும் கொணர்ந்து சேர்க்கும்.

ஏராளமான மரக்கலங்கள் வருவதும் போவதுமாய் இருப்பதால் கடல் ஒலியையும் விஞ்சும் ஒலியாக அங்கு மக்கள் ஒலி எதிரொலிக்கும்.

தாழைப் பொழில்களின் ஊடு சென்று பூழைத் தலை நுழைந்து குரங்கு வாழைக் கனி பறித்து உண்ணுமாம்.

இயற்கையின் எழிற் செம்மையும் செல்வச் செழுமையும் நிறைந்த ஊர் வேதாரண்யம் என 1400 ஆண்டுகளுக்கு முன்னரே அப்பர் அடிகளும், ஞானசம்பந்தப் பெருந்தகையும், சுந்தரமூர்த்தி சுவாமிகளும் பாடியிருக்கிறார்கள்.

அவர்கள் குறிப்பிட்ட காட்சி எல்லாம் இன்றும் நிறைந்து விளங்கும் ஊர் இவ்வெழில் ஊர். இயற்கை எழிலால் கவரப்பட்டு வேதங்கள் இங்கு வந்து பரமனின் பாதங்களைப் போற்றி மலரால் வழிபாடு செய்மாமறைக் காடு" என்று பாடுகிறார். இப்பதியை "மறைவனம்" என்றும் கூறுகிறார். மறை எனும் தமிழ்ச் சொல்லும் "வனம்" என்னும் வட மொழிச் சொல்லும் இணைந்த பெயரால் அழைக்கிறார்.

ஆம். ஆரியமும், தமிழும் சேர்ந்து இறைவனைத் துதிக்கும் ஊர் இது. துதிப்பவை வேதங்கள். துதிக்கப் படும் இடம் தமிழகத்தில் இருக்கும் தனிப்பெரும் மூதூர். ஆதலின் இதைத் தமிழ் பரப்ப வந்த ஞானசம்பந்தர் வேதவனம் என்றும் அழைக்கிறார்.

அப்பர் பெருமானோ இங்கு உறையும் பரமனை "ஆரியன் கண்டாய், தமிழன் கண்டாய்" என இவ்வூர்ப் பதிகத்தில் குறித்து மகிழ்கிறார்.

இந்த ஊரில் திகழ்வது வேதாரண்யேசுவரர் திருக்கோயில். இங்கு ஓர் அற்புதம் நிகழ்ந்தது.

நாவுக்கரசரும், ஞானசம்பந்தப் பெருந்தகையும் சேர்ந்து இந்த ஊருக்கு வருகிறார்கள். சிவத்தலங்களைத் தரிசித்து வருகிறார்கள்.

இரு பெரியோரும் இவ்வூர் எல்லையை அடைந்தபோது "அரஹரா! "அரஹரா!" என்னும் ஒலி இரு விசும்பும் திசை எட்டும் எதிரொலித்ததாம்.

அவ்வொலி கடல் திரை ஒலிக்கும் பேரொலியையும் அடக்கி விண்ணை அடைந்து உம்பர் நாட்டுக்கும் அப்புறத்தும் சென்றதாம்.

### திருக்காப்புச் செய்தல்

தமிழகத்தையே தமது தெய்வப் பதிகங்களால் உய்விக்க வந்த இரு பெரும் சமயத்தலைவர்கள் இணைந்து வரும் பேறு பெற்றதெனில், அதன் புகழ் விண்ணகமும் கடந்து நின்றதெனில் அது இயல்பு அன்றோ! அந்த நிகழ்ச்சியைப் பக்திப் பெருக்கோடும் கவிதை உள்ளத்தோடும் நினைத்துப் பார்க்கிறார் சேக்கிழார்.

"சொல்லரசருடன் கூடப் பிள்ளையாரும் தூமணி நீர்மறைக் காட்டுத் தொல்லை மூதூர், மல்கு திரு மறுகின்கண் புகுந்தபோது மாதவர்கள் மறையவர்கள் மற்றும் உள்ளோர், எல்லையில்லா வகை 'அர' என்றெடுத்த ஓசை இரு விசும்பும் திசை எட்டும் நிறைந்து பொங்கி, ஒல்லொளி நீர் வேலை ஒலி அடக்கி, விண்மேல் உம்பர் நாட்டு அப்புறத்தும் உற்றதன்றே.

என்று உருவகித்துப் பாடியுள்ளார் சேக்கிழார்.

திருமறைக்காடு வந்த இரு தேவாரப் பெரியார்களும் கோபுரத்தைத் தாழ்ந்து, இறைஞ்சி, கோயிலின் உள்புகுந்து வலம் வந்து நின்றனர்.

கர்ப்பக்கிருஹத்துக்கு நேர் முன் இருக்கும் வாயில் கதவுகள் மூடியிருந்தன.

வேதம் பயின்று கோயிலில் அர்ச்சிக்கும் பெரியவர்கள் நேர்வாயில் வழியாகச் செல்லாமல் பக்கத்து வாயில் வழியாக உள்ளே சென்று பரமனைப் பூசித்துத் திரும்புவதைக் கண்டு வியப்புற்றனர். அதன் காரணம் கேட்டனர்.

முன்னாள் வேதங்கள் மலரால் வழிபட்டு கதவுகளுக்குத் திருக்காப்பிட்டன.

அதன் பின்னர் அர்ச்சிக்கும் பெரியோர்களால் அக்கதவுகளைத் திறக்க இயலவில்லை.

ஆதலால் பக்கத்தில் ஒரு வழி செய்து, இக்கோயிலில் வழிபட்டு வருகிறோம் என்று அவர்கள் கூறினர்.

இதைக்கேட்ட சம்பந்தர், 'வேதவனத்து சுடர்ச் சோதியை, பசுபதியை, அமரர் சூளாமணியை, நாம் நேரே உள்ள திருவாயில் வழியாகச் சென்று வணங்க வேண்டும். இக்கதவம் திறக்க நீரே பதிகம் பாடி அருள வேண்டும்' என அப்பரை வேண்டிக் கொண்டார்.

அப்பர் பெருமானும் அவ்வாயில் முன் நின்று பத்துப் பாடல்கள் பாடினார்.

*"பண்ணின் நேர் மொழியாள் உமை பங்கரோ*
*மண்ணினார் வலஞ்செய் மறைக் காடரோ*
*கண்ணினால் உமைக் காணக் கதவினைத்*
*திண்ணமாகத் திறந்தருள் செய்ம்மினே"*

என்று தொடங்கிப் பாடினார். பதினோராவது பாடலாம் திருக்கடைக் காப்புப் பாடியதும், கதவுகள் தாமாகத் திறந்தன.

அப்பரும், சம்பந்தரும் அபிமுக வாயில் வழியாக உள்ளே சென்று வணங்கினர். அவர்கள் இருவரும் இவ்வாறு உள்ளே சென்று வழிபட்டதைச் சேக்கிழார் மனம் நெகிழப் பாடுகிறார்.

*"கோயில் உட்புகுவார் உச்சி குவித்த செங்கைகளோடும்*
*தாயினும் இனிய தங்கள் தம்பிரானாரைக் கண்டார்.*
*பாயும் நீர் அருவி கண்கள் தூங்கிடப் படியின் மீது*
*மேயின மெய்யராகி விழிப்புற்று விரைவில் வீழ்ந்தார்.*

*"அன்பினுக்கு அளவு காணார் ஆனந்தவெள்ளம் மூழ்கி*
*என்பு நெக்குருக நோக்கி இறைஞ்சி நேர் விழுந்து நம்பர்*
*முன்பு நிற்பதும் அற்றார் மொழி தடுமாற ஏத்தி*
*மின்புரை சடையார் தம்மைப் பதிகங்கள் விளம்பிப் போந்தார்."*

வேதாரண்யம் கோயிலில் பக்திப் பெருவெள்ளத்தில் மூழ்கித் திளைத்த வாகீசரையும் ஆளுடைப்பிள்ளையையும் கவியரசாம் சேக்கிழார் மேற் குறித்தவாறு நமக்குக் காட்டுகிறார். ஆம்! வேதங்கள் அர்ச்சித்து மூடிய கதவுகளை, அர்ச்சனை புரிவோரால் திறக்க முடியவில்லை. தேவாரப் பதிகம் பாடியதும் வாயில் திறந்தது.

வேதங்கள், தெய்வத்தை நேர்முகமாகக் காண உதவும் வாயில்கள்; வேதத்துக்கு நிகரான உணர்வுப் பெருக்கோடு கூடிய பாடல்கள் வெளிப்பட்டால் தெய்வ வாயிலும் திறக்கும்.

அப்பரும், சம்பந்தரும் பாடிய தேவாரப் பதிகங்களும் வேதங்கள் தாம். வேதங்களே வந்து திறந்தது போல் தேவாரப் பதிகங்கள் பாடியதும், நெடுங்காலமாக மூடி மறைத்திருந்த கதவுகள் திறந்தன. திருக்காப்பு நீங்கின. பரமனை வணங்கி வெளிவந்ததும் அப்பர் வேண்ட சம்பந்தர் ஒரு பதிகம் பாடினார்.

*"சதுரம் மறைதான் துதி செய்து வணங்கும்*
*முதூர் பொழில் சூழ் மறைக்காட்டுறையும் மைந்தா!*
*இது நன்நிறை வைத்தருள் செய்க எனக்கு உன்*
*கதவம் திருக்காப்புக் கொள்ளும் கருத்தாலே."*

என்று பதிகத்தில் முதல் பாடல் பாடியதும் கதவு மீண்டும் மூடிக் கொண்டது.

இந்த அற்புதம் நிகழ்ந்த இடம் வேதாரண்யம். இந்த அற்புதமான தெய்விக நிகழ்ச்சியில் பல அரிய கருத்துகள் நிறைந்துள்ளன.

திருக்கோயில்களில் பூஜை முடிந்ததும் கதவுகளைச் சாத்தித் தாழிட்டுப் பூட்டுவதும் பூஜையின் ஓர் அங்கம் தான். அதற்குத் தனி மந்திரங்களும் வழிபாடும் உண்டு. அதைத் "திருக்காப்புச் செய்தல்" என்று அழைப்பர்.

கதவம் திறக்கும்போதும் வழிபாடு செய்து பின்னர் தான் திறத்தல் வேண்டும். இதைத் "திருக்காப்பு நீக்கல்" என்பர்.

இந்த மரபு சம்பந்தர், அப்பர் காலத்துக்கும் முன்பிருந்தே 1400 வருடங்களுக்கும் மேலாகவே தமிழ்நாட்டில் நிலவி வந்திருக்கிறது என்பதை அறிகிறோம்.

வேதாரண்யம் கோயிலில் திருக்காப்பிட்டதைச் சேக்கிழார்

*"மறை அர்ச்சித்துக் காப்புச் செய்த*
*பைம் பொன் மணித் திருவாயில்"*

என்று பாடுகிறார்.

தேவாரப் பதிகங்கள் வேதங்களாம் என்ற கருத்தும் இந்நிகழ்ச்சியால் பெறப்படுகிறது.

அப்பர் பெருமான் தமது திருமறைக்காடு திருத்தாண்டகத்தால் இவ்விறைவனை "முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்" என்று பாடி இருப்பதும் இதனையே குறிக்கிறது.

தமிழுக்கு முரண்பாடாக வேதமோ, வேதத்துக்கு முரணாகத் தமிழோ இல்லை. இருக்கவும் முடியாது. ஏனெனில் இரண்டுமே இறைவனின் உருவம்தான்.

ஆன்மிகத்திலே, தேவாரப் பதிகங்களிலே சைவத்திலே பற்றுக் கொண்ட எவருமே ஒன்று சிறந்தது மற்றது தாழ்ந்தது என எண்ண முடியாது.

அதைத்தான் வேதம் அர்ச்சித்துப் பூசித்து மூடிய கதவுகள், தெள்ளு தமிழ்த் தேவாரப் பதிகங்கள் பாடியதும் திறந்தன என்னும் அதிசயப் பாங்காக வேதராண்யத்தில் காண்கிறோம்.

இந்தக் கோயிலைப்பற்றி அறிய, ஏராளமான சான்றுகள் இருக்கின்றன. இலக்கியம், புராணங்கள், கட்டடம், கலை, கல்வெட்டுகள் எனப் பல உண்டு.

ஓர் ஆயிரம் ஆண்டு வரலாற்றை நமக்கு அள்ளித் தர இக்கோயிலில் ஏராளமான கல்வெட்டுகள் - படி எடுக்கப்பட்ட முழுமையான கல்வெட்டுகள் மட்டும் நூற்றுக்கும் மேல் இருக்கின்றன.

சோழ மன்னன் முதலாம் பராந்தகன் காலம் முதல் அதாவது 910 ஆம் ஆண்டில் இருந்து அண்மைக் காலம் வரை, இந்தக் கோயிலின் வழிபாட்டுக்கு ஏற்பாடு செய்தது; விழாக்கள் அமைத்தது; விளக்கு எரிக்க வகுத்தது என்று பல்வேறு நிகழ்ச்சிகளையும் கூறும் சான்றுகளாக

இக்கல்வெட்டுகள் இருக்கின்றன. அதே சமயம் இந்தக் கோயிலின் வரலாற்றையும் இந்தக் கல்வெட்டுகள் சொல்கின்றன.

## 10 ஆம் நூற்றாண்டில்

இந்தக் கல்வெட்டுகளில் 45க்கும் மேற்பட்டவை முதலாம் பராந்தகசோழனின் கல்வெட்டுகளாம். அதாவது 906ஆம் ஆண்டில் இருந்து 950ஆம் ஆண்டுக்குள் இந்தக் கோயிலுக்குக் கொடுக்கப் பட்டவை.

இவை பெரும்பாலும் தூண்களில் எழுதப்பட்டுள்ளன.

வேதாரண்யேச்வரர் ஆலய முன் மண்டபத் தூண்களில் உள்ளன.

பராந்தக சோழன் பெற்ற வெற்றிகளில் மிகச் சிறந்த வெற்றி பாண்டியர்களை வென்று மதுரையைக் கைப்பற்றியதாகும்.

சோழப் பேரரசு பாண்டி நாடு முழுவதையும் வென்று ஈழத்தையும் வென்றது இவனால்தான்.

ஆதலால் பராந்தகனுக்கு "மதுரை கொண்ட பரகேசரி" என்றும், "மதுரையும், ஈழமும் கொண்ட பரகேசரி" என்றும் பட்டப்பெயர்கள் உண்டு.

இவனுடைய கல்வெட்டுகள் "மதுரை கொண்ட கோப்பரகேசரி பன்மர்க்கு" என்றுதான் தொடங்கும். அவ்வாறுதான் இங்குள்ள கல்வெட்டுகள் தொடங்குகின்றன.

அந்தக் கல்வெட்டுகளில் இவ்வூர் "திருமறைக்காடு" என்றே அழைக்கப்படுகிறது. 'உம்பளநாடு' என்றும் குறிக்கப்படுகிறது.

இந்தக் கோயிலில் உள்ள பரமனை இம் மன்னனின் கல்வெட்டுகள் பலவும் "திருமறைக்காட்டு மஹாதேவர்" என்று அழைக்கின்றன.

ஒரு சில 'திருமறைக்காட்டு ஈசர்' என்றும் பிற "திருமறைக்காட்டு ஆள்வார்" என்றும் அழைக்கின்றன.

இப்போது ஒரு கல்வெட்டே கூறுவதைக் கேளுங்கள். 927ஆம் ஆண்டில் எழுதப்பட்ட சாஸனம் அது.

இந்தக் கோயிலில் மூன்று சந்தியும் பூஜை செய்யப் பூஜகர் ஒருவருக்கு ஏற்பாடு செய்தார் ஒருவர். அவர் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவர்.

அந்த ஊரின் பண்டைய பெயர் மான நிலை நல்லூர் என்பது.

அந்த ஊரைச் சேர்ந்த கடம்பன் என்பவர் இங்கு பூஜகருக்காக ஏற்பாடு செய்தார்.

"பூஜை செய்யும் பிராமணன் வேதத்தில் வல்லவனாகவும் அர்ச்சனா விதி நன்கு தேர்ந்தவனாகவும் இருக்க வேண்டும். யோக்யனாகவும் இருக்க வேண்டும்" என்பது ஏற்பாடு செய்தவரின் கருத்து. யோக்யன் என்றால் உரிய தகுதியில் சிறந்தவன் என்று பொருள்.

"வேதாரண்யம்" அல்லவா? வேதமும், ஆகம விதிகளும் அறிந்தவனே இங்கு பூஜை செய்யலாம் என்று விதித்தார்.

அவனுக்கு ஜீவிதமாக (ஊதியம் கொடுக்க) அறுபது கழஞ்சு பொன் கொடுத்தார்.

அதன் வட்டியாக ஆண்டுக்கு 60 கலம் நெல்லும் கொடுக்க வகை செய்து அதைப் பூஜகருக்குக் கொடுக்க ஏற்பாடு செய்தார்.

அதைப் பற்றிக் கூறும் கல்வெட்டு "வேதமும் அர்ச்சனா விதியும் வல்லவனாய் யோக்யனாயிருப்பான், ஒரு பிராமணனை நாங்கள் தேடி நாங்களே போஷித்து இடுவதாகவும்" என்று கூறுகிறது.

இதுபோன்ற சுவையான பல வரலாற்றுச் செய்திகளை இந்தக் கோயிலில் இருக்கும் கல்வெட்டுகள் கூறுகின்றன.

வேதாரண்யேச்வரர் கோயிலுக்கு முதலாம் பராந்தக சோழன் காலத்தில், அதாவது 906 ஆம் ஆண்டில் இருந்து 950 ஆம் ஆண்டு வரை ஏராளமான பொருள்களும், நிலமும் வழிபாட்டுக்காக கொடுக்கப்பட்டன.

சோழ அரசனும் சோழமாதேவியரும், சோழ அதிகாரிகளும் தாங்களே முன் வந்து இக்கோயிலுக்கு வேண்டியவற்றை எல்லாம் கொடுத்திருக்கிறார்கள்.

இதிலிருந்து இந்தக் கோயில் எவ்வளவு சிறப்புடையதாகக் கருதப்பட்டது என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளலாம்.

சோழமானார் மணவாட்டி நங்கையார் நக்கன் வரகுணி என்பவள் 916 ஆம் ஆண்டில் இந்தக் கோயிலுக்கு ஒரு நொந்தா விளக்கு கொடுத்தாள். அந்த விளக்கு எரிப்பதற்கு வேண்டிய செலவுக்காக 90 ஆடுகள் கொடுத்தாள்.

அவற்றை இந்தக் கோயில் இடையர்கள் பெற்றுக் கொண்டார்கள். நாள்தோறும் விளக்கு எரிப்பதற்காக ஒரு உழக்குப்படி நெய் கொண்டு வந்து அளக்கவும் ஒப்புக் கொண்டார்கள்.

இந்த நெய்யினால் அந்த நொந்தா விளக்கு எரிக்கப்பட்டது.

இந்தக் கோயிலில் நெய் எண்ணெய் அளக்கும் உழக்குக்கு "திருமறைக் காடன் உழக்கு" என்று பெயர்.

அவ்உழக்கினால்தான் அளந்து ஊற்ற வேண்டும். மற்ற உழக்குகளானால், கூட அல்லது குறைச்சலாக இருக்கும்.

அதுபோல் இல்லாமல் இப்போது 'முத்திரைப்படி' என்கிறோமே அதுபோல் 'திருமறைக்காடன்' என்னும் உழக்கால் அளந்து கொடுக்க வேண்டும்.

அந்த ஆடுகளைப் பெற்றுக் கொண்ட இடையர்களை - "திருமறைக் காட்டுத் தேவர் இடைச்சான்றார்" என்று அழைத்தனர்.

அந்தக் காலத்தில் ஒவ்வொரு கோயிலுக்கும் "இடைச்சான்றார்கள்" இருந்திருக்கிறார்கள்.

இவர்கள்தான் கோயில் ஆடுகளையும், மாடுகளையும் பராமரித்துக் கோயிலுக்கு வேண்டிய நெய், பால் முதலியவற்றை அளக்க வேண்டும்.

வேதாரண்யம் கோயிலில் விளக்கு எரிப்பதற்கு 60 ஆடுகள் கொடுத்த மாதரசி சோழன் மணவாட்டி நங்கை வரகுணி. இவள் பாண்டிநாட்டு இளவரசி. சோழனை மணந்தவள்.

செம்பியன் மூவேந்த வேளார் என்ற அதிகாரியின் மணவாட்டி கோயிலானாச்சி. இவள் 920 ஆம் ஆண்டில் உத்தராயண சங்கிராந்தி யன்று சிறப்பாக நைவேத்யம் (அமுதுபடி) நாலு நாழி அரிசியால் செய்து படைக்க 25 கழஞ்சு பொன் கொடுத்தாள்.

இதில் வரும் வட்டியைக் கொண்டு ஒவ்வொரு ஆண்டும் சங்கிராந்தியன்று சிறப்பு அமுதுபடி செய்து வழிபட ஏற்பாடு செய்தாள்.

இதே ஆண்டில் - அதாவது 920ஆம் ஆண்டில் செம்பியன் காரைக்காடுடையான் என்பவரின் மகன் 'கலிகேசரி' என்பவன் விளக்கு எரிக்க ஆடுகள் கொடுத்தான்.

இதை தமிழிலும் சம்ஸ்கிருத்திலும் எழுதி வைத்திருக்கிறான்.

சம்ஸ்கிருதக் கல்வெட்டில் வேதாரண்யத்தை "சுருதிவிபிநம்" என்று அழைக்கிறான்.

*"அதிவஸதே ச்ருதி விபிநம் ப்ராதாத் கலிகேசரீ பிநாகப்ருதே*
*அநவரத தீப ஹேதோ: விபுலதரஸ்ரீ: அஜாந் நவதிம்"*

என்று அந்தக் கல்வெட்டில் இருக்கிறது.

செம்பியன் மூவேந்த வேளானின் தேவி மாணிக்கப்பிராட்டி. இந்த மாதரசி ஒரு நொந்தா விளக்கு எரிக்க 925 ஆம் ஆண்டில் பல ஆடுகள் கொடுத்திருக்கிறாள்.

இந்தக் கோயிலின் வடக்கில் ஒரு விஷ்ணு கோயில் இருந்திருக்கிறது.



புவனி விடங்கர் நாகப்பட்டினம்

அதை 'வடக்கில் தளி விஷ்ணுக்கள்' என்று அழைத்தனர்.

அந்தக் கோயிலுக்குச் சாத்தன் மல்லி என்பவள் 929 ஆம் ஆண்டில் ஒரு விளக்கு வைத்தாள்.

இந்தப் பகுதியை 930 ஆம் ஆண்டில் அமுதன் காஞ்சன் என்பவர், அதிகாரியாக இருந்து மேற்பார்வையிட்டிருக்கிறார்.

இப்பொழுது 'டிஸ்டிரிக்ட் ரெவின்யூ அதிகாரி' என்கிறோமல்லவா? அதுபோல அன்று இந்தப் பகுதியை குறிப்பாக விளைநிலங்களை வகைப்படுத்தி ஆராயும் அதிகாரம் அந்த அதிகாரிக்கு இருந்தது.

அதை நாடு வகை செய்தல் என்பர். அந்த அதிகாரி இந்தக் கோயிலில் தயிர் அமுது படைக்க ஏற்பாடு செய்து இருக்கிறார்.

அதற்காக மூன்று பேர் நிலம் கொடுத்தனர். அந்த நிலங்களில் இருந்து வரும் வருவாயைக் கொண்டு நாள்தோறும் மூன்று நாழி தயிர் அளக்க அந்த அதிகாரி ஏற்பாடு செய்தார்.

தயிர் அளக்க 'ராஜகேசரி' என்ற அளவையை உபயோகித்தனர். ,

ராஜகேசரி என்ற பட்டம் பராந்தக சோழனின் தந்தை ஆதித்த சோழனின் பட்டமாகும்.

அந்தப் பெயரால் வேதாரண்யம் கோயிலில் 'அளவை' இருந்துள்ளது.

வேதாரண்யத்தில் 936 ஆம் ஆண்டில் ஓர் அம்பலம் கட்டப்பட்டது.

ஊர் அம்பலம் என்று அதற்குப் பெயர். ஊராட்சி நடத்தும் பொது மண்டபம்.

இதைக் கடம்ப பட்டன் என்பவர் கட்டி இருக்கிறார். இந்த அம்பலத்தில் இரவுக் காலங்களில் விளக்கு எரிக்க வீர சோழ அணுக்கன் என்பவர் நூறு ஈழக் காசுகள் கொடுத்தார்.

இந்தக் கோயிலில் 938 ஆம் ஆண்டில் சிறப்பாக விளக்கு எரிப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது.

இந்த விளக்கு ஒரு வெற்றியின் நினைவாக வைக்கப்பட்டது.

பராந்தகச் சோழன் சிங்களத்தை வென்றான். அதனால்தான் அவனுக்கு "மதுரையும் ஈழமும் கொண்ட விகலாளி" என்று பெயர்.

சிங்களத்தை வென்று மீண்டதன் நினைவாக இந்த விளக்கு எரிக்கப் பட்டது.

இதைக் குணவன் என்பவர் ஏற்பாடு செய்திருக்கிறார். "சிங்களன் கோன் தன்னை (அடக்கி) மீண்ட நாள் வைத்தான்" என்று வேதாரண்ய கோயிலில் இருக்கும் கல்வெட்டு ஒன்று கூறுகிறது.

வெற்றியின் நினைவாகப் பரமனை வணங்கி எரிய வைத்த விளக்கு ஆதலின் இதைக் குறிக்கும் கல்வெட்டு ஒரு பாடலாகவே அமைந்துள்ளது.

*மதிள் மதிரை சிதைத்த கோப் பராந்தகர்க்கு யாண்டு*
*வந்தவோர் எண்ணான்கில் மறைக்காட்டுளார்க்கு*
*கொதிநுதிவேல் வளவந்தன்குடி இடையூர்க் குரிசில் குணவன்*
*திருநொந்தா விளக்கு கொணர்ந்து அழகுற வைத்தான் அங்கழகால்.*

இதுதான் அந்தக் கல்வெட்டில் இருக்கும் பாடல்.

பத்தாம் நூற்றாண்டில் இந்தக் கோயிலின் உள்ளே ஒரு விஷ்ணு கோயில் இருந்ததற்கான சான்றுகள் இருக்கின்றன.

அதேபோல் இங்கு கோடீச்வரர் கோயில் என்ற கோயிலும் இருந்தது என்று 937 ஆம் ஆண்டில் எழுதப்பட்ட ஒரு கல்வெட்டுக் கூறுகிறது.

ஒரு பல்லவகுரிசிலின் மகள் மூத்த கிழானடிகள். இந்த மாதரசி 945 ஆம் ஆண்டில் வெண்சாமரை ஒன்றை தங்கத்தினால் செய்து கொடுத்திருக்கிறாள்.

தஞ்சாவூர் பராந்தகச் சோழனின் தலைநகராகத் திகழ்ந்தது.

தஞ்சாவூருக்கும் வேதாரண்யத்துக்கும் மிகவும் நெருக்கமான தொடர்பு இருந்தது.

தஞ்சாவூரில் இருந்த இரண்டு பெண்கள் வேதாரண்யம் கோயிலுக்குப் பொருள் கொடுத்திருக்கிறார்கள்.

தஞ்சாவூர் பெரிய வேளத்துப் பெண்டாட்டி தன் மகளுக்காக இந்தக் கோயிலில் ஒரு விளக்கு எரித்தாள். "வேளத்துப் பெண்டாட்டி" என்றால் அங்குப் பணிபுரிபவள் என்று பொருள்.

அதேபோல விச்சாதரப் பெருந்தெரு என்று ஒரு தெரு இருந்தது. அந்தப் பெருந்தெருவின் வேளத்துப் பெண்டாட்டி காரிசாத்தி என்னும் பெருமாட்டியின் மக்கள் விளக்கு வைத்தனர்.

இவ்வாறு பராந்தகச் சோழனின் ஆட்சியின் தொடக்கத்தில் இருந்து இறுதி வரை ஏராளமான கொடைகள் இந்தக் கோயிலுக்கு கொடுக்கப்பட்டு இருக்கின்றன.

பராந்தகச் சோழன் காலத்துக்குப் பிறகு சுமார் 50 ஆண்டுக் கால வரலாற்றைக் குறிக்கும் கல்வெட்டுகள் மறைந்து போயின.

**இராஜராஜன் காலம்**

இராஜராஜ சோழன் காலத்தில் இக்கோயிலில் நடைபெற்ற மூன்று சிறந்த நிகழ்ச்சிகள் நமக்குத் தெரிய வருகின்றன.

தஞ்சைப் பெரும் கோயிலைக் கட்டியவன் முதலாம் ராஜராஜ சோழன். அந்தப் பேரரசன் ஐப்பசி மாதம் சதய நட்சத்திரத்தில் பிறந்தவன்.

இராஜராஜனின் அதிகாரிகளில் ஒருவர் இராஜராஜ வாத்யமாராயன்.

இவர் தஞ்சைப் பெருங்கோயிலில் சிறந்த பணிபுரிந்திருக்கிறார்.

இராஜராஜ சோழனின் சதய நட்சத்திரத்து அன்று மாதம்தோறும். வேதாரண்யம் கோயிலில் நூற்றெட்டுக் கலசம் வைத்து திருமறைக்காட்டுப் பெருமானுக்குச் சிறந்த அபிஷேகங்களும் பூஜையும் செய்ய இராஜராஜ வாத்யமாராயன் ஏற்பாடு செய்தார்.

இந்தப் பணியைக் கோயில் தேவகன்மிகளும், ஊர்ப்பெரியார்களும் (கிழவர்களும்), ஸ்ரீகார்யம் செய்வார்களும் நடத்தி வரவேண்டும் என்று ஏற்பாடு செய்தார்.

இதைப் பற்றி ஒரு கல்வெட்டு இருக்கிறது. அதில்

"இராஜராஜதேவர் திருநாள் சதயத்திருநாளன்று திருநாள்தோறும் நூற்றெட்டுக் கலசம் ஆடியருள தேவகன்மிகளும், கிராமக் கிழவர்களும், ஸ்ரீகார்யம் ஆராய்வார்களும் வேண்டும் விசம் (பொருள்) இட்டு ஸ்நபனம் செய்ய" என்று எழுதப்பட்டு இருக்கிறது.

அரசருடைய பிறந்த நட்சத்திரத்தன்று 108 கலசம் அபிஷேகம் (ஸ்நபனம்) செய்து பூஜித்தால் நாட்டுக்கு நன்மை உண்டாகும் என்று ஆகம நூல்கள் கூறுகின்றன.

இராஜராஜ சோழனது சதய நாள் விழா தஞ்சைப் பெருங்கோயிலில் மாதந்தோறும் நடைபெற்றது.

இதுபோல் இன்னும் சில கோயில்களிலும் சதய விழா நடைபெற்றது என்றும் கல்வெட்டுகள் கூறுகின்றன.

இராஜராஜனே சேர நாட்டை வென்றபோது அந்நாடு முழுவதும் சதய நாள் விழாவுக்கு ஏற்பாடு செய்தான் என்று "சதய நாள் விழா உதியர் மண்டலம் தன்னில் வைத்தவன்" எனக் கலிங்கத்துப் பரணி கூறுகிறது.

'கோன் உயரக் குடி உயரும்' என்ற பண்பிற்கு ஏற்ப வேதாரண்யம் கோயிலில் சதய நாள் விழா நடை பெற்றது குறிக்கத் தகுந்தது. இந்தக் கல்வெட்டு 1000 ஆவது ஆண்டில் எழுதப் பெற்றது.

சரியாக ஓராயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நடந்த வரலாற்றை இந்தக் கல்வெட்டு கூறுகிறது.

இதே ஆண்டு வேதாரண்யம் கோயிலில் ஐய்யாறன் அம்பலத்தாடி என்பவர் ஒரு சிறு கோயில் கட்டினார். பெரும்புலியூரைச் சேர்ந்தவர். இவர் இக்கோயிலை புவனிவிடங்க தேவர்க்காக கட்டினார்.

புவனிவிடங்க தேவர் என்பது உத்ஸவ விக்ரகம். வேதாரண்யம் சப்த (ஏழு) விடங்கத் தலங்களில் ஒன்று.

திருவாரூர்ப் பெருமானுக்கு 'வீதி விடங்கர்' என்று பெயர்.

அதுபோல் வேதவனப் பெருமானை 'புவனிவிடங்கர்' என்கிறது ஒரு கல்வெட்டு.

இந்தத் தேவர்க்கு கட்டப்பட்ட கோயிலுக்கு 'கேரளாந்தகன்' என்று பெயர் இட்டார். இதைக் கட்டியவர் அம்பலத்தாடி.

கேரளாந்தகன் என்பது இராஜராஜனின் பட்டப்பெயர்.

இராஜராஜனாம் கோயிலில் புவனி விடங்கர் எப்பொழுதும் குடி கொண்டு இருப்பது இதன் பொருள்.

இந்தக் கோயிலில் இடைவிடாது, தொடர்ந்து அணையா விளக்கு எரிந்து கொண்டே இருக்க வேண்டும் என்பதற்காக, அம்பலத்தாடியும் களப்பாளன் தன்னிச்சை என்பவரும் 180 ஆடுகள் அளித்தனர்.

ஆடுகளை கோயில் இடைச்சான்றார்கள் பெற்றுக் கொண்டு நாள் தோறும் நாழி நெய் அளந்து, அந்நெய்யால் இரண்டு நொந்தா விளக்கு எரிக்க ஏற்பாடு செய்தனர்.

இராஜராஜ சோழனின் 22 ஆவது ஆட்சி ஆண்டில் அதாவது 1006 ஆம் ஆண்டு, தஞ்சாவூரைச் சேர்ந்த ஒரு வியாபாரி ஓர் ஏற்பாடு செய்தார்.

தஞ்சாவூரில் உள்ளாலைப் பேரங்காடி என்ற பேரங்காடி இருந்தது. அதைச் சேர்ந்தவர் அவ்வியாபாரி.

அவர் பெயர் ஆச்சன் பிரும்மாத மல்லன் என்பது.

இவர் தம் தந்தை, தமையன் ஆகிய இருவருக்காகவும் திருமறைக் காடுடையாருக்கு இரவு சந்தியில் பீடபூஜை செய்ய ஏற்பாடு செய்தார்.

மரச்சட்டங்களால் செய்த பலகை கொண்டு பீடபூஜை செய்ய் வேண்டும் என்பது ஏற்பாடு. அதற்காக 20 தங்கக் காசுகள் கொடுத்து பத்து வேலி நிலம் வாங்கி வைத்தார்.

பீடபூஜை என்பது நாள்தோறும் பூஜையின் அங்கமாக செய்வது.

இதை எவ்வாறு செய்ய வேண்டும் என்பது பற்றி ஆகமங்கள் சொல்லுகின்றன.

பீடபூஜையைப் பற்றி கல்வெட்டுக் கூறுவது சிறப்புச் செய்தியாகும்.

இராஜராஜன் காலத்தில் சதய நாள் விழாவும், புவனிவிடங்கருக்கு கோயிலும், பீடபூஜையும் ஏற்பட இங்கு வகை செய்யப்பட்டது சிறப்பான செய்திகளாகும்.

அநபாயன் என்னும் இரண்டாம் குலோத்துங்க சோழன் அவையில் சேக்கிழார் பெருமான் அமைச்சராகப் பணிசெய்து வந்தவர்.

அவர்தான் பெரியபுராணம் பாடியவர். பெரியபுராணம் நூல் எழுதி முடித்ததும் அந்த நூலையும், சேக்கிழாரையும் பட்டத்து யானை மீது அமர்த்தி அவருக்கு கவரி வீசியவன் அநபாயன் என்னும் இரண்டாம் குலோத்துங்க சோழன்.

**நம் திருப்பதியம் பாடுவார்.**

அவன் வேதாரண்யம் கோயிலுக்கு ஓர் ஏற்பாடு செய்திருந்தான்.

திருமறைக்காடு உடையார் முன் திருப்பதியம் பாட நாயகமாக ஒருவரை நியமித்தான்.

அவர் பெயர் திருச்சிற்றம்பலம் உடையான் நாகதேவன் என்பது.

தியாக சமுத்திர பிச்சன் என்ற தீட்சைப் பெயர் கொண்டவர்.

அவரை குலோத்துங்கன் திருப்பதியம் பாட அமர்த்தினான்.

அந்தக் காலத்தில் தேவாரப் பாடல்களை திருப்பதியம் என்றே பெரும் பாலும் குறிப்பது வழக்கம்.

தியாக சமுத்திர பிச்சனும் அவர் வர்க்கத்தாருமே இந்தக் கோயிலில் தேவாரம் ஓதுவதை கண்காணிக்க வேண்டும்.

இவர்களால் நியமனம் செய்யப் பட்டவர்களே திருப்பதியம் பாடலாம். அதாவது தேவாரம் பாடலாம்.

இதற்காக நிலம் கொடுத்தான் அரசன். அதற்கு 'திருப்பதியக் காணி' என்றே பெயர்.

திருப்பதியம் ஓதுவதைக் கண்காணிப்பதுடன் மாஹேச்வரர்களை கண்காணிப்பதும் இவர் வேலை.

குலோத்துங்கன் அளித்த சாஸனத்தில் மற்றும் ஒரு சிறப்பும் உண்டு.

திருப்பதியம் பாடுவதைக் கூறும் போது அரசன் குறிப்பாக ஒன்று சொல்கிறான். அதை "நம் திருப்பதியம் பாடுவார்க்கு" என்று கூறு கிறான்.

இந்தக் கோயிலில் தானே தேவாரம் ஓதிவரவேண்டும் என்று அரசன் முடிவெடுத்திருக்கிறான்.

தாமே செய்ய இயலவில்லை என்றால் பிறர் மூலமாக அதைச் செய்யலாம் என்னும் மரபு உண்டல்லவா? அதுபோல அரசனே வேதாரண்யத்தில் தங்கி நாள்தோறும் தேவாரம் ஓத முடியாதல்லவா?

அதற்காக தியாக சமுத்திர பிச்சனை நியமித்து நம் திருப்பதியம் பாடவும் என ஏற்பாடு செய்து இருக்கிறான்.

என்றென்றும் குலோத்துங்கன் இந்தக் கோயிலில் திருப்பதியம் பாடும் - தேவாரம் பாடும் அடியானாகத் திகழ வேண்டும் என்னும் பக்தி மேலீட்டில் இப்படிப்பட்ட ஏற்பாடு செய்து இருப்பது நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது.

தேவாரம் வேதத்துக்கு சமம் என்று காட்டிய கோயில் அல்லவா வேதாரண்யம்.

எனவே தேவாரத்துக்கு அவ்வளவு சிறப்புக் கொடுத்து இருக்கிறான் குலோத்துங்க சோழன்.

அதனால்தான் குலோத்துங்கனுக்கு 'திருநீற்றுச் சோழன்' என்று ஒரு பெயரும் இருந்தது.

அதைப்பற்றிக் கூறும் கல்வெட்டைப் பாருங்கள். "திருமறைக் காட்டு உடையார் மயேச்சுரகாணியும் இரண்டாவது முதல் நம் திருப்பதியம் பாடுவார்க்கு நாயகம் திருச்சிற்றம்பலமுடையான் நாகதேவனான தியாக சமுத்திர பிச்சனுக்கும் இவன் வர்க்கத்தார்க்கு குடுத்தோம்" என்பது கல்வெட்டின் வாசகம்.

மூன்றாவது குலோத்துங்க சோழனின் கல்வெட்டுகள் பலவும் இந்தக் கோயிலில் இருக்கின்றன. 1180 ஆம் ஆண்டில் இருந்து 1212 ஆம் ஆண்டு வரை இவ்வாறு கொடுக்கப் பட்ட தானங்களை இவை குறிக்கின்றன.

பெரும்பாலானவை நொந்தா விளக்கு எரிக்க நிலம் கொடுத்ததைக் குறிக்கின்றன.

அவற்றை இந்தக் கோயில் காணி உடைய சிவப்பிராமணர்கள் மேற்கொண்டு விளக்குகளை எரிக்க ஏற்பாடு செய்தனர்.

இவற்றில் பல நிலங்களுக்கு 'திரு விளக்குப் புறம்' என்று பெயர்.

விளக்கு எப்படி இருந்தது என்றுகூட ஒரு கல்வெட்டு குறிக்கிறது.

வீரசிங்கபன்மர் என்பவர் 1181 ஆம் ஆண்டில் ஒரு விளக்கு கொடுத்தார். அது பித்தளையினால் செய்யப்பட்டது. "பீடமும், தலையும், தாங்கி மூன்றும் நால் விரல் நீளந்து குத்தும் - ஆக திரு அணுக்கன் திருவிளக்கு - என்று அந்த கல்வெட்டில் குறிக்கப் பட்டு இருக்கிறது.

மூன்றாம் குலோத்துங்க சோழனுக்குப் பிறகு அவன் மகன் மூன்றாம் இராஜராஜ சோழன் ஆட்சிக்கு வந்தான்.

அவனுடைய கல்வெட்டுகள் பலவும் வேதாரண்யம் கோயிலில் இருக்கின்றன.

இவற்றில் 1232 ஆம் ஆண்டில் நடந்த சிறப்பு செய்தி ஒன்று இருக்கிறது.

கடற்கரை ஓரமுள்ள வியாபாரத்தலங்களை பட்டினம் என்று கூறுவர்.

அவ்வாறு இங்கு 'குலோத்துங்க சோழ பட்டினம்' என்று ஒரு பகுதி இருந்தது.

அதிலிருந்த வியாபாரி நெல்வேலியுடையான் பெரியான் செல்கல் ஆண்டான் என்பவர். அவர் திருமறைக்காட்டு மணவாள நாயனாற்கும் நாச்சியாற்கும் சாத்தியருள பல ஆபரணங்கள் செய்து கொடுத்தார்.

மணவாள நாயனார் என்பது உத்ஸவ விக்ரகம்.

இந்தப் பெருமானுக்கு இவர் செய்து கொடுத்தவை திருநெற்றிமாலை, திருஆரம், உதரபந்தனம், திருப்பிறை, இரண்டு பாஹு வளையம், இரண்டு திருக்கைச்சரி, மான், மழு, நாச்சியாருக்கு திரு அபிஷேகம், திருநெற்றிமாலை, திருஆரம், திருமுலைத்தடம் ஆகிய அனைத்தையும் தங்கத்தால் செய்து கொடுத்தார்.

இதற்கு 57 கழஞ்சு பொன் கொடுத்தார். இவ்வணிகலன்களின் பெயர்களும், உத்ஸவ விக்ரகங்களை அலங்கரிக்க இவை கொடுக்கப்பட்டன என்பதும் குறிப்பிடத்தக்கவை.

நாட்டியப்பெண் ஒருத்தி 1237 ஆம் ஆண்டில் இந்தக் கோயிலுக்கு நிலம் கொடுத்து ஒரு விழா சிறப்பாக நடைபெற ஏற்பாடு செய்தாள்.

பெருந்திருவாட்டி கயிலைக்கிழத்தி என்பது அவள் பெயர்.

அவள் திருமறைக்காடுடைய பரமணாரின் சித்திரை வசந்த விழாவுக்கு புஷ்பங்களுக்கும், அபிஷேகத்துக்கும், திருஅமுது செய்யவும், திருவீதி உலாவுக்கும் வேண்டும் செலவுகளுக்காக நிலம் கொடுத்திருக்கிறாள்.

அவள் இந்த நிலத்தை ராஜேந்திர சிங்கபுரத்து நகரத்தாரிடம் விலைக்கு வாங்கி கோயிலுக்கு கொடுத்திருக்கிறாள்.

அவள் கோயிலில் நாட்டியம் ஆடுபவள்.

"எங்களூர் சாந்திக்கூத்தி" என்று அவளைக் கல்வெட்டுக் கூறுகிறது. சாந்திக்கூத்து என்பதைப் பற்றி தமிழ் இலக்கியங்கள் மிகவும் விரிவாக கூறுகின்றன.

மூன்றாவது இராஜராஜ சோழன் காலத்தில் நடந்த ஒரு முக்கியமான நிகழ்ச்சி இந்தக் கோயிலைப் பெரிதும் பாதித்தது.

## திருவாயில் வழக்கம்

வேதாரண்யேச்வரர் கோயிலில் பல சிறப்புகள் உண்டு.

தேவாரத் திருப்பதிகங்கள் வேதங்கள், திருமறைகள், வேதத்துக்கு சமமானவை என உலகுக்குக் காட்ட கதவம் திறக்கப்பாடியதும், கதவம் மூடப்பாடியதுமாக நடந்த அத்புதம் இங்குதானே நடந்தது.

சம்பந்தமூர்த்தியும் அப்பர் பெருமானும் இங்கு எழுந்தருளி இவ்வற்புதம் நடத்திய சிறப்பை சேக்கிழார் தமது பெரியபுராணத்தில்,

*"அது கண்டு உடைய பிள்ளையார் தாமும் ஆண்ட அரசும் மகிழ்ந்து*
*இதுநம் பெருமான் அருள் செய்யப் பெற்றோம் என்று அங்கு இறைஞ்சிய பின்*
*பதிகம் நிரம்ப பிள்ளையார் பாடித் தொழுது பணிவுற்றார்*
*எதிர் பொற்றிருவாயிலின் வழக்கம் என்றும் நிகழ்ச்சி எய்தியதால்"*

என்று அந்த அத்புத நிகழ்ச்சி ''திருவாயில் வழக்கம்'' என திருமறைக்காடு கோயிலில் பின்பற்றப்பட்டு வந்தது என ஒரு சரித்திரக் குறிப்பையும் கொடுத்துள்ளார்.

அந்த அளவுக்கு வரலாற்றில் ஒன்றியவர் சேக்கிழார் பெருமான்.

அவர் நூல் இயற்றப்பட்ட பின்னர் பல்வேறு கோயில்களிலும் ஒரு பெரும் சைவ மறுமலர்ச்சியையே அந்நூல் தோற்றுவித்தது.

அந்த நூல் தோன்றுவதற்கு வழி நூலாகத் திகழ்ந்தது நம்பியாண்டார் நம்பி இயற்றிய "திருத்தொண்டர் திருவந்தாதி" ஆகும்.

அவருக்கு திருநரையூர் பொல்லாப் பிள்ளையாரின் அருள் கிட்டியது.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் இயற்றிய திருத்தொண்டத் தொகையை அடிப்படையாகக் கொண்டு நம்பி அந்த அந்தாதியை இயற்றினார்.

நம்பி முதலாம் இராஜராஜ சோழனின் சமகாலத்தவர். நம்பியாண்டார் வேண்ட தில்லையில் திருப்பதிகம் கண்டு எடுத்தவர். இதெல்லாம் சரித்திர நிகழ்ச்சிகள்.

ராஜராஜ சோழன் சுந்தரமூர்த்தியினுடைய வரலாற்றையே ஓவியமாக தஞ்சைப் பெருங் கோயிலில் வரைந்து வைத்துள்ளான்.

இரண்டாவது இராஜராஜ சோழன் தான் கட்டிய தாராசுரம் (இராஜராஜபுரம்) கோயிலில் 63 நாயன்மார்களின் வரலாற்று நிகழ்ச்சிகளையும் சிற்பமாகவே வடித்துள்ளான்.

வேதாரண்யர் கோயிலில் 63 நாயன்மார்களின் வரலாறும், பெரியபுராணத்தின் அடிப்படையில் ஓவியங்களாக 250 ஆண்டுகளுக்கும் முன்பு தீட்டப்பட்டுள்ளன.

கோயிலில் உள் பிராகாரச் சுவரில் இவை தொடராக சித்தரிக்கப்பட்டுள்ளன.

தஞ்சையை மராட்டிய மன்னர்கள் ஆண்டபோது இவை தீட்டப்பட்டுள்ளன.

இந்த ஓவியங்களில் வரும் அரசர்களும் ஏனையோரும் அணிந்துள்ள ஆடைகளும், தலை அணிகளும் இதைத் தெளிவாகக் காட்டுகின்றன. 1700ஆம் ஆண்டிலிருந்து 1750 ஆம் ஆண்டுக்குள் இந்த ஓவியங்கள் தீட்டப் பட்டு இருக்க வேண்டும்.

இந்த சுவர் ஓவியத்தில் நம்பியாண்டார் நம்பி தொடங்கி, சேக்கிழார் படமும் காட்டிப் பின்னர் பெரியபுராணம் முழுவதும் வரிசையாகக் காட்டப்பட்டுள்ளது சிறப்பாகும்.

முதலில் நம்பி, பிறகு சேக்கிழார். அதன்பின்னர் சுந்தரரைத் தடுத்தாட்கொண்ட புராணம், தில்லைவாழ் அந்தணர், திருநீலகண்டர் என்று அடியார் வரலாறு தொடர்ந்து சித்தரிக்கப்பட்டு இருக்கிறது.

தில்லைவாழ் அந்தணர் படம் முதல் 1,2,3 என்று எண் இடப்பட்டு ஒவ்வொரு நாயனார் வரலாற்றையும் ஒரு படத்தில் காட்டி இருக்கிறார்கள்.

இவற்றை பார்க்கும்போதே பெரியபுராணம் முழுவதையும் சேக்கிழார் அமைத்துள்ளபடியே ஓவியமாகத் தீட்டியுள்ளனர் என்பது தெளிவாகும்.

இந்தப் பெரியபுராண ஓவியத் தொடர் மேலும் கீழுமாக இரண்டு வரிசைகளில் வரையப்பட்டுள்ளது.

அத்துடன் படங்களின் மேலும் கீழும் அந்தந்த காட்சிகளைப் பற்றிய விளக்கம் தமிழில் விரிவாக எழுதப்பட்டுள்ளது.

சென்ற நூற்றாண்டில் பெரியபுராணம் உரைநடை அச்சில் வெளியிடப்பட்டபோது பல நாயன்மார்களின் வரலாறு சித்திரமாக எழுதப்பட்டு அச்சிடப்பட்டது.

இந்த நூற்றாண்டில் அருட்செல்வர் பொள்ளாச்சி வள்ளல் நா.மகாலிங்கம் அவர்களின் சித்திரப் பெரியபுராணம் வண்ணப்படங்களுடன் வெளியிடப்பட்டுள்ளது.

## பெரியபுராண ஓவியம்

இதுபோல் 250 ஆண்டுகளுக்கு முன்பு வரையப்பட்ட வண்ண ஓவியப் பெரியபுராணம் என்றே வேதாரண்யம் ஓவியங்களைக் கூறலாம். அந்த ஓவியங்களில் எழுதப்பட்டிருக்கும் வண்ணங்களை அச்சிட்டால் அது ஒரு பெரும் புத்தமாகவே அமையும்.

துரதிருஷ்டவசமாக வசனம் எழுதப்பட்டுள்ள பல இடங்களில் எழுத்துகள் உதிர்ந்துவிட்டன. பல ஓவியங்களும் இங்கும் அங்குமாக மறைந்துள்ளன.

அக்காலத்திய பெரியபுராண வசன நூல் ஒன்றே இங்கு வரையப்பட்டிருந்தது.

அந்த நூலின் பெரும் பகுதியை இழந்து விட்டோம். இருப்பதையாவது மிகுந்த கவனத்துடன் காத்தல் வேண்டும்!

எஞ்சி இருக்கும் இந்த அரும் பெரியபுராண நூலைக் காண்போம்.

முதல் படத்தில், நான்கு கரங்களுடன் ஐங்கரனாகிய பிள்ளையார் உட்கார்ந்திருக்கிறார். அவர் எதிரில் ஓர் முக்காலியில் பழங்களும் கொழுக்கட்டைகளும் வைக்கப்பட்டுள்ளன. பிள்ளையார் அதை எடுத்து சாப்பிட யத்தனமாகிறார். விநாயகருக்கு எதிரில் நம்பியாண்டார் நம்பி குடுமியுடன் தலையிலும் மார்பிலும் கையிலும் ருத்ராக்ஷம் தரித்து இடுப்பில் மட்டும் வேட்டி கட்டிக் கொண்டு காணப்படுகிறார்.

பிள்ளையாரின் மீது "பொல்லாப் பிள்ளையார்" என்ற பெயரும் நம்பியின் மீது 'நம்பியாண்டார்' என்றும் எழுதி இருக்கிறது.

இந்தக் காட்சியிலிருந்து நம்பியாண்டார் நம்பி பொல்லாப்பிள்ளை யாரை வேண்டி திருமுறை கண்ட காட்சி தொடங்குகிறது.

அடுத்த காட்சி மிகவும் இன்றியமையாதது. அது சேக்கிழார் பெரியபுராணம் பாடிய காட்சி. சேக்கிழார் பெரியபுராணம் இயற்றியபோது பல நிகழ்ச்சிகள் நடைபெற்று இருக்கின்றன.

இவற்றில் எதைப் படத்தில் சித்தரிக்கலாம்? என்று இந்த ஓவியத்தை இயற்றியவர் சிந்தித்து இருக்கிறார்.



வீரபத்திரர் - ஓவியம் - நாகப்பட்டினம்



சேக்கிழார் - ஓவியம் - நாகப்பட்டினம்

சேக்கிழார் பெரியபுராணம் இயற்றி முடித்ததும் அப்போது இருந்த அரசன் சேக்கிழாரை எவ்வாறு போற்றினானோ அதையே சித்தரிக்கலாம் என முடிவு எடுத்து இருக்கிறார். அதை உமாபதி சிவம் "திருத்தொண்டர் புராண வரலாறு" என்ற நூலில் குறிப்பிட்டு இருப்பது அவர் கண்முன் வருகிறது.

அனபாயசோழன் சேக்கிழார் பெருமானை பட்டத்து யானைமீது ஏற்றித் தானும் அவர் பின் அமர்ந்து கவரி வீசினான்.

பெரும் விழாவாக வீதி உலா எடுத்தான். குடை, கண்ணாடி, ஆலத்தி முதலிய எல்லாம் அப்போது எடுத்துச் செல்லப்பட்டன என்று உமாபதி சிவம் கூறியிருக்கிறார்.

ஓவியம் வரைந்தவருக்கு அந்த காட்சி அப்படியே கண்முன் வருகிறது. அந்தக் காட்சியையே படத்தில் வரைந்திருக்கிறார்.

படத்தில் சேக்கிழார் யானை மீது வருகிறார். அவர் பின் அரசன் உட்கார்ந்து இருகரத்தாலும் சாமரம் வீசி வருகிறான்.

யானையின் முன் குடை கொடி முதலியவற்றை ஏந்தி செல்கின்றனர். யானையின் பின்னால் தில்லைவாழ் அந்தணர்களும் வீரர்களும் வருகின்றனர்.

யானைமீது அமர்ந்து இருக்கும் அரசன் நீண்ட பைஜாமா, அங்கி அணிந்து (மராட்டியர் கால அணி) மகுடம் புனைந்து வருகிறான்.

அந்த ஓவியத்தின் மீது "அனபாய சோழர்" என்று எழுதி இருக்கிறது.

சேக்கிழார் குடுமியுடன் காட்சி தருகிறார். கழுத்தில் ருத்ராட்ச மாலை தரித்து இருக்கிறார். கையில் ஒரு பெரும் ஓலைக்கட்டு ஏந்தி சிவனடியாராகக் காட்சியளிக்கிறார்.

அவர் படத்தின் மேல் "சேக்கிழார் சுவாமியள்" என்று எழுதப்பட்டு இருக்கிறது.

அந்தக் காலத்தமிழ். அவர் கையில் உள்ள ஓலைச்சுவடியில் "மகோத்ஸவம் படுற பாங்கு" என்று எழுதப்பட்டு இருக்கிறது.

பெரியபுராணம் எழுதப்பட்டவுடன் அதைப் பெரிய உத்ஸவமாகக் கொண்டாடப்பட்ட காட்சி என்று இது விளக்குகிறது.

இதை அடுத்துள்ள காட்சி சுந்தரரைத் தடுத்தாட் கொண்ட காட்சி.

கொத்தோடு வாழை மரங்களும் மலர் தோரணங்களுடன், இரண்டு அந்தணர்களும் காணப்படுகின்றன.

"பெண் வீட்டுக்காரர்" "மாப்பிள்ளை வீட்டுக்காரர்" என்று எழுதப்பட்டுள்ளது.

இவர்களுக்கு அப்பால் "சிவபெருமான்" கையில் தடியுடன் குடுமிபுனைந்து ருத்ராட்ச மாலை தரித்து, ஒல்லியாக உயரமாக காட்சியளிக்கிறார்.



சுந்தரர் - ஓவியம் - நாகப்பட்டினம்

பெரியபுராணத்தில் கூறியபடி குடை இல்லை. மேல் உத்தரீயம் இல்லை. இரண்டு கைகளிலும் ஓலைச் சுவடி இருக்கிறது.

ஒன்றின் மேல் "அசல்" என்றும் மற்றதின் மேல் "நகல்" என்றும் எழுதப்பட்டு இருக்கிறது.

பிராமணராக வந்துள்ள சிவன் படத்தின் மேல் "சிவபெருமான்" என்று எழுதப்பட்டு இருக்கிறது.

அவருக்கு முன் சுந்தரர் காட்சி தருகிறார்.

நீண்ட கவுன் - பைஜாமா தரித்து, கொண்டை பூண்டு நிற்கிறார். "சுந்தர மூர்த்தி சுவாமிகள்" என்று விளக்கம் எழுதப்பட்டுள்ளது.

அவருக்குப் பின்னால் கல்யாணப் பெண்ணும் அவள் தாயும் நிற்கின்றனர்.

அங்கு "கல்யாணம் செய்யப் போற பெண்" என்று எழுதப்பட்டு இருக்கிறது.

தடுத்தாட் கொண்ட காட்சிக்குப் பின்னர் "தில்லை வாழ் அந்தணர்" என்று தொடர்கிறது.

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருத்தொண்டத் தொகை வரிசையிலேயே சேக்கிழார் அடியார்களைப் பாடியிருக்கிறார்.

அதே வரிசைப்படி ஓவியமும் வரையப்பட்டுள்ளது.

எல்லாக் கட்சிகளைப் பற்றியும் எழுத முடியாது. ஒன்று இரண்டு மட்டும் சிறப்புக் கருதி இங்கு எழுதுகிறேன்.

அப்பர் பெருமானின் வரலாற்றைக் கூறும்போது ஒரு சிறப்பைக் காண முடிகிறது.

திலகவதியார் அப்பருக்கு திருநீறு அளிப்பதாகக் காட்சி தீட்டப்பட்டுள்ளது.

திலகவதியாரால்தான் அப்பர் சைவத்துக்கு மீண்டார். அதனால் தேவாரப் பதிகங்கள் கிடைத்தன என்ற செய்தியை இது வலியுறுத்துவதாகக் காணப்படுகிறது.

சைவத் தொண்டில் திலகவதியார் ஒரு பெரும் நிலை வகித்துள்ளார் என்பதை இந்த 18ஆம் நூற்றாண்டு ஓவியம் சுட்டிக்காட்டுகிறது.

சம்பந்தரின் வரலாற்றில் ஞானப்பால் உண்டு. "தோடுடைய செவியன்" பாடிய காட்சி இடம் பெற்று இருக்கிறது.

இவ்வாறு மேல் பத்தியில் 29 காட்சிகளும், கீழ் பத்தியில் பிற காட்சிகளும் இடம் பெற்றுள்ளன.

இசைஞானியாரையும் சடையனாரையும் படத்தில் வரைந்துள்ளார்.

தொகையடியார்கள் அனைவரையும் ஒரே காட்சியில் காட்டி அடியார் புராணம் முடிகிறது.

இதன்பின் ஒரு காட்சியில் மூவர் காணப்படுகின்றனர். ஒவ்வொருவர் படத்தின் மேலும் பெயர் "பாணாசுரன்" "இராவணாசுரன்" "சண்டிகேச்வரன்" என்று எழுதப்பட்டு இருக்கிறது.

பாணாசுரனுக்கும் இராவணாசுரனுக்கும் இங்கு என்ன வேலை என்று நமக்குத் தோன்றும்.

பாணாசுரனும், இராவணனும் சண்டிகேச்வரரும் சிறந்த சிவனடியார்கள் என்பது புராண வரலாறு.

எனவே சிவபூஜை முடிந்ததும் இவர்களை நினைந்து கொள்ளும் மரபு உண்டு.

*"பாண ராவண சண்டீச*
*நந்தீ பிருங்கீ ரிடாதய:*
*மகாதேவ ப்ரசாதோயம்*
*சர்வே க்ருண்ஹந்து சாம்பவா."*

என்று ஸ்லோகமாகச் சொல்வார்கள். ஆதலால் இங்கு சிவனடியார்களாக இம்மூவரையும் சித்தரித்துக் காட்டி உள்ளனர்.

இதற்கு அடுத்த படத்திலும் ஒரு சிறந்த காட்சி காணப்படுகிறது.

சம்பந்தர், சுந்தரர், அப்பர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வர் உருவங்களும் அதில் இருக்கின்றன.

சுந்தரரின் இருபுறமும் பரவை, சங்கிலி ஆகிய இருவரும் உள்ளனர்.

இவர்களனைவருடைய உருவங்களின் மேலும் அவரவர்கள் பெயர் எழுதப்பட்டுள்ளன.

தொடக்கத்தில் "சமயாசார்ய சுவாமிகள்" என்று எழுதப்பட்டு இருக்கிறது.

"இவர்கள் நால்வரும் தமிழ்வேதம் பாடிய சமயசார்யர்கள்" என்றும் எழுதப்பட்டு இருப்பதைச் சிறப்பாகக் குறித்தல் வேண்டும்.

வேதாரண்யம் ஆகையினாலே "தமிழ் வேதம்" பாடிய பெரியோர்களின் வரலாறும் ஓவியமும் இடம் பெற்றிருப்பது மிகவும் பொருத்தமாக இருக்கிறது.

## வேதாரண்யப் புராணம்

*"கார்பூத்த களத்து விடப்பாரொளி*
*வெண்தோட்டு ஒளியில் கலந்து காமர்*
*ஏர்பூத்த பசுங்கொடியோடு அமர்ந்து*
*உயிர்கட்கு இன்பம் முத்தி எளிதினில் ஈந்து*
*சீர்பூத்தமறைச்சிரத்தில் தெளிவாகிச்*
*சிதாநந்தத் தேறலாகும்*
*பார்பூத்த வேதவனப் பரமனடிக்*
*கடிப்பதுமம் பரசி வாழ்வாம்"*

என்பது வேதவனப் பரமனை வாழ்த்தும் கடவுள் வாழ்த்துப் பாடல். 'வேதாரண்ய புராணம்' என்றும் இப்புண்ணியப்பதியை போற்றும் புராணத்தில் உள்ளது.

ஆம்! நாம் வணங்கும் திருப்பதிகள் அனைத்திற்கும் அந்தந்தத் தலத்தின் மகிமையைக் குறிக்கும் தலபுராணங்களும் உண்டல்லவா?

அதுபோல வேதாரண்யப் புராணம் என ஒரு புராணம் உண்டு.

இந்த அரிய நூல் 1898 ஆம் ஆண்டிலேயே அச்சிடப்பட்டுள்ளது. படிக்க வேண்டும் என்று தேடினாலும் கிடைக்காது. இதை அரும்பாடுபட்டு வேதாரண்யம் அப்பாக்குட்டி அவர்கள் 'அன்போடு வரவழைத்துக் கொடுத்தார்கள்.

நூலைப் பார்த்தவுடன் அதன் தொன்மை தெள்ளெனப் புலப்பட்டது.

நமக்குக் கிடைத்துள்ள மிகவும் தொன்மையான தலபுராணங்களில் இது ஒன்று என்று இதன் அமைப்பே தெரிவிக்கிறது.

'அகோரதேவர்' என்ற பெரியவரால் இயற்றப்பட்டது. இவர் எந்தக் காலத்தைச் சேர்ந்தவர் என்பது தெளிவாகத் தெரியவில்லை. நான்கு சம்ஸ்கிருத புராணங்களிலிருந்து தொகுத்து இதை தமிழில் எழுதியதாகத் தெரிகிறது.

ஸ்காந்த புராணம் (சனற்குமார சம்ஹிதை) பிரம்ம வைவர்த புராணம், பிரமாண்ட புராணம், காளிகாண்டம் என நான்கு புராணங்களை ஆதியாகக் கொண்டது இப்புராணம் என்று அவரே கூறுகிறார்.

*"துணிதரு புராணம் காந்தம் பிரமகைவர்த்தம் தூயதாய்*
*அணி பிரும்மாண்டம் காளி காண்டம் நான்கு ஆதியாமே"*

என்பது அவர் குறிப்பு.

அகோரதேவர் சம்ஸ்கிருத மொழியிலும் தமிழிலும் சிறந்த புலமை பெற்றவர் என்பது

*"துணிவரும் ஆரியம் முற்றும் தோய்ந்து உளம்,*
*தணிவறத் தமிழ்க்கடல் அளக்கும் தன்மையா*
*மணிவளர் இன்னொலி மறைசைத் தீந்தமிழ்*
*அணிபெற அருளினன் அகோரதேவனே"*

என்று அவரைப் பற்றி குறிப்பிடப்பட்டிருக்கிறது.

இவர் சிறந்த தமிழ்ப்புலவர் என்பதை இவரது பாடலில் இருந்தே அறியலாம். இப்பெரியார் இயற்றியுள்ள தலபுராணத்தை பல ஏட்டுப் பிரதிகளைப் பரிசோதித்து குறிப்புரையுடன் ஆக்கியுள்ளார் யாழ்பாணத்து உரையாசிரியர் க.வேள்பிள்ளை.

**வேள்பிள்ளை**

இவரைப் பற்றியும் நாம் அறிந்து கொள்வது அவசியம். அக்காலத்து யாழ்பாணம் தமிழ் இலக்கியத்துக்கும் இலக்கணத்துக்கும், சமயத்துக்கும் ஆற்றியுள்ள தொண்டு ஒப்பரும் தொண்டு எனலாம்.

யாழ்பாணத்து 'மட்டவில்' என்ற பதியில் கணபதிவேள் பிள்ளை என்பவருக்கு பிறந்தவர் வேள்பிள்ளை.

இவர் மூன்று சிறந்த தமிழாசிரியர்களிடம் கல்வி கற்று இருக்கிறார். கார்த்திகேயப் புலவர், பொன்னம்பலம் பிள்ளை என்பவர் இருவர். மூன்றாவது ஆசிரியர் ஆறுமுக நாவலர். ஆறுமுக நாவலரிடம் கற்றதால் இவர் பல சுவடிகளையும் ஒப்பு நோக்கி திருந்திய பதிப்புகள் கொண்டு வருவதில் வல்லமை பெற்றிருந்தார்.

தமிழ் இலக்கணம், இலக்கியம், ஞானநூல்கள் ஆகியவற்றில் சிறந்த தேர்ச்சி பெற்றிருந்தார்.

வேதாரண்யப் புராணத்தை ஏறக்குறைய நூறு ஆண்டுகளுக்கும் முன்னர் அதாவது 1898 ஆம் ஆண்டிலேயே வெளியிட்டு இருக்கிறார்.

அக்காலத்தில் தமிழில் ஆழ்ந்த புலமைபெற எந்தெந்த நூல்களைப் படித்தனர் என்று இவர் படித்த நூல்களில் இருந்தே அறியலாம்.

தமிழ் இலக்கணங்களில் அகத்தியம், தொல்காப்பியம், அவிநயம் ஆகிய நூல்களை கற்றிருக்கிறார்.

அகத்தியமும், அவிநயமும், இக்காலத்தில் யார் படிக்கிறார்கள்! அந்நூல்களாவது இப்போது கிடைக்குமா? நூறு ஆண்டுகளுக்கு முன்னர் வரை இவற்றைப் படித்திருக்கிறார்கள். அதுவும் யாழ்பாணத்தில் படித்திருக்கிறார்கள்.

வேள்பிள்ளை இந்த இலக்கணங்களோடு திருக்குறளை சிறக்கக் கற்றிருக்கிறார். அத்துடன் பல தமிழ் இலக்கியங்களையும் கற்றிருக்கிறார்.

கல்வியில் கரை கண்டவராக இருந்த போதிலும் அடக்கத்தை அணிகலனாகக் கொண்டவர். பல தமிழ் நூல்களுக்கு உரை எழுதி இருக்கிறார். இவரை "உரைகாரர்" வேள்பிள்ளை என்றே அழைத்தனர்.

இவர் எழுதிய உரைகளில் வாதவூரார் புராணத்துக்கும், புலியூர் அந்தாதிக்கும் எழுதிய உரைகள் சிறந்தவை.

இவர் வேதாரண்ய புராணத்தை பதிப்பித்தபோது பல தமிழ்ச் சான்றோர்கள் புகழ்ந்து சிறப்பித்திருக்கிறார்கள். திருவாவடுதுறை ஆதீன வித்வான் சேற்றூர் சுப்ரமண்யக் கவிராயர், பொன்னு ஓதுவா மூர்த்திகள், மாயூரம் கிருஷ்ணானந்த யோகிகள், யாழ்பாணத்துச் சிவபிரகாசப் பண்டிதர், பூவை கல்யாண சுந்தர முதலியார், மயிலை வித்வான் சண்முகம் பிள்ளை ஆகிய சான்றோர்கள் வேள்பிள்ளை வேதாரண்ய புராணம் பதிப்பித்ததைப் புகழ்ந்து பாடி இருக்கிறார்கள்.

பூவைக் கல்யாணசுந்தர முதலியார் பாடி இருப்பதைக் கேளுங்கள்.

*"துன்னிய நம் சிவபெருமான் அருள்சீர்*
*எஞ்ஞான்றும் சொல்லும் நாவான்*
*மன்னிரும் சுத்தாத்வித சித்தாந்த*
*சாத்திரங்கள் வழங்கச் செய்வோன்*
*இன்னல்அரும் பொறை கருணை கொடை ஒழுக்கம்*
*வாய்மை முதலேய்ந்தோன் யாரும்*
*பன்னரும் சீரெடுத்துரைக்கும் பெரும் புகழ்கொள்*
*வேற்பிள்ளைப் பாவலோனே"*

என்று பாடியுள்ளார். வேள்பிள்ளை சைவத்தில் "சுத்தாத்வித சித்தாந்த" மார்க்கத்தை பின்பற்றியவர்.

மயிலை வித்வான் சண்முகம் பிள்ளை வேள்பிள்ளையைப் பற்றி கூறியிருப்பதைப் பாருங்கள்.

*"அகத்தியம் தொல்காப்பியமே அவிநயமே*
*ஆகிய பல்லிலக்கணங்கள்*
*மகத்துவம்சால் குறளொடும் நம் அரிந்தமன்*
*சீர்கெழுமிய மாண்புடைநூல் மற்று*
*சகத்து இயல் பல் இலக்கியங்கள் கசடறக்*
*கற்று அடக்கம் அணிகலனாத் தாங்கிச்*
*சுகத்து இயலும் அனுபூதி தோன்றலாய் அரன்*
*அடிக்கு அன்புடை தூயோன்"*

என்று பாடி இருப்பது இவரது உயர்ந்த குணத்தைக் காட்டுகிறது.

நூறு ஆண்டுகளுக்கு முன்னர் தமிழுக்குத் தொண்டு செய்த பெரியார்கள் எப்படித் திகழந்திருக்கிறார்கள் என்பதற்கு வேள்பிள்ளை ஒரு சான்று.

சாமிநாத தேசிகர் இட்ட அருளாணைப்படி வேள்பிள்ளை இந்நூலை பதிப்பித்துள்ளார். அ.அப்பாக்குட்டியா பிள்ளை இந்நூலை வெளியிட்டவர். இது அச்சு நூல் வரலாறு.

வேதாரண்யப் புராணத்தில் 77 சருக்கங்கள் உள்ளன. ஏனைய புராணங்களைக் காட்டிலும் இப்புராணத்தில் ஒரு சிறப்பு உண்டு.

இப்புராணம் படிப்பதால் என்ன பயன் கிடைக்கும்?

மழலைச் சொல்கூறும் குழந்தைகளும், பெண்களும் நல்லன பெற்று இவ்வுலகில் சிறந்து வாழ்வார்கள் என்று கூறி இருப்பதைப் பார்க்கும் போது பெருமிதம் அடையும்படி இருக்கிறது.

இப்புராணத்தில் பல சருக்கங்களில், தேவர், தவமுனிவோர், ஆய சான்றோர்கள் பண்டு வேதாரண்ய பதியில் தவம் மேற்கொண்டு வீடுபேறு பெற்ற கதைகளை கூறுகின்றன.

அக்கால மக்களின் மனச்சாந்திக்கு, அவர்களது நம்பிக்கைக்கு அவர்களது வழிபாட்டுக்கு இவை பெரிதும் துணைபுரிந்தவை என்பதில் ஐயமில்லை.

வேதாரண்யம் கோயிலினுள்ளே பல சிற்றாலயங்கள், பல மண்டபங்கள் உள்ளன. பல தீர்த்தங்கள் உள்ளன. இவை ஒவ்வொன்றைப் பற்றி அறிந்து கொள்ளவும் இப்புராணம் வகை செய்கிறது.

வேதாரண்யம் புராண நூல் தொடக்கத்தில் தவமுனிவர்கள் எல்லாம் சூதபௌராணிகரிடம் சென்று அரனுறையும் தூயபதிகளைப் பற்றி கேட்கிறார்கள். அவர்களுக்கு சூதன் கூறியதாகப் புராணம் அமைந்திருக்கிறது.

சிவபெருமான் உறையும் பதிகளை இந்நூல் முதலில் தொகுத்துக் கூறுகிறது.

கங்கைத்துவாரத்தில் தொடங்கி குமரி வரை உள்ள சிறந்த பதிகளை இந்நூல் பட்டியலிட்டு கொடுக்கிறது.

கங்கைதுவாரம், காசி, கயை, பிரயாகை மூன்று புட்கரிணி, நைமி சாரண்யம், பதரிகாச்ரமம், குருக்ஷேத்ரம், சோமநாதம், ஓங்காரம், உஜ்ஜியினீ மாகாளம், கேதாரம், ஸ்ரீபர்வதம், என வடதிசை உள்ள க்ஷேத்திரங்கள் குறிக்கப்படுகின்றன.

தமிழ் நாட்டில் உள்ள தலங்கள் 45க்கும் மேற்பட்டவை இடம் பெற்றுள்ளன.

காளத்தி, காஞ்சி, அண்ணாமலை, ராமேச்சுரம். மாயூரம். திருவையாறு, மதுரை முதலிய புகழ்பெற்ற தலங்களும் பிற இடங்களும் குறிக்கப்பட்டுள்ளன. இவற்றில் தென்காசியும், சுசீந்திரமும், குமரியும் இடம் பெற்றுள்ளது குறித்தற்கு உரியன.

இவ்வளவு புண்ணியத் தலங்களும் போற்றத் தகுந்தவை.

இருந்தாலும் மிக எளிமையாக வீடுபேறு அளிக்கக்கூடியது வேதாரண்யம் என்ற புண்ணியத்தலமாகும் என்று வேதாரண்யத்தின் பெருமை கூறப்படுகிறது.

*"திரைவிரிய மணியின் நிரைச்சிதறு*
*திருக்காவிரியின் தென்பால் வன்பார்க்*
*கரை பரியும் கிழக்கு விரிகடல் அருகு*
*மடல் அவிழும் கழிப்பூங்கைதை*
*விரை சொரிய வேதவனம் என்னும்*
*பெயரால் உலகனைத்தும் விளக்கி ஞானப்*
*பரை உருவாய் நிரை செரியும் பவக்கானம்*
*சுடுதரவப் படிவம் ஆமால்".*

**வேதநதி**

வேதம் என்பது இந்திய வரலாற்றின் சமயத்தில், மக்களது வாழ்வில் ஒன்றி பெருக்கெடுத்து ஓடும் பேராறாக விளங்குவது.

அந்த 'வேதமாகிய மாநதி' தான் வேதாரண்யத்தில் இருக்கும் புண்ணிய தீர்த்தம்.

நம் நாட்டில் எத்தனையோ புண்ணிய நதித்துறைகள் இருக்கின்றன.

இவை அனைத்தும் ஒருங்கே திரண்டு உருக் கொண்ட புண்ணிய தீர்த்தம்தான் வேதாரண்யத்தில் இருப்பது.

அதிலே ஒரு தடவை முறையாக படிந்து எழுந்து, வேதத்தின் தலைவனாகிய நிர்மலனாகிய சிவபெருமானை வணங்கினால்...

"யோகம், ஞானம், சித்தி, பரகதி என்றெல்லாம் சொல்கிறார்களல்லவா... அவையனைத்தும் ஒருங்கே கிட்டும்" என்று வேதாரண்யத்தின் சிறப்பைப் பாடுகிறார் வேதாரண்யப் புராணம் பாடிய அகோரதேவர்.

*'வேத மாநதியே ஆதிமறைவனம்*
*மேய தீர்த்தம்*
*நீதியால் படிந்து நிமலனைப்*
*பணிந்து போற்றி*
*பாதகம் அனைத்தும்நீங்கி*
*பரகதி யோக ஞானம்*
*ஏதமில் சித்தி செல்வம்*
*பெற்றவர் எண்ணிலாதார்.'*

இப்படி புகழப்படும் வேதாரண்யத்தில் தொண்ணூற்றாறு தீர்த்தங்கள் உள்ளதாக இந்த நூல் கூறுகிறது.

வேதாரண்யத்தில் இருக்கும் குளங்கள், கேணிகள், பெருங்கிணறுகள்... இவை அனைத்தும் தீர்த்தங்கள்!

அவற்றின் புராணப் பெயர்கள் என்ன?

கோயிலுக்கு எந்த திசையில் அவை இருக்கின்றன? என்ற விரிவான செய்திகளை எல்லாம் ஓர் அத்தியாயமாகவே இந்த நூல் கூறுகிறது.

இதற்கு பதிப்பும், குறிப்பும் எழுதிய வேள்பிள்ளை வேதாரண்யம் பற்றிய வியக்கத்தகும் செய்திகளையும் குறித்து இருக்கிறார்.

வேதாரண்யத்தில் தேவசபையின் மேற்கு திக்கில் 'பரமானந்த கூவம்' என்று ஒரு தீர்த்தம் இருந்தது.

அதில் மூழ்கியவர்கள் 'விமல ஞானம்' பெறுவர் என்று வேதாரண்யப் புராணம் கூறுகிறது.

இப்பொழுது அந்தக் கூவம் இல்லை.

இந்தப் பாடலின் அடிக்குறிப்பில் 'இத்தீர்த்தம் பிற்காலத்தில் முதல் பிராகாரம் பெரிதாக்கப்பட்டபோது தூர்க்கப்பட்டது. அந்தர்கிருக யாத்திரை செய்பவர்கள் அந்த இடத்திற்கு அருகில் உள்ள ஒரு சிறு குழியில் தண்ணீர் விட்டு அத்தீர்த்த பாவனை செய்து சிரசில் புரோக்ஷணை செய்து கொண்டு அப்பால் செல்வர்' என்று அதன் வரலாற்றைக் குறிக்கிறார்.

இதே போல 'அர்த்த திரிகோடி' என்று ஒரு தீர்த்தம் உண்டு.

இவ்வுலகில் மூன்றரைக் கோடி தீர்த்தங்கள் இருந்தன. இம்மூன்றரைக் கோடி தீர்த்தங்களும் ஊழிக் காலத்தில் சிவ பெருமானிடம் லயமடைகின்றன. அப்பொழுது அவையனைத்தும் இங்குள்ள ஒரு கூவத்தில் சிவபெருமானின் ஆணையினால் ஒருங்கே திரண்டு இருந்ததால் இந்த தீர்த்தத்துக்கு, 'அர்த்த திரிகோடி' (அர்த்தம் - அரை; திரிகோடி - மூன்று கோடி) என்று பெயர்.

இதுதான் சுவாமி திருமஞ்சனக் கூவம்.

இதுபோல அம்மன் சந்நிதியில் 'அமுத தீர்த்தம்' என்ற அம்மனின் திருமஞ்சனக் கூவம் உள்ளது. இதற்கு 'சுதா கூவம்' என்ற பெயரும் இருந்தது என இந்நூல் தெரிவிக்கிறது.

வேதாரண்யேசுவரர் கோயிலுக்குக் கிழக்கில் 'அகத்திய தீர்த்தம்' என ஒன்று உள்ளது.

அதற்குத் தென்கிழக்கில் உள்ள தீர்த்தத்துக்கு 'நள தீர்த்தம்' என்று பெயர்.

அதுபோல 'அசுவினி தீர்த்தம்' என்று ஒரு குளத்தின் பெயரை இந்நூல் குறிக்கிறது.

அசுவினி தேவதைகள் இருவர்.

அவர்களை சங்க நூல்கள் 'தாமா இருவர்' என்று குறிக்கின்றன.

தாவுகின்ற குதிரை வடிவம் உள்ள இரு தேவதைகள் என்பது இதன் பொருள்.

அந்தத் தேவதைகள் மருத்துவர்கள்.

தமிழ்நாட்டுக் கோயில்களில் அசுவினி தேவதைகளின் வழிபாடு உண்டு.

அவர்கள் பெயரால் 'அசுவினி தீர்த்தம்' என்று ஒரு தீர்த்தம் வேதாரண்யத்தில் இருந்திருக்கிறது.

அதைப் பற்றிய குறிப்பையும் பதிப்பாசிரியர் கொடுத்துள்ளார்.

"அசுவினி தீர்த்தங்களை இப்போது இரட்டைக் குளம் என்று வழங்குகின்றனர். இது ஒரு பெரிய தடாகத்தின் இரண்டு கூறுகளாக பிரிந்து இருக்கின்றன" என்று அதன் அமைப்பையும் சொல்கிறார்.

இன்னும் 'விஷ்ணு தீர்த்தம்', 'துர்க்கை தீர்த்தம்', 'காலாக்கினி ருத்திர தீர்த்தம்' என்று இங்குள்ள தீர்த்தங்களைப் பற்றி இந்த நூல் கூறுகிறது

'உமாசரஸ்' என்று ஒரு குளம் உண்டு. இது கோடியக்காட்டு மோடி மண்டபத்துக்கு சமீபத்தில் உள்ளது. மோடி என்றால் காட்டுத் தேவதை என்ற பொருள்.

இந்த மோடி என்னும் காட்டுத் தெய்வம், முன்பு குளகர் கோயில் சமீபத்தில் உள்ள வனத்தில் குடி கொண்டிருந்தாள். பிறகு திருத்தலைப்பூண்டிக்கு சமீபத்தில் உள்ள சேகல் என்னும் இடத்திற்குச் சென்று அங்கு கோயில் கொண்டிருக்கிறாள்.

வேதாரண்யேசுவரர் மோடியின் இடத்துக்கு எழுந்தருளும்போது சேகலுக்கு எழுந்தருளுவதில்லை.

குளகர் கோயில் சமீபத்தில் உள்ள ஆதி கோயிலுக்கு எழுந்து அருளுகிறார் என்று உமாசரஸ்ஸின் வரலாற்றையே இந்த நூலில் ஒரு குறிப்பில் காண்கிறோம்.

இந்த ஊரில் சிவ பெருமான் நான்முகனுக்கு உபதேசம் செய்ததாக ஒரு புராண வரலாறு உண்டு.

அந்த உபதேசம் பெற்ற பிரம்மன் சிவனைத் துதிப்பதாகப் பல பாடல்கள் உள்ளன.

*'வேதத் தெளிவாகி விளைந்தமலப் போத்துருவாகிய புண்ணியனே!*
*நாதத்தொளியே! நலமே! நகையார்! சீதப்பிறை மேவிய சேகரனே!*
*வேதஅடவி மேவிய வித்தகனே! நாதா, உனையன்றி நயந்து அறியேன்.*
*ஆதாரமும் ஆள்எனை என்று அடிமேல் வேதா மகிழ்வொடு பணிந்தனனே!*

என்று அப்பாடல்கள் கூறுகின்றன.

பரமன் இங்கு பிரம்மனுக்கு வேதங்களை, வேத அர்ந்தங்களை எடுத்துரைத்ததால் இந்த இடம் மறைக்காடு (வேதாரண்யம்) என்று பெயர் பெற்றுள்ளது என்கிறது இந்தப் புராணம்.

வேதங்களே பல காலம் தவம் புரிந்ததால் இவ்விடம் மறைக்காடு எனப் பெயர் பெற்றது என்று தேவாரம் சொல்கிறது.

*'பலகாலங்கள் வேதங்கள்,*
*பாதங்கள் போற்றி*
*மலரால் வழிபாடு*
*செய் மாமறைக்காடா'*

என்று திருஞான சம்பந்தர் பாடுகிறார்.

### வேதநெறி

இந்தப் புராணத்தில் விஸ்வாமித்திரருக்கு உபதேசம் செய்த சருக்கம் என்று ஒரு பகுதி இருக்கிறது.

அதில் ஒவ்வொரு நிலையிலும் உள்ள மனிதர்கள் என்ன என்ன நடைமுறைகளைக் கைப்பற்ற வேண்டும் என்ற விதிமுறைகள் குறிக்கப்பட்டுள்ளன.

இரண்டு வகையான பக்திகள் குறிக்கப்பட்டு இருக்கின்றன.

ஒன்று வைதிக பக்தி; மற்றது தாந்திரிக பக்தி

வைதிக பக்தி என்றால் என்ன?

திருநீறு தரித்தல்; அஞ்செழுத்து நவிலல்; அரனை அர்ச்சித்தல்; கோயில் வலம் வருதல்; சிவனைத் துதித்தல்; சிவபிரான் காதைகளை மனமுருகக் கேட்டல் - உரைத்தல்; சிவ தீர்த்தங்களில் ஆடல்; சிவத்தலங்களில் பணிமேற் கொள்ளல்; ஸ்ரீ ருத்ரத்தை தினமும் ஜபித்தல்; சிவனடியார்களுக்கு பாத பூஜை செய்தல்; நந்தவனத்தைப் பாதுகாக்க மலர் பறிந்து மாலை தொடுத்து அளித்தல்.

இன்னும் அன்பு - பொறை - உயிர்களுக்கு இரங்கல் - தீமை அகற்றல் - உயிர்களுக்கு இன்பம் இயற்றுதல் - தினந்தோறும் மறை ஓதல் இசைத்தல் - பிற தெய்வங்களைப் பழிக்காமல் இருத்தல்...

இவையே வேதம் கூறும் வைதிக பக்தியின் இலக்கணம் என்று சொல்லப்பட்டுள்ளது. இதைப் பற்றி கூறும் பாடலைப் பாருங்கள்.

*'அன்பும் பொறையும்*
*உயிர்க்கிரங்கும் அருளும் தீமை அகல் வனவும்*
*இன்பமும் உயிர்கட்கு இயற்றி மறை*
*என்றும் ஓதி இசைப்பனவும்*
*வன்பான் மாயன் முதல் தேவர் வண்ணப்*
*பழியா வழக்கதவும்*
*பொன்பாய்ச் சடையோன் பக்தி என*
*புகழ் வைதிகமாய் புகன்றனவே!'*

என்பதுதான் அந்தப் பாடல்.

தாந்திரிக பக்தி என்றால் என்ன?

சைவ சித்தாந்தக் கருத்துகளை அனைத்தையும் அறிந்து - சமய தீக்கை பெற்று - யோக நெறியில் நின்று - ஈசன், உமையன்னை ஆகியோரையும் மற்ற தெய்வங்களையும் யந்திரங்களிலே ஆவகித்து - யந்திரங்களில் ஒவ்வொரு தளங்களிலும் அக்ஷரங்களைப் பொறித்து அவற்றில் தெய்வங்களை தியானித்து வணங்குவது தான் தாந்திரிக பக்தி.

இதை தத்துவ மார்க்கம் என்றும் சொல்லலாம்.

வழிபாடாகிய எளிய பூஜை நடைமுறைகளாலேயும் சிவனை அடையலாம். இது உலகியல் பக்தி.

உயர்ந்த தத்துவங்களாலேயும் சிவனை அடையலாம். இது சைவ தத்துவ பக்தி.

இவ்வளவு சிறப்புகளுடைய இப்புராணததை இயற்றிய அகோர தேவர், இறுதியில் ஒன்று கூறுகிறார்.

*'எளிதில் முக்தியை எய்துதற்கு*
*உபாயம் ஒன்று இசைப்பன்*
*விளியு மாதவ வேட்கையை*
*விடுத்துஅலர் மேய்ந்தே*
*அளிகள் சூழ் மறைவனம் அடைந்து*
*அகலமாய் இன்பக்*
*கனியில் மூழ்குமின்! கதியினைக்*
*கண்ணுறக் கண்டே!'*

எளிமையாக முக்தி பெற வேண்டும் என்றால் வேதாரண்யம் செல்லுங்கள் என்கிறார்.

இதையே 'வேத நெறி தழைத்து ஓங்க மிகு சைவத்துறை விளங்க' என்று சேக்கிழார் பெருமான் சொல்லி இருக்கிறார்.

மந்திர யத்திர தந்திரங்களை இறைவன் திருவடிகளாக வள்ளல் பெருமான் சொல்கிறார்.

அம்மை, அப்பன் மந்திரங்களை யந்திரங்களின் மூலமாக ஓதி பயன் அடைவது யந்திர தந்திர பயனாகும்.

தந்திரம் என்ற சொல்லுக்கு புத்தகம் என்ற பொருளும் உண்டு.

இந்த முறையில் திருமந்திரம் ஒன்பது தந்திரங்களாக அதாவது ஒன்பது புத்தகங்களாக விரித்து விளக்கப்பட்டு இருக்கிறது.

இதை, 'மந்திர குருவே! யோக தந்திர குருவே! மூலன் மரபில் வரும் மௌன குருவே என்று தாயுமானவர் பாடுகிறார்.

**வேதவனபுராணம்**

அகோரதேவர் வேதாரண்ய புராணம் எழுதியுள்ளது போல மற்றும் ஒரு பெரியவரும் வேதாரண்ய புராணம் எழுதி இருக்கிறார். அவர் வேறு யாருமில்லை. மதுரை திருவாலவாயுடையார் திருவிளையாடல் புராணம் எழுதிய பரஞ்சோதி முனிவர்தாம்.

பரஞ்சோதி முனிவர் பிறந்து வளர்ந்த ஊரே வேதாரண்யம்தான். மதுரையை ஆண்ட திருமலை நாயக்கர் காலத்தில் பரஞ்சோதி முனிவர் வாழ்ந்தார் என்று தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் கூறுவர்.

பரஞ்சோதி முனிவர் பாடிய திருவிளையாடல் புராணம் புகழ்பெற்றது. அவரது அறிவின் ஆன்ம அனுபவத்தின் முதிர்ச்சியில் எழுதப்பட்டது. அதைக் கண்ணுறும்போது அதற்கு முன்னரே வேதவனப்புராணம் இயற்றப்பட்டிருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது.

அவர் வேதாரண்யத்தில் வாழ்ந்த போது எழுதிய முதல் புராணம் என்று இதைக் கொள்ளலாம். பரஞ்சோதி முனிவர் ஈடு இணையற்ற தமிழ்ப்புலவர் என்பதை எடுத்த எடுப்பிலேயே காணலாம்.

வேதாரண்யத்து கோயில் அன்னையாம் "யாழைப் பழித்த மொழி அம்மை"யை அவர் பாடுகின்ற பாங்கைப் பாருங்கள்.

*வாலமதி நுதல்காட்ட வதனம் செந்தாமரை காட்ட*
*வளர்ந்த கொங்கை வரைக்காட்ட*
*நீலமலர் விழிகாட்ட இமயம் எனும் நெடுங்கிரியில் உதித்து*
*அறங்கள் நிகழ்த்தி யாவும்*
*ஞாலம் எலாம் பெற்றெடுத்தும் கன்னியாகி நவிலும்*
*மறை நாதனிடம் நயந்து நிற்கும்*
*பாலினை இன்னமுதை அருந்தேனை யாழைப்பழித்த மொழி*
*உமைபாதம் பணிதல் செய்வாம்.*

பரஞ்சோதி முனிவர் ஒப்பரும் தமிழ்ப்புலவர், சம்ஸ்கிருதம், தமிழ், தர்க்கம், நிகண்டு, பரதரின் நாட்டிய சாத்திரம் ஆய பல நூல்களையும் சிறக்கக் கற்றவர்.

அந்தக் காலத்தில் தமிழ்ச் சான்றோர்கள் சம்ஸ்கிருதத்திலும் சிறந்த புலமை பெற்றிருந்தனர். அதனால் தான் சம்ஸ்கிருத மொழியிலிருந்த கந்தபுராணத்தில் 'ஈச்வர சம்ஹிதை' என்ற பகுதியிலிருந்த ஆலவாய் திருவிளையாடல் புராணத்தை தமிழில் செய்தேன் என்று,

*"....புராணம் மூவாறு, எண்ணிய இவற்றுள்*
*காந்தத்து ஈசசங்கிதை மாதோ அறைந்திடப்பட்டது ஆலவாய் புகழ்மை*
*அந்த சிறந்திடும் வடநூல்தன் தென்சொலால் செய்தி!"*

என்று தாமே குறிப்பிட்டுள்ளார். அதேபோல் "வேதவனப்புராண"த்தையும் பாடி இருக்கிறார்.

வேதவனத்தின் பெருமையை வட மொழியில் உள்ளதை 18 புராணங்களில் இருந்து தேர்ந்தெடுத்து தமிழில் எழுதினேன் என்று கூறுகிறார்.

*"போதமி மூவாறு புராணத்தில் தெரிந்து*
*சூதமுனி புகன்ற வடமொழி தமிழால் தொகுத்து*
*வேதவன புராணம்என விளம்புவன் யான் உலகில்"*

என்று கூறுகிறார். பொதுப்படையாக 18 புராணங்களிலிருந்து தேர்ந்தெடுத்து எழுதினேன் என்று கூருகிறாரே ஒழிய எந்தப் புராணத்தில் இது உள்ளது என்று குறிப்பிட்டுக் கூறவில்லை. எனவே இது முற்றிலும் இவர் இயற்றிய நூலே என்பதும் மொழி பெயர்ப்பு அல்ல என்பதும் தெளிவு.

அகோரதேவர் தாம் இயற்றிய வேதாரண்யப் புராணத்தை, காந்தம், பிரும்ம வைவர்த்தம், பிரமாண்டம், காளிகாண்டம் என்னும் நான்கு புராணங்களின் அடிப்படையில் இயற்றியதாகக் குறித்து இருக்கிறார்.

அகோரதேவர் இயற்றிய வேதாரண்யப் புராணத்தை பரஞ்சோதி முனிவரோ, பரஞ்சோதி இயற்றிய வேதவனப் புராணத்தை அகோர தேவரோ குறிப்பிடாதது வியப்பாக இருக்கிறது.

இரண்டு அறிஞர்களும் ஒரு பொதுவான நூலில் இருந்து கருத்துகளை எடுத்து இருக்கின்றனர் என்பது பல இடங்களில் இருந்து தெளிவாகிறது.

அகோரதேவர் தமது வேதாரண்யப் புராணத்தை 77 சருக்கங்களில் பாடி இருக்கிறார். 3243 பாடல்களில் இதை முடித்து இருக்கிறார்!

பரஞ்சோதி முனிவரோ 1173 பாடல்களில் 18 சருக்கங்களில் சுருக்கி இயற்றி இருக்கிறார்.

பரஞ்சோதி முனிவர் - இயற்றிய புராணத்தின் சருக்கங்கள் அப்படியே அகோர தேவரியற்றிய சருக்கப் பெயர்களாக காணப்படுகின்றன.

மணிகன்னிகை சருக்கம். வேதநதிச் சருக்கம் மணவாளச் சருக்கம் (புவனி) விடங்கச் சருக்கம், கோலாகலச் சருக்கம், மாவலிச் சருக்கம், சௌதாசச் சருக்கம், என்பவை எல்லாம், இரண்டு நூல்களிலும் ஒன்றாகவே காணப்படுகின்றன.

கருத்துகளை வைத்துள்ள பாங்கும் இரண்டு நூல்களிலும் ஒன்றாகவே காணப்படுகின்றன.

**மணவாளக் காட்சி**

ஒருமுறை மகாமேரு மலைக்கும், விந்திய மலைக்கும், யார் பெரியவர் என்ற போட்டி ஏற்பட்டது. அப்பொழுது அங்கு நாரதர் தோன்றினார்.

எங்களில் யார் பெரியவர் என விந்திய மலை நாரதரைக் கேட்டது.

இதில் சந்தேகம் என்ன? மேருதான் சிறந்தது என்று நாரதர் கூறினார். விந்தியமலைக்குப் பெரும் கோபம் வந்தது.

உடனே நிலவுலகையும் விண்ணுலகையும் வியாபித்து ஒரு பெரும் உரு எடுத்து உலகை துன்புறுத்தத் தொடங்கியது.

விண்ணவர் எல்லாம் பயந்து நடுங்கினார்கள் நான்முகனையும், திருமாலையும் அடைந்து தங்களைக் காக்கவேண்டினர். அனைவரும் கயிலையங்கிரியை அடைந்தனர். அந்த சமயம்தான் ரிஷிகள் எல்லாம் சிவபெருமானை உமாதேவியை மணக்க வேண்டிக் கொண்டிருந்தனர்.

பரமனும் அதற்கு இசைந்தார். அத்திருமணத்தைக் காண வேண்டி முப்பத்து முக்கோடி தேவர்களும், கந்தர்வர், சித்தர், சாரணர், வித்யாதரர் ஆகிய அனைவரும் கயிலையை அடைந்தனர். எல்லாருடைய பளுவும் தாங்காமல், கயிலையங்கிரி தாழ்ந்தது. தென்திசை ஆகாயம் வரை உயர்ந்தது.

இந்நிலையை சமன் செய்யவும், விந்திய மலையின் ஆணவத்தை அடக்கவும் சிவபெருமான் அகத்திய மாமுனியை அழைத்தார்.

"என் திருமணத்தால் நிலையின்றி மேல் எழும்பும் தென்திசையை சமம் செய்வாய். வழியில் விந்திய மலையை அடக்குவாய்" எனக் கூறினார்.

அகத்தியர் துணுக்குற்றார்.

"அண்ணலே உம்மைத்தவிர வேறு ஏதும் எண்ணாது தவம் புரியும் எனக்கு தங்களது திருமணம் காணும் பேறு இல்லையோ?" என்று வருந்தினார்.

"குறு முனியே! எனது திருமணக் கோலத்தை இந்த முப்பத்து முக்கோடி தேவர்களும் எவ்வாறு காண்கிறார்களோ அதே போல நீரும் காணலாம். நீர் தென்திசை சென்று வேதவனத்தையடைவீர். அங்கு நீர் எனது திருமணக் கோலத்தைக் காண்பீர். இத்தனை தேவதைகளின் ஆற்றலும் அறிவும் திரண்டாலும் அதைக் காட்டிலும் சிறந்த ஆற்றலும் அறிவும் உம் ஒருவரிடமே உள்ளது" என்று கூறினார்.

அகத்திய முனிவரும் உலகம் உய்ய தென்திசை நோக்கிக் கிளம்பினார்.

வழியை மறித்து நின்றது விந்திய மலை.

அம்மலையிடம் தான் தென்திசை செல்லும் காரணத்தைக் கூறி வழி விடக் கோரினார்.

ஆணவம் நிறைந்து விளங்கிய விந்தியமலை அதற்கு மறுத்தது.

அகத்தியர் தனது கரத்தால் விந்திய மலையின் சிகரத்தை கீழே

அழுத்தினார். விந்திய மலையும் பாதாளம் வரை அழுந்தியது. விந்திய மலையின் ஆணவம் அழிந்தது.

அகத்தியர் தென்திசை தொடர்ந்தார். வழியில் வாதாவி வில்வலன் என்ற அரக்கரை சம்ஹரித்து வேதவனம் அடைந்தார்.

அங்கு மூன்று தீர்த்தங்களிலும் மூழ்கி, தவம் மேற்கொண்டார். சிவ பெருமானும் அனைத்து தேவர்களுடனும் தேவியுடனும் வேதவனத்தே தோன்றி தமது திருமணக் கோலத்தை அகத்திய மாமுனிக்கு காண்பித்து அருளினார்.

இந்த காட்சியைக் கண்டு அகத்தியர் துதித்ததை பரஞ்சோதி முனிவர் தமது புராணத்தில்,

*"என்னை ஒரு பொருளாய் வந்து இங்கு இயல் மணவாளக் கோலம்*
*தன்னை இன்று எனக்களித்த தாணுவே! போற்றி! திங்கள்*
*மன்னு செஞ்சடையாய் போற்றி! மறைதொழு மணாளா போற்றி!*
*நன்னுதல் பாகா போற்றி! நாதனே போற்றி! போற்றி!"*

என்று பரவசமடைந்து பாடுகிறார்.

அகத்தியர் பரமனைப் பரவ, அண்ணலும் "உனக்கு யாது வரம் வேண்டும்?" என்று கேட்டார்.

"எனக்காக வேதாரண்யத்திலே திருமணக் கோலம் காண்பித்தீர் அல்லவா. அக்கோலத்தோடு என்றும் இங்கே இருத்தல் வேண்டும். ஆண்டு தோறும் சித்திரை மாதம், சுக்ல பட்சத்து சப்தமியில் பகல் நேரத்து, இங்குள்ள தீர்த்தத்தில் குளித்து உன்னை வணங்கி வலம் வந்து, வன்னி மூலத்திருந்து பஞ்சாட்சரத்தை ஜபிப்போர்களுக்கும், மாசி மாதம் மாமகத்தன்று இங்கு வந்து இத்திருமணக் கோலம் கண்டோர்களுக்கும் வீடு பேறளித்து, உன் சிவ கணங்களில் மேலாய் நிற்க அருள்புரிதல் வேண்டும்" என்று அகத்தியர் வேண்டிக் கொண்டார்.

பரமனும் அதற்கு இசைந்தார்.

வேதாரண்யத்தில் சித்திரை விழாவையும், மாசி மக விழாவையும் காண்போர் உய்வர் என்பது புராண நம்பிக்கை.

இதைத்தான் பரஞ்சோதி முனிவர் மணவாளச் சருக்கம் என்பதில் விவரித்துள்ளார்...

அகோரதேவர் தாம் இயற்றிய வேதாரண்ய புராணத்தில், "மணவாள கோலச் சருக்கம்" என்பதில் வர்ணித்துள்ளார். கதை அமைப்பும் முடிவும் ஒன்று போலவே இருக்கின்றன. இந்த விழாக்களைப் பற்றி கூறும் போது அகோரதேவரும் இதேபோலக் கூறுகிறார்.

*"சித்திரைத் திங்கள் பக்கம் செய்யோன் வாரம்*
*தொத்து சத்தமிநாள் உச்சி தோற்றினை இந்நாள் மேவி*
*இத்தலத் தீர்த்தம் நான்கும் படிந்துனை இறைஞ்சி வன்னி*
*கொத்தவர் நீழல் பஞ்சாக்கரம் அனுக்குனித்த மேலோர்*
*மாசிநன் மகத்தி னோடு பூரண மருவு நாளின்"*

என்று கூறி இருக்கிறார். வேதாரண்யத்தில் திருமணக் கோலக்காட்சி என்னும் விழா இன்றும் பெருவிழாவாக நடைபெறுவது அறிந்ததே.

இதேபோல் 'பவனி விடங்கராக' பரமன் தோன்றியதையும் பிற புராணங்களையும் பரஞ்சோதி முனிவரும் அகோரதேவரும் ஒன்று போலவே பாடி இருக்கின்றனர்.

பரஞ்சோதி முனிவரிடம் ஒரு மரபும் இருக்கிறது. தாம் இயற்றும் புராணத்தை எங்கு எப்பொழுது அரங்கேற்றினார் என்று தமது நூலிலேயே குறிப்பிடுகிறார்.

மதுரை திருவிளையாடல் புராணத்தை மதுரை சொக்கநாதர் கோயிலில் சந்நிதியில் ஆறு கால் பீடத்தில் இருந்து அரங்கேற்றியதாகக் கூறுகிறார்.

"சொக்கேசர் சந்நிதியில் அமரர் சூழும் அறுகாற் பீடத்திருந்து பரஞ்சோதி முனிவன் அரங்கேற்றினானே" என்று குறிப்பிட்டு இருக்கிறார்.

அதேபோல வேதவனபுராணத்தை வேதாரண்யம் கோயில் முன் மண்டபத்தில் அரங்கேற்றினார் என்றும், மாசி மாதம் விழா முடிந்ததும் இதை அரங்கேற்றினார் என்றும் கூறுகிறார்.

*மண்ணில் இவ்வாறு நீடுவளந்தரு மறைவனத்துள்*
*அண்ணல் ஆலயத்துமுன் அமரர்சூழ் மண்டபத்து*
*கண்ணுதல் மாசித் திங்கள் விழாஅணி கண்டு போற்றி*
*எண்ணரும் தவத்தோர் ஆங்கன் இருந்தனர். இருந்த எல்லை"*

என்று பரஞ்சோதியார் இந்த நிகழ்ச்சியைப் பாடி இருக்கிறார்.



# 2. பெரிய திருக்கற்றளி

**முன்னுரை**

காஞ்சி கயிலாயநாதர் ஆலயம் ஒரு பெருங்கோயில் தமிழக வரலாற்றிலேயே மிகச்சிறந்த நிலையில் இருக்கக் கூடிய கோயில். இன்று காஞ்சீபுரத்தில் இருக்கக்கூடிய கோயில்களில் மிகத் தொன்மையான கோயில் இதுதான். இதற்கு முன்னர் இருந்த கோயில்கள் பல உண்டு. நாயன்மார்களினாலே பாடல்பெற்ற கச்சி ஏகம்பரநாதர் கோயில், அனேக தங்காவதம், கச்சி மேற்றளி, திருக்கச்சி மயானம் முதலிய பல புண்ணிய கோயில்கள் எல்லாம் இருக்கின்றன. ஆனால் அவைகளிலே அந்தக் காலத்திலே எடுக்கப்பட்ட கட்டிடப் பகுதிகள் எல்லாம் பிற்காலத் திருப்பணிகளினால் மாற்றியமைக்கப்பட்டுவிட்டன. ஆதலால் தொன்மையான கட்டிடப் பகுதி. அப்போது கட்டிய நிலையிலேயே இன்றும் எஞ்சி இருக்கிறது என்று எண்ணும்படி இருக்கக்கூடிய ஒரு கோயிலை காணவேண்டுமென்றால் அது இந்த திருக்கச்சி கயிலாயநாதர் ஆலயம்தான்.

பல்லவர்கள் பல கோயில்களை எடுத்திருக்க வேண்டும். இராஜசிம்மனுக்கு முன்னர் ஆண்ட பரமேஸ்வரவர்மன். அவனுக்கும் முன்னர் திகழ்ந்த மாமல்லன், மகேந்திரவர்மன் ஆகிய அரசர்கள் எல்லாம் இங்கே ஆண்ட போது அவர்கள் எடுப்பித்த கோயில்கள் இருந்திருக்க வேண்டும். ஆனால் அவைகள் எல்லாம் இப்பொழுது எந்த நிலையில் இருக்கின்றன என்பது நமக்குத் தெரியாது. அவைகள் அந்த அளவுக்கு மாற்றம் அடைந்திருக்கின்றன. ஒருசில கல் தூண்கள் மட்டும் மகேந்திரவர்மன் காலத்தில் எடுக்கப்பட்ட கட்டிடத்திற்கு எடுத்துக்காட்டாக கச்சி ஏகம்பநாதர் ஆலயத்திலே காணக்கிடைத்தன. அவற்றில் மகேந்திர விக்கிரமன், மத்த விலாசன், விசித்திர சித்தன், சித்திரகாரப்புலி என்ற பட்டப் பெயர்கள் எல்லாம் காணப்பட்டன. அந்த தூண்கள் இப்பொழுது சென்னையில் அரசு மியூசியத்தில் வைத்து பாதுகாக்கப் படுகின்றன. அதுதான் இங்கு கிடைத்த தூண்களிலே தொன்மையானவை. ஆனால் முழுமையான கட்டிட கோயில் என்று பார்த்தோமானால் இந்த கோயில் ஒன்றுதான் காஞ்சீபுரத்திலேயே மிகத் தொன்மையானது.



காஞ்சி கயிலாயநாதர் கோயில்

**கூரம் கோயில்**

இதற்கு முன்னர் கல்லை கொண்டு எடுத்த கட்டிட கோயில் கூரம் என்ற இடத்திலே இருக்கிறது. காஞ்சீபுரத்திலேயிருந்து சற்று ஏறக்குறைய ஒரு 10 கல் தொலைவில் அந்த ஊர் இருக்கிறது. கூரத்தாழ்வான் என்ற வைணவ வரலாற்றிலே சிறந்த இடம்பெற்று, இராமானுஜருடைய வரலாற்றோடு தொடர்புகொண்ட பெருமகன் பிறந்த இடம் கூரம். அங்கே பரமேஸ்வரவர்மன் காலத்திலே எடுக்கப்பட்ட கோயிலின் அடிப்பகுதி மட்டும் இப்போது எஞ்சி இருக்கிறது. அந்த கோயிலை வித்யாவினீத பல்லவன் என்ற ஒரு பல்லவக் குறிசில், தோற்றிவைத்து இருக்கிறான். அவன் பரமேஸ்வர வர்மனுக்கு தானைத் தலைவனாக இருந்தபோது அந்தக் கோயிலை தோற்றுவித்தான். தோற்றுவித்தபோது அதற்கு தன் தலைவன் பெயரையும் தன்னுடைய பெயரையும் இணைத்தே வைத்திருக்கிறான். ஆதலின் அந்தக் கோயிலுக்கு பெயர் வித்யாவினீத-பல்லவ-பரமேஸ்வர கிருகம் என்று பெயர். அங்கே பினாகபாணி எம்பெருமானை பிரதிஷ்டை செய்தான் என்று கூரம் செப்பேடு கூறுகிறது.

**வித்யாவிநீத பல்லவ பரமேச்வரக்ருஹே பிரதிஷ்டாபிதஸ்ய, பகவதஹ பிணாகபாணேஹ பூஜா, ஸ்நபன குசும, கந்த, தூப, தீப, ஹவிஸ், உபஹார, பலி, சங்க படஹாதி பிரவர்த்தநார்த்தம், பாரத ஆக்யான நிமித்தார்த்தம் ச. என்று அந்த செப்பேடு கூறுகிறது.**

வித்தியா வினீத பல்லவ பரமேஸ்வரனால் தோற்றுவிக்கப்பட்ட் வித்தியா வினீத பல்லவ பரமேஸ்வர க்ருஹத்தில் பிரதிஷ்டாபிதம் செய்யப்பட்ட பினாகபாணியாகிய சிவபெருமானுக்கு பூஜைக்கும், நீராட்டுவதற்கும், மலர் அர்ச்சிப்பதற்கும், கந்தம், தூபம், தீபம், அவிஸ், உபகார, பலி ஆகிய அனைத்திற்கும் வழிபாட்டிற்காக இந்த நிலத்தை கொடுத்தேன் என்று அந்தச் செப்பேடு கூறுகிறது.

எஞ்சியுள்ள அடிப்பகுதி மட்டும் பண்டைய பல்லவர் காலத்து கோயில். மேல்பகுதி பின்னர் முற்றிலும் மாற்றியமைக்கப்பட்டு இடிந்து சரிந்து கிடந்ததை தொல்பொருள் துறை எடுத்து பாதுகாத்து வருகிறது. அதிலே ஆதித்தனுடைய கல்வெட்டும் இன்னும் பிற அரசர்களுடைய கல்வெட்டுகளும் காணப்படுகின்றன.

அதற்கு அடுத்து நாம் காண்கின்ற பெரும் கோயில் இந்தக் கயிலாயநாதர் கோயில் தான். இந்த கோயிலுக்கு சென்று பார்க்கும் போது பல அரிய செய்திகளும், கட்டிட அமைப்புகளும் விளங்கும்.

**இராஜசிம்மன்**

காஞ்சி கயிலாயநாதர் கோயிலைத் தோற்றுவித்த மன்னன் பெயர் இராஜசிம்மன் என்பதாம். அவன் முதலாம் பரமேஸ்வரனுடயை மகன். அவனுக்கு அத்யந்தகாமன் என்று ஒரு பட்டப்பெயர் உண்டு.

அவன் இந்த கோயிலைத் தோற்றுவித்து அதில் தன் பெயரை எல்லாம் பொறித்து வைத்துள்ளான். இந்தக்கோயிலை நான் தோற்றுவித்தேன் என்பதையும் கல்வெட்டில் பொறித்து வைத்துள்ளான். அந்தக் கல்வெட்டு இந்தக்கோயிலுனுடைய அதிஷ்டான வர்க்கத்தில் அப்படியே முற்றிலுமாக எழுதப்பட்டிருக்கிறது. அந்தக் கல்வெட்டு புண்ணிய நதியாகிய கங்கை ஆறு எவ்வாறு விண்ணிலே இருந்து கீழே பாய்ந்து இந்த நிலவுலகம் முழுவதையும் தூய்மையாக்குகிறதோ அது போல உமையோடு கூடிய அண்ணலின் அருட் பிரவாகம் உலகத்தில் பாய்ந்து உலக மக்கள் அனைவரையும் உய்விக்கிறது. அந்த கங்கை ஆறு நம்மை காப்பாற்றட்டும் என்றதான அழகிய வணக்க செய்யுளுடன் தொடங்குகிறது.

பூரணி வஹ புனீதாத் என்று தொடங்குகின்ற அந்த கல்வெட்டிலே நான் பரத்வாஜ கோத்திரத்தைச் சார்ந்தவன். எனது முதியோர்கள் ஆன்றோர்களை, பெரியவர்களை, முதியோர்களை, வணங்கியவர்கள், சத்தியநெறியிலே நின்றவர்கள், தர்மத்தை பாலிப்பதிலே முதலிடம் பெற்றவர்கள். அந்தணர்களைப் போற்றுவதிலே முதன்மையாக நின்றவர்கள். பல்வேறு வேள்விகளை செய்து தூய்மையான குலத்தை, மரபைப் பெற்றவர்கள். அந்த வழியிலே தோன்றிய ரணரசிகன் ஆகிய



காஞ்சி கயிலாயநாதர் கோயில்

விக்கிரமாதித்தனுடைய நகரை தூள் அடித்த பரமேஸ்வரன் இடத்திலே இருந்து தோன்றியவன் யான் என்று தன்னை கூறிக்கொள்கிறான்.

ரணரசிக புரோன்-மர்த்தனாத் அக்ரதண்டாத் ஸ்ரீமான் அத்யந்த காமஹ

என்று இவன் தன்னை கூறிக்கொள்கிறான்.

பரமேஸ்வரன் இடத்திலிருந்து முருகப்பெருமான், குகன் எவ்வாறு பிறந்தானோ அதேபோல பரமேஸ்வரனாகிய பல்லவன் இடத்திலே இருந்து நான் பிறந்தேன் என்று கூறிக்கொள்கின்றான்.

குஹ இவ பரமாத் ஈஸ்வராத் ஆத்தஜன்மா

சக்தி க்ஷுண்ணாரி வர்கஹ தன்னுடைய சக்தியினாலே அரிவர்க்கம், மாற்று அரசர்களுடைய கூட்டத்தை வெற்றி கண்டவன்.

**விதித பகு நயஹ சைவ சித்தாந்த மார்க்கே, ஸ்ரீமான் அத்யந்த காமஹ க்ஷதஸகல மலஹ தூர்த்தர பல்லவானாம்**

சைவசித்தாந்த மார்க்கத்திலே பலவழிகளை பின்பற்றி தன்னுடைய மலங்கள் அனைத்தையும் போக்கப்பட்டவன்.

**கலாசதுர யோஷிதாம் ரகஸி ரஞ்சனே மன்மதஹ**

இவன் அழகிய பெண்களை தனிமையிலே இன்புறுவதிலே மன்மதனுக்கு நிகரானவன்.

**திரயீபத நிஷேவினாம் சதத பாலனே வாஸவஹ**

மூன்று வேதங்களை பின்பற்றுகின்றவர்களை காப்பதிலே இந்திரன் போன்ற பராக்கிரமத்தை உடையவன்

**சுரத் த்விஜ முனித் த்விஷாம் ஹ்ருதய தாரனே மாதவஹ.** சுரர்கள், தேவர்கள், அந்தணர்கள், முனிவர்கள் ஆகியோரை துன்புறுத்துபவர்களை வீழ்த்துவதிலே மாதவன்.

**ஸச த்ரவின சம்பதா சுஜன தோஷனே வித்ததஹ**

நல்ல மக்கள் சந்தோஷம் அடைவதற்காக அனைத்து பொருள் களையும் அவர்களுக்கு உடமையாக்கியதிலே குபேரனுக்கு சமமானவன் என்று இங்கே இருக்கின்ற அவனுடைய கல்வெட்டு குறிக்கிறது.

## பெரிய திருக்கற்றளியின் சிறப்பு

பராந்தகச் சோழனும், 200 அடிக்குமேல் கல்லினாலே ராஜராஜேச் வரத்தை தோற்றுவித்த ராஜராஜனும், அவனுக்குப் பின்னர் வந்தவர்களும் இந்தக் கோயிலை பெரிய திருக்கற்றளி என்று கூறுகிறார்கள். பெரும் கோயிலை தோற்றுவித்த ராஜராஜனே பெரிய திருக்கற்றளி என்று கூறுகிறான் என்றால் இதனுடைய சிறப்பும் பெருமையும் எவ்வளவு சிறந்தவை என்பது தெரிய வருகிறது.

கயிலயம் கிரியிலே சிவபெருமான் ஆடுகின்ற திருவிளையாடல்கள் மிகவும் உயர்ந்தவை என்று ஆன்றோர் களால், தவமுனிவர் களால், தூய சிந்தை யுடையவர்களால் கூறப்படுகிற மரபு உண்டு. கயிலையங் கிரியிலே சிவபெருமானின் தோற்றங்கள் எவ்வளவு சிறந்தவையோ அதைக்காட்டிலும் சிறந்ததாக, கல்லாலேயே இங்கு தோற்றுவித்த

இந்தக் கோயிலிலே சிவபெருமான் கயிலையைக் காட்டிலும் சிறப்பாக விருப்பொடு வந்து உறைகிறார்.

**சைலே கைலாசலீலாம் அபஹரதி க்ருஹே.**

கைலாசத்தினுடைய அழகை, பெருமையை, சிறப்பை இந்தக் கோயில் (அபஹரதி) விஞ்சுகிறது. அதைக்காட்டிலும் மேன்மையாக இது திகழ்கிறது.

**கைலாசலீலாம் அபஹரதி சைலே க்ருஹே.**

சிலாமயமாந இந்தக் கோயில் என்று இவன் தான் தோற்றுவித்த கோயிலை கூறுகிறான்.

இந்தக் கோயிலில் உள்ள ஒவ்வொரு சிற்பத்தையும் பார்த்தோமானால் அது எவ்வளவு உண்மை என்பது தெரியும். வேறு எந்த கோயிலிலும் பார்க்க முடியாத அளவுக்கு அழகான சிற்பங்கள் உள்ளன. சிவபெருமானுடைய தோற்றங்களை எவ்வளவு வகையாக நாயன்மார்கள் எல்லாம் பாடிப் பரவி இருக்கிறார்களோ அத்தனை பாடல்களுக்கும் எடுத்து காட்டாக இங்கே சிற்பங்கள் இருக்கின்றன. வேறு எந்த கோயிலிலேயும் இவ்வளவு அழகை பார்க்க முடியாது என்கிற அளவிற்கு இருக்கின்றன. அதுமட்டுமல்ல, பிற கோயில்களிலே ஒரே குறிப்பிட்ட அமைப்பிலேயே எல்லா சிற்பங்களும் இருக்கும். ஆனால் இந்தக் கோயிலிலே அந்த அந்தத் தோற்றங்களுக்கு அடிப்படையாக அமைந்த கதைகளுக்கு ஏற்ப, அந்த கதைகளின் உயிர் தத்துவங்களுக்கு ஏற்ப, துடிப்புகளுக்கு ஏற்ப, சிற்பங்கள் அமைக்கப்பட்டு இருக்கின்றன. சுற்றுப்ராகாரச் சுவர்களிலே சிறிய அளவிலே சிற்பங்கள், கோயிலின் பக்கங்களிலே இருக்க கூடிய பக்க ஆலயங்களிலே உயர்ந்த சிற்பங்கள். வெறும் சிற்பங்கள் மட்டும் அல்ல அழகு வாய்ந்த சிற்பங்கள். ஆதலினாலே இவை தோற்றிவைத்த காலத்திலே, தமிழகத்திலே இதுபோன்ற சிற்பங்கள், அமைதி யுடையவை வேறு கோயிலில் இல்லை என்ற அளவிற்கு இந்தக் கோயில் தோற்றுவிக்கப்பட்டது.

## இராஜசிம்மனுடைய சிறப்பு

இராஜசிம்மனுக்கு ஒரு பெரிய புகழ் பெற வேண்டும். தன்னுடைய புகழ் மிகச் சிறப்பாக இருக்க வேண்டும். அந்த புகழ் அனைத்தையும் உருவாக்கி ஒரு கோயிலாக மாற்ற வேண்டும் என்று அவனுக்கு வந்த ஆசையின் பிரதிபலிப்பு இந்த கோயில்.

**யஸஸ் ஸத்ரிஸம் ஆத்மனஹ பவனம் ஏதத் உத்தாபிதம்**

தன்னுடைய புகழுக்கு (ஸத்ருஸமான) சமமான, புகழுக்கு ஏற்ப.



காலனைக் காலால் கடிந்தார், (காலகாலன்)



ஆலின்கீழமர்ந்தார் (தக்ஷிணாமூர்த்தி) கயிலாயநாதர் கோயில், காஞ்சி

**ஆத்மனஹ யசஸ் ஸத்ருஸம் ஏதத் பவனம் உத்தாபிதம்.** இந்த கோயிலானது எடுக்கப்பட்டது என்று கூறுகிறான். அவ்வளவு ஆசை. மனதில் இருப்பதை பூராகவும் கொட்டி, தன்னுடைய பொருள் முழுவதையும் கொட்டி, இதைத்தவிர வேறு எந்த நினைப்பும் நினைக்கவில்லை என்பதாக, அப்படி தோற்றுவித்த கோயில் இந்த கோயில்.

அவனுக்கு அத்யந்தகாமன் என்று ஒரு பட்ட பெயர். அந்தம் முடிவு, அத்யந்தம் எல்லையற்ற, முடிவற்ற, இறுதியே காணமுடியாதது. காமன் என்றால் மன எழுச்சி. ஆசையோடு கூடிய எல்லையற்ற எழுச்சிகளை உடையவன் என்று ஒரு பட்டப்பெயர்.

சம்புவினுடைய பாதார விந்தங்களை, தாமரைத் திருவடிகளை வணங்குவதிலே, என்றும் மறவாது சிந்தனையிலே ஈடுபடுவதிலே அத்யந்த காமன் என்று வாயலூருக்கு அருகில் இருக்கும் கோயிலில் உள்ள இவனுடைய கல்வெட்டு கூறுகிறது.

**சம்போஹோ பாதாரவிந்த த்வய பரிசரணே நித்யம் அத்யந்த காமஹ.**

சம்புவினுடைய பாதாரவிந்த த்வயங்களை (இரு திருவடிகளையும்) வணங்குவதிலே என்றும் அத்யந்தகாமஹ, எப்பொழுதும் எல்லையில்லா ஆசையுடைய பெருமகன். சிவனடியை மறவாத சிந்தையான். அவ்வளவு ஆர்வத்தோடும், அவ்வளவு பக்தியோடும், தன் உடல், பொருள், ஆவி அனைத்தையும், சிவபெருமானின் மீது கொண்ட பக்தியினாலே அதற்கு அற்பணித்த ஒரு பெருமகன் இராஜசிம்மன்.

அவனுடைய காலத்திலேதான் மாமல்லபுரம் தோற்றி வைக்கப்பட்டது என்று ஆராய்ச்சிச் சான்றுகள் கூறுகின்றன. அதில் அவன் கூறுவதாவது.

**பக்தி ப்ரஹ்வேன மனஸா**– பக்தி பெருக்கினாலே, மனம் நிறைந்து இந்த கோயிலைத் தோற்றி வைத்தேன் என்று கூறுகின்ற மன்னன்.

**மக்கள் தொண்டு**

**பிரஜானாம் இஷ்டசித்யர்த்தம் சாங்கரீம் பூதிம் இச்சதா.**

தன்னுடைய குடிமக்களுக்கு என்ன. என்ன எண்ணங்கள் எல்லாம் உண்டோ, மன எழுச்சிகளெல்லாம் உண்டோ அவை நிறைவேறுவதற்காகத்தான் இந்த கோயிலைக் கட்டினேன என்று கூறுகிறான். சிவன்மீது கொண்ட பக்தியோடு குடிமக்களுடைய உயர்ச்சியும் மனதில் கொண்ட ஒரு பெருமகனால் தோற்றி வைக்கப்பட்டது இந்த கோயில்.

ஒரு பெரிய முதலை யானையைக் கவ்வி இழுத்தது போல், இந்த கலியுகமானது நல்ல தூய உள்ளம் படைத்த மக்களைக்கூட பிடித்து இழுக்கிறது. அந்த யானையைக் காப்பதற்கு எவ்வாறு திருமால் தோற்றமளித்தாரோ, அது போல இந்த கலியைக்கடிந்து மக்களுக்கு நல்லதை செய்வதற்காகத் தோன்றிய புருஷோத்தமன் இவன்.

**ஜாதோஸௌ புருஷோத்தமோ ரணஜயஹ**
**த்ராதும் ஜனான் மஜ்ஜதஹ பாப அப்தேஹ**
**மகர க்ரஸ்தான் ஸ ஜீயாத் சிரம்**

என்று கல்வெட்டு கூறுகிறது.

கலிகால மகர - கலிகாலமாகிய முதலையினாலே. க்ரஸ்தானு பிடிக்கப்பட்டு இழுக்கப்படுகின்ற பாப அப்தேஹ - பாபமாகிய கடலிலே இருந்துகொண்டு மக்களை இழுக்கின்ற கலிகாலமாகிய இந்த முதலையை அழிப்பதற்காக, ஜாதஹ அசௌ புருஷோத்தமஹ - இந்த புருஷோத்தமன் பிறந்தான் என்று கூறும்போது, திருமாலை போன்ற தூய செயலிலே ஈடுபட்டவன்.

**ஜாதோசௌ புருஷோத்தமஹ** என்று இந்த கல்வெட்டு தொடங்குகின்றது என்றால், அவனுடைய சிந்தை முழுவதும் மக்கள். நலனாக இருக்க வேண்டும் என்ற கருத்து, அது தெய்வத்திற்கு செய்யும் தொண்டினாலே நிறைவு பெறவேண்டும் என்று இருந்த பெருமகன்.

**ராஜஸிம்மோ ரணஜெயஹ ஸ்ரீதர சித்ரகார்முகஹ**
**ஏகவீரஹ சிரம்பாது சிவசூடாமணிர் மஹீம்**

**பூசலார் வரலாறு**

சிவனிடத்தில் அவ்வளவு ஈடுபாடு கொண்ட பெருமகன் இவன். சிவசூடாமணியாகிய இந்த மன்னன் இந்த கோயிலைக் கட்டி கும்பாபிஷேகம் நாளை நடக்க இருக்கிறது என்ற நிலையில், வேத கோஷங்களும், இசைக்கருவிகளும் ஒலிக்க இருக்கும் நிலையில் அரசனின் கனவில் சிவபெருமான் தோன்றி, 'நாளைக்கு நடக்கவிருக்கும் கும்பாபிஷேகத்தை மாற்றி வைத்துக்கொள்' என்று கூறினாராம்.

அனைத்து கலைகளையும் உடையதாக, அனைத்து செல்வங்களும் உடையதாக, ஏக சக்ராதிபதியாக விளங்கும் அரசன் தோற்றிவைத்த கோயிலில் நடக்க இருக்கும் கும்பாபிஷேகத்தை சிவபெருமான் மாற்றி வைத்துக்கொள் என்றார்.

திருநின்றஊரிலே என்னுடைய அடியான் ஒருவன் கோயில் கட்டியிருக்கிறான். அந்த கோயிலில் அவன் நாளைக்கு கும்பாபிஷேகம் செய்யப் போகிறான். நான் அங்கே போகவேண்டும் ஆதலினால் நீ உன்னுடைய நாளை மாற்றி வைத்துக்கொள் என்று சிவபெருமான் கூறினார்.

நீ நாளைக்கு வைத்துக்கொண்டால் அங்கு போகமுடியாதே, இங்கு வரும்படியாக இருக்குமே என்று கூறுவதாகவும் தொணிக்கிறது.

பூசலார் என்ற நாயன்மார் அவர் தோற்றிவைத்திருக்கின்ற கோயிலில் கடவுள் மங்களம் ஏற்றுக்கொள்ள இருக்கிறேன் ஆகையால் நீ மாற்றி வைத்துக்கொள் என்றாராம். சேக்கிழார் இந்த நிகழ்ச்சியை திருத்தொண்டர் புராணத்தில் குறிப்பிட்டுள்ளார்.

*(நின்றஊர்ப் பூசல் அன்பன் நெடுதுநாள் நினைந்து செய்த,*
*நன்றுநீடால யத்து நாளைநாம் புகுவோம் நீஇங்(கு),*
*ஒன்றிய செயலை நாளை ஒழிந்தபின் கொள்வாய்' என்று,*
*கொன்றைவார் சடையார் தொண்டர் கோயில்கொண் டருளப்*
*போந்தார்*

திருநின்ற ஊரும் இவனுடைய ஆட்சிக்கு உட்பட்ட ஊர். அரசன் அந்த ஊருக்கு ஓடினான். அந்த கோயிலை எடுப்பித்தது யார் என்று பார்க்க ஓடினான். சிவபெருமானே உகந்து ஏற்றுக்கொள்ளக்கூடிய அளவுக்கு தோற்றுவித்த ஒரு மகன் இருக்கிறான் என்றால், அவன் என்னைக்காட்டிலும் தூயவனாக அல்லவா இருக்க வேண்டும். அவனை போய் பார்க்க வேண்டும் என்று ஓடினான்.

அரசன் வந்துவிட்டான் என்ற உடன் ஊர்ச சபையில் இருக்கூடிய பெரிய மக்களெல்லாம் ஓடி வந்தார்களாம். அவர்களை அரசன் முதலில் கேட்டது. பூசலார் என்று ஒருவர் எடுத்திருக்கிறாரே அந்த கோயிலானது எங்கே இருக்கிறது என்று கேட்டான். அவ்வாறு ஒருவரும் கோயில் எடுக்கவில்லையே, இந்த ஊரில் கோயில் கிடையாதே' என்றனர் ஊரார். இல்லை. சிவபெருமானே என்னிடத்தில் கூறியிருக்கிறார். பூசலார் என்று ஒருவர் உண்டாமே அவர் எங்கே?' என்று கேட்டான். நாங்கள் சென்று அழைத்து வருகிறோம் என்று கூறிய ஊர் மக்களிடத்தில், 'நீங்கள் சென்று அழைத்து வரக்கூடாது. அவர் இருக்கும் இடத்திற்கு நானே சென்று வணங்க வேண்டும்' என்று அவர்களை செல்லவிடாமல் தானே ஓடிச்சென்று அவரைக்கண்டவுடன் அவரை முதலில் வணங்கி, 'என்னுடைய கனவிலே நீர் கோயில் எடுப்பித்திருப்பதாக சிவபெருமானே வந்து கூறினார். அந்த கோயில் எங்கே இருக்கிறது. நான் பார்க்க வேண்டுமே' என்றான். அப்பொழுதுதான் அவருக்கே

தெரிந்தது தான் எடுத்த கோயிலைக்கூட சிவபெருமான் ஏற்றுக்கொண்டார் என்று.

'எனக்கு கோயில் எடுக்கவேண்டும்' என்று ஆசை. ஆனால், பொருள் கிடையாது. மக்கள் கிடையாது. பிற செல்வங்கள் கிடையாது. ஆகையினாலே என் மனதிலேயே நானே நினைந்து கொண்டேன். அடியிலேயிருந்து, கருவாக இருக்ககூடிய கல்லிலே இருந்து, செங்கல்லைத்தேடி, உபானம், அதிஷ்டானம், சுவர், சிகரமெல்லாம் அத்தனையும் நான் மனதிலேயே நினைத்துக் கொண்டேன். மனத்தினாலேயே கோயில் எடுப்பித்தேன். அதைத்தான் சிவபெருமானே ஏற்றுக்கொண்டிருக்கிறார் என்று அவர் கூறினாராம் அப்படிக்கூறிய உடன் மீண்டும் ஒருமுறை அவர் காலில் விழுந்து அரசன் வணங்கினான். வெளியிலே இருக்கக் கூடிய செல்வங்களைக் கொண்டு தோற்றிவிப்பதை காட்டிலும் மனதினாலே தோற்றிவிக்க ஆயிரம் மடங்கு உயர்ந்தது என்பதற்குச் சான்று தேவையில்லை என்பது போன்று அவர் காலிலே ஒரு பேரரசன் வணங்கினான். இந்தச் செய்தியை, வரலாற்று நிகழ்ச்சியை சேக்கிழார் தன்னுடைய திருத் தொண்டர் புராணத்தலே, பூசலார் வரலாற்றிலே குறிப்பிட்டிருக்கின்றார்.

*அரசனும் அதனைக் கேட்டங் கதிசயம் எய்தி 'என்னே*
*புரையறு சிந்தை அன்பர் பெருமை!' என் றவரை போற்றி*
*விரைசெறி மாலை தாழ நிலமிசை வீழ்ந்து தாழ்ந்து*
*முரசறி தானை யோடு மீண்டும் தன் மூதுர்ப புக்கான்*

## கல்வெட்டுகள்

சேக்கிழார் பெருமானின் குறிப்பு இந்தக் கோயிலில் இருக்கின்ற கல்வெட்டைப் பிரதிபலிப்பதைப் போலவே இருக்கிறது. அந்தக் கல்வெட்டில் கீழ்வருமாறு உள்ளது.

க்ருதயுகம் என்ற ஒரு யுகம் உண்டு. க்ருதயுகம், த்ரோதாயுகம், த்வாபரயுகம், கலியுகம் என்று நான்கு யுகங்கள் உண்டு. அனைத்தும் அவற்றில் உயர்ந்த தன்மையானதும் ஸத்வங்கள் நிறைந்ததும் அனைத்தும் மங்களகரமாகவே நிகழக்கூடியதுமான ஒரு யுகம் க்ருதயுகம். அந்த க்ருதயுகத்திலே ஆண்ட அரசர்கள் துஷ்யந்தன் போன்ற பேரரசர்கள். அவர்களும் அரசர்கள்தான் அவர்கள் ஆண்ட யுகம், நல்லதே நிறைந்து நின்ற க்ருதயுகம்.

அவர்கள் ஆண்டது மட்டுமல்ல, பெரும் ஆற்றல் படைத்தவர்கள். நினைத்தால் தேவலோகம் சென்று விடமுடியும். தேவர்களை நேர்முகமாக பார்க்கமுடியும். தேவர்களோடு நேர்முகமாக பேசமுடிம் அது மட்டுமின்றி, உயர்ந்த தவ முனிவர்கள் எல்லாம் கூட அவர்களை



ஆடுகின்ற அண்ணல்



அருமானவான் முக்கத்தாள் அமர்ந்து காணும் தேவி பார்வதி -
ஆடு கின்ற பெருமானைக் காணும் அழகு

போற்றுகின்ற அளவிற்கு உயர்ந்த குணம் படைத்தவர்கள். அப்பேர்ப்பட்ட துஷ்யந்தனுக்கு ஒரு அசரீரி கேட்டது. சரீரம் இல்லாத தேவலோகத்திலிருந்து ஒரு ஒலி கேட்டது என்று பண்டைய காலத்து வரலாறு கூறுகிறது. அதில் என்ன ஆச்சர்யம். க்ருதயுகத்திலே ஆள்கின்ற ஒரு அரசன். அனைத்து மங்களங்களையும் பெற்றவன். தேவர்களை நேர்முகமாக பார்க்கக்கூடிய ஆற்றல் படைத்தவன். முனிவர்களாலே போற்ற பட்டவனுக்கு அசரீரி கேட்டது என்றால் அது ஒன்றும் ஆச்சர்யமில்லை! ஆனால் நல்லது என்பதே இல்லாது எங்கோ ஓடி ஒளிகின்ற இந்த கலியுகத்திலே, இந்த கோயிலைத் தோற்றிவித்த அரசனுக்கு அசரீரி கேட்டது என்றால், அது வியக்கத்தக்கது அல்லவா!

***துஷ்யந்த ப்ரமுகைஹி ச்ருதா அம்பரகதா வாணீ ஸரீரம் வினா***
***க்ஷமா நாதைஹி சுர த்ருஸ்விபிஹி யதி க்ருதே,***
***கன்வாதிபிஹி ஸ்வீக்ருதைஹி***
***தன் ந ஆஸ்ச்சர்யம் புனஹ கலியுகே தூரீபவத் ஸத்குனே***
***ஸோ ஸ்ரோஷீத் தாம் கிரம் மஹத் அஹோ விஸ்மாபனம் ஸ்ரீபரஹ***

இந்த கோயிலின் கும்பாபிஷேகத்தை பூசலாருக்காக பின்னர் வைத்துக்கொள், என்று கூறிய அந்த அசரீரி கேட்டது என்ற வரலாற்று குறிப்பு இந்த காஞ்சி கைலாயநாதர் கோயிலில் கல்வெட்டாகக் காணப்படுகிறது.

**சைவசித்தாந்த மரபு**

ஒரு குடிமகன் தோற்றிவித்த கோயில், மனதினாலே தோற்றிவைத்த கோயில் என்று கேட்டபோது கூட அவர் காலிலே வீழ்ந்து வணங்கினான் என்கிற போது அனைத்தைக்காட்டிலும் உயர்ந்தவனாக, பக்குவம் மிகுந்தவனாக ஆகிறான். இந்தக் கருத்தை சைவ சித்தாந்தம் நமக்கு எடுத்துக்கூறுகின்றது. சிவஞான போதம் போன்ற சைவ சித்தாந்த நூல்களிலே, கோயிலை எடுப்பித்து அந்த கோயிலை வழிபடுகின்ற அடியானையே கோயிலாக, பரமசிவனாக, பரமேஸ்வரனாகப் போற்றுகின்ற போது, இவன் சிவனோடு ஐக்கியமாகி விடுகிறான் என்று கூறுகின்றன.

**சிவேன ஐக்யம் கத ஸித்தஹ ததீனஹ**

என்பது சிவஞான போத சூத்திரம்

தமிழ்நாட்டிலே சைவசித்தாந்தம் என்ற மரபு இருந்தது. அதை பின்பற்றிய பெரியவர்களெல்லாம் இருந்திருக்கிறார்கள் என்பதற்கு கிடைக்ககூடிய மிக தொன்மையான கல்வெட்டுச் சான்று இங்குதான் இருக்கிறது. கி.பி. 700ல் இந்த கோயில் எடுக்கப்பட்டது என்று வைத்துக்கொண்டால் கி.பி.700லே தமிழ் நாட்டில் சித்தாந்த மரபானது

பல பிரிவுகளைக்கொண்டு இருந்தது. அந்த பிரிவுகள் அனைத்தையும் பின்பற்றியதாலே இவனுக்கு இருந்த மலங்களெல்லாம் போக்கிவைக்கப் பட்டன. சைவ சித்தாந்த நூல்கள் ஆணவம், கன்மம், மாயை என்ற மலங்களை குறிப்பிடுகின்றன. இவை மனித உள்ளத்தை உயர்நிலை அடையாது தடுக்க கூடிய அழுக்காறுகள். இந்த அழுக்காறுகள் பக்திமேலீட்டினாலேயும், பரமனையே பாடுவதாலும், பரமனடியார் களைப் போற்றுவதாலும், படிப்படியாக குறைந்து இறுதியிலே இந்த ஆன்மாவானது சிவனோடு ஐக்கியமாகின்ற நிலையை உருவாக்கி கொடுக்கும் என்பது சித்தாந்த மரபு. ஆதலினாலே கோயிலுக்குச் செல்வது அடியவரை வணங்குவது அனைத்தும் இந்த அழுக்காறுகளை நீக்கி அதனாலே உய்வதற்காக வகுக்கப்பட்ட வழிகள்.

அந்த வழிகளிலே இவன் நின்ற காரணத்தினால் இவனுக்கு இருந்த மலங்களெல்லாம் போய்பட்டன என்ற கருத்தையும், ஆதலினால்தான் பக்குவமான நிலையிலே நின்று அந்த பரமனை போற்றினான் என்ற கருத்தையும் இந்த கோயிலில் காண்பதால், 7ம் நூற்றாண்டு -8ம் நூற்றாண்டுக்கும் முன்னரே சைவ சித்தாந்தமானது மிகச் சிறந்த நிலையில் இருந்தது என்பதையும், மா மன்னர்கள் கூட அந்த வழியிலே நின்றார்கள் என்பதையும், அதனாலே அடைந்த பக்குவமானது மக்களை காப்பதற்கும், அவர்களுக்கு நல்ல வாழ்க்கையை அளிப்பதற்கும் இறுதியிலே வீடு பேறு பெறுவதற்கு வழிப்படுத்தவும் உறுதுணையாக இருந்தது என்பதை இந்த கோயிலிலே உள்ள கல்வெட்டு எடுத்துக்கூறுகின்றது.

## கோயிலின் கட்டிட அமைப்பு

இந்தக்கோயிலின் ஒவ்வொரு அங்குலமும் முன்னதாகவே தீர்மானித்து அதன்படி அங்குலம் அங்குலமாக கட்டப்பட்டிருக்கிறது. ஒரு புறம் முழுவதும் சிவபெருமானுடைய சம்ஹார மூர்த்தங்கள் காண்பிக்கப்பட்டிருக்கின்றன. மற்றொரு புரம் முழுவதும் சிவபெருமானுடைய அனுக்ரஹ மூர்த்தங்கள் காண்பிக்கப் பட்டிருக்கின்றன.

வாஸ்து சாஸ்திரங்களிலில் மஹா ப்ராஸாதமாகிய விமானம் சிவபெருமானாகவும் அதற்கு முன்னே இருக்க கூடிய மண்டபம் சக்தி தத்துவமாகவும் குறிக்கப்படுகிற மரபு உண்டு. அந்த அடிப்படையிலே, இந்த மண்டபத்தில் இருக்க கூடிய சிற்பங்கள் சக்தி தத்துவங்களாகவே இருக்கின்றன. ஜேஷ்டை, துர்க்கை, லக்ஷ்மி, சரஸ்வதி ஆகிய நான்கு தெய்வங்களுடைய உருவங்களும் இந்த மண்டபத்தை அலங்கரிக்கின்றன. சக்தியினுடைய தத்துவத்திற்கு உருவகம் இந்த மண்டபம்.

தன்னுடைய 300க்கும் மேலான பட்டங்களை அவன் இக்கோயிலில் கல்வெட்டில் பொறித்து வைத்திருக்கின்றான். இங்கு இருக்க கூடிய ஒவ்வொரு சிற்றாலயத்திலும் அவனுடைய பட்டப்பெயர்கள் பொறித்து வைக்கப்பட்டு இருக்கின்றன. அதிலே கூட ஒவ்வொன்றும் நாகரி எழுத்து, அழகான பல்லவ க்ரந்த எழுத்து, சாதாரன பல்லவ க்ரந்த எழுத்து, அன்ன பக்ஷி போன்ற எழுத்து என்று நான்கு விதமான எழுத்துக்களிலே எழுதப்பட்டிருக்கின்றன.

இந்த கோயிலின் மூலமாக தான் எப்படி நிலைத்து நிற்க வேண்டும் என்று நினைத்தானோ அது போல தன்னுடைய அருமை மைந்தன் மகேந்திரனும் இருக்க வேண்டும் என்று அவனையும் இக்கோயிலின் முன்றிலில் ஒரு அழகிய கோயில் கட்ட வைத்து இருக்கிறான். மூன்றாவது மகேந்திரன் கட்டிய கோயிலுக்கு மகேந்திரவர்மேஸ்வர க்ருஹம் என்று பெயர்.

க்ருதயுகம் என்பது எப்போதோ இருந்தது என்று நினைக்காமல், பெரும் க்ருதயுகத்தை, மாபெரும் க்ருதயுகத்தை இந்த நில உலகத்தில் இப்போதே நிலை நிறுத்துவதற்காக முயற்சி செய்த இராஜசிம்மனுடைய் மகன் என்று அவனது கல்வெட்டு கூறுகிறது.

**க்ருதயுகம் அபரம் நிர்மிமானோ மஹேந்த்ரம்**

தான் மட்டுமின்றி தன் மகனையும் ஈடுபடுத்திய பெரிய மன்னன் ராஜசிம்மன். தனக்கும் முன்னிலையிலே தன் மகன் நிற்க வேண்டும் என்பதற்காக, தான் கட்டிய கோயிலுக்கு முன்னேயே அதைக் கட்டும்படி செய்திருக்கிறான்.

தன், மகன் மட்டும் இல்லாமல் அவனுடன் இருந்த தேவிமார் களெல்லாம், அவன் போல் சிறப்பை பெறுவதற்கு உடன் இருந்து ஊக்கம் அளித்து எல்லாரும் கோயில் கட்டவேண்டும் என்று அவர்களையும் ஈடுபடுத்தியிருக்கிறான், ஒவ்வொருவரும் இங்கே ஒருசிறு கோயில் கட்டி இருக்கின்றனர்.

ரங்கபதாகை என்று அவனது தேவியுடைய பெயர். அவனது மற்ற ஒரு தேவியின் பெயர் விலாசவதி. ரங்கபதாகை என்றவள் மகளிர்க்கெல்லாம் கொடி போன்றவள் என்று புகழ் பெற்றவள். **பதாகையா இவ நாரீனாம். ரம்யம் ரங்கபதாகையா** மாற்று அரசர்களையெல்லாம் வெற்றி கண்ட நரசிம்மன் போன்ற பெரும் ஆற்றல் படைத்த இந்த மன்னனை கட்டுப்படுத்துகின்ற அளவிற்கு அன்பு படைத்தவள்.

ரங்கபதாகை என்ற தேவியால் தோற்றுவிக்கப்பட்ட கோயில் என்று ஒரு கல்வெட்டு குறிக்கிறது.

**பல்லவர்களும் - சாளுக்கியர்களும்**

வாதாபி வரையிலே சென்று சாளுக்கிய மன்னனைக் கொன்று அந்த வாதாபி மாநகரையே தோற்கடித்து தரை மட்டமாக்கிவிட்டு வந்த வெற்றி பெருமகன் மாமல்லன். அப்போது சாளுக்கியர் பெற்ற தோல்வி அவர்கள் மனதில் ஆழமாக பதிந்திருந்தது. சாளுக்கிய வம்சத்திலிருந்தவர்களுக்கு பல்லவர்கள் என்றால் பிறப்பிலேயே எதிரிகள் என்ற நினைப்பு. ப்ரகிருத்ய அமித்ரஹ. மாமல்ல குலம் என்றாலே நடுக்கம்.

புலிகேசிக்குபின் வந்த சாளுக்கிய முதலாம் விக்கிரமாதித்தன், பல்லவர்களைத் தோற்கடிக்க வேண்டும் என்று காஞ்சியின்மீது படை எடுத்து வந்தான். படை எடுத்து வந்த போது இராஜசிம்மனுடைய தந்தை பரமேஸ்வரன் காஞ்சியை விட்டு ஓடிவிடுகிறான். விக்கிரமாதித்தன் காஞ்சியை பிடித்து விடுகிறான். பின் பரமேஸ்வரனை தேடிக்கொண்டு திருச்சிராப்பள்ளி வரை சென்றான் என்பதற்குக் கல்வெட்டு சான்றுகள் இருக்கின்றன.

திருச்சிராப்பள்ளியில் இருந்து எட்டு மைல் தொலைவில் உள்ள பெருவளநல்லூர் என்ற ஊரில் பரமேஸ்வரன் விக்கிரமாதித்தனை தோற்கடிக்கிறான்.

**பெருவள நல்லூர் யுத்தே ஜேதா வல்லப பலஸ்ய**

பரமேஸ்வரன் செய்தது ராஜதந்திரம். காஞ்சியில் அவன் படை இல்லாததால் காஞ்சியை விட்டு வெகுதூரம் மாற்றரசனை முன்னேற வைத்து பெருவள நல்லூரில் விக்கிரமாதித்தனை தோற்கடித்ததோடு மட்டுமின்றி தன்படையின் மற்றொரு பகுதியை விக்கிரமாதித்தனுக்கு தெரியாமல் வாதாபிவரை அனுப்பிவைத்திருந்தான். பெருவளநல்லூர் யுத்தத்தில் தோற்ற விக்கிரமாதித்தன் வாதாபியை காப்பதற்காக திரும்பிச் சென்றுவிட்டான். ரணரசிகனாகிய விக்கிரமாதித்தனை அவன் தலைநகர்வரை பரமேஸ்வரன் துரத்திச் சென்று அவனை போரில் தோற்கடித்துக் கொன்றான். ஆகவே பரமேஸ்வரன் ரணரசிக-புரோன்-மர்தனன் என்ற பட்டம் பெற்றான். ரணரசிக விக்கிரமாதித்தனை தோற்கடித்த பரமேச்வரனுடைய மகனான ராஜசிம்மனுக்கு, ரண ஜெயன் என்று ஒரு பட்டப்பெயர்.

சாளுக்கியர்களுடைய மனத்தில் இருமுறை பெற்ற தோல்வி, மாமல்லன் காலத்தில் பெற்றது ஒன்று மீண்டும் விக்கிரமாதித்தன் காலத்தில் பெற்றது இரண்டு. இவை மிகவும் ஆழமாக பதிந்துவிட்டன.

காஞ்சியில் இந்த கோயில் கட்டி 25-30 ஆண்டுகளில் இராஜசிம்மன் மறைந்து விடுகிறான். அவனுடைய மகனும் மறைந்து விடுகிறான்.



கிராதார்ஜுனர்



இரணியனுடன் நரசிம்மர் புரியும் போர்

அப்போது இந்த நாட்டில் பன்னிரண்டு வயது நிரம்பாத நந்திவர்மன் என்ற ஒரு சிறுவன் பட்டத்திற்கு வருகிறான்.

சாளுக்கிய நாட்டில் 730-732ல் இரண்டாம் விக்கிரமாதித்தன் என்ற சாளுக்கிய மன்னன் முடி சூடிக் கொண்டு அரியணை ஏறினான். அவன் இளைஞன். அரியணையில் அமர்ந்து அவன் மீது பல்வேறு இடங்களிலிருந்து வந்த புண்ணிய நீர்களையெல்லாம் அபிஷேகம் செய்யும் போது, வாசனைத் திரவியங்கயுடன் தைலாபிஷேகம் செய்யும் போது, ஏற்பட்ட உணர்ச்சித் துடிப்பால் என்னுடை மூதாதையர்களுக்கு பல்லவர்கள் தோற்றுவித்த இழுக்கை எங்கள் வாதாபி மாநகருக்கு தோற்றுவித்த இழுக்கை, பல்லவ குலத்துக்கு நான் திருப்பி ஏற்படுத்தாத வரையில், காஞ்சி நகரை, தூள் செய்கின்றவரையில் மறுபடியும் இந்த அரியணையில் நான் அமர மாட்டேன்' என்று அவன் வீரச் சபதம் புரிந்து கொண்டானாம். இது முடி சூடும்போது அவன் எடுத்துக் கொண்ட முதல் சபதம், சத்ய பிரதிக்ஞை.

சாளுக்கிய மன்னர்களிலே புலிகேசிக்கு பிறகு மிகவும் சிறந்தவனாக ஆண்டவன் இரண்டாம் விக்கிரமாதித்தன். புலிகேசி இறுதியில் தோற்று இறந்தான். விக்கிரமாதித்தனுக்கு தோல்வி என்பதே கிடையாது. அவ்வளவு சிறந்த வீரன்.

அவன் பட்டத்திற்கு வந்தவுடன் தனது படையை சீர்செய்தான். நேராக தொண்டை மண்டலத்தின் மீது படையெடுத்தான். கண்ணில் பட்ட இடத்தை எல்லாம் அடிப்படித்துக்கொண்டு முன்னேறி வந்தான். அவன் கால் பட்ட இடமெல்லாம் அடி பணிந்தன. வேகமாக காஞ்சியை நோக்கி வருகிறான். உடன்வந்த தானைத் தலைவர்களெல்லாம், அவனுடைய வேகத்தை காட்டிலும், பலமடங்கு வேகத்தோடு வருகின்றனர். காஞ்சியை தரைமட்டமாக்குவதற்காக துடித்துக்கொண்டு முன்னேறி வந்து கொண்டு இருந்தனர்.

காஞ்சியின் எல்லையை அடைந்த உடன் சாளுக்கிய விக்கிரமாதித்தன் தானைத்தலைவர்களை காஞ்சியின் எல்லையில் இருக்கச் செய்துவிட்டு தானே முதலில் உள்ளே நுழைகிறான். மிகு வேகத்தோடு வருகிறான். தன்னுடைய மூதாதையர்களுக்கு ஏற்பட்ட இழுக்கு, தன்னுடைய தலைநகருக்கு ஏற்பட்ட இழுக்கு அனைத்தையும் துடைக்க வேண்டும் என்ற துடிப்போடு உள்ளே நுழைகிறான்.

இந்த கோயில் கட்டி 30 வருடம் தான் அப்போது இருக்கும். அழகிய வண்ண ஓவியங்கள் எல்லாம் பூசப்பட்டு விளங்குகிற இந்தக் கோயிலை பார்க்கும்போது ஒரு மலர்போல, ஓவியம்போல நிற்கிறது. இக்கோயிலின் அழகைப் பார்த்தான். சிறப்பைப் பார்த்தான். இக்கோயில் அவன் மனதைப் பெரிதும் கவர்ந்தது 'இது ஒரு மனிதன் தோற்றுவித்த

கோயிலா? இந்தக் கோயில் இருக்கக்கூடிய காஞ்சியை நாம் அழிக்கலாமா' என்று எண்ணினான். ஆகவே காஞ்சிபுரத்திற்கு ஒரு இம்மியளவு கூட ஊறு விளைவிக்காமல் உள்ளே நுழையுங்கள் என்று தன் தானைத் தலைவர்களுக்கு ஆணையிட்டான்.

**காஞ்சீம் அவினாஸ்யைவ ப்ரவிச்ய** என்று ஆந்திர மாநிலத்தில் உள்ள காடுவால் என்ற இடத்தில் கிடைத்த விக்கிரமாதித்தனுடைய செப்பேடு இதைக் கூறுகிறது. சாளுக்கிய விக்ரமாதித்தன் நேராக இப் பெருங்கோயிலுக்கு வந்து நரசிங்க போத்தரையனாலே தோற்றி வைக்கப்பட்ட இந்தப் பெரிய திருக்கற்றளியை பார்த்து கோயிலில் மனம்லயித்து, இதற்கு இருக்கக்கூடிய நிலங்களையும் செல்வங் களையும் எடுத்துக்காட்டச் சொல்லி அதைப்போல பன்மடங்கு செல்வங்களை இவன் கொடுத்து வழிபாடு செய்யுங்கள் என்று கூறினானாம்.

காஞ்சியை அழிக்க வேண்டும் என்று வந்தவன் விக்கிரமாதித்தன். தான் அழியாமல், பண்பாடு அழியாமல், பண்பாடு மிகுந்தவனாக இங்கு வந்து இந்த கோயிலை வணங்கிய நிகழ்ச்சியை இம்மன்னனே எழுதி வைத்த கன்னடக் கல்வெட்டு இந்த கோயிலில் இன்றும் இருக்கிறது.

அக்காலத்தில் அரசர்களுடன் போருக்கு தேவிகளும் உடன் செல்லும் மரபு உண்டு. விக்ரமாதித்தனுடன் அவன் தேவி லோகமகாதேவி வந்திருந்தாள். இந்தக் கோயிலின் அழகையும், சிற்பங்களையும்,



கின்னரர் - பல்லவர்கால ஓவியம், கயிலாயநாதர் கோயில்



சிவபெருமான் அருகில் திருமால்

ஓவியங்களையும் கண்டு இதன் வாயிலில் உள்ள கோயில் ரங்கபதாகை கட்டிய கோயில் என்பதையும் கண்டு தன்னுடைய தலைவன் விக்கிரமாதித்தன், காஞ்சீபுரத்திலே அடைந்த வெற்றியைக் கொண்டாட, நம் தலைநகரில் இதுபோன்ற ஒரு கோயில் கட்ட வேண்டும் என்று நினைத்தாள் லோகமகாதேவி. எண்ணத்தின் பிரதிபலிப்பாக பட்டடகல்லிலே இதே போல் ஒரு கோயில் கட்டினாள். இதே போன்ற அழகு, அமைதி உடையது அக்கோயில். மாளபிரபா என்ற அழகிய நதிக்கரையிலே இதேபோன்று பெரிய விமானமும், அழகிய மண்டபமும், இனிமையான ஒரு சூழ்நிலையும் கொடுக்கக் கூடிய அந்த கோயிலுக்கு பெயர் லோகமஹா தேவீச்வரம் என்பதாம். அத்தேவியின் பெயராலேயே எடுக்கப்பட்டது. இப்போது அந்த கோயில் விருபாக்ஷர் கோயில் என்று அழைக்கப் படுகிறது. இதிலிருந்து இந்தக் கயிலாயநாதர் கோயில் எவ்வளவு உன்னத கலைக்கு அடிப்படையாக இருந்தது என்றும் தெரியவருகிறது.

சாளுக்கியர்கள் வீழ்ந்தவுடன், ராஷ்ட்ரகூடர்கள் என்ற வம்சத்தைச் சார்ந்த கிருஷ்ணன் என்ற மன்னன் பட்டடக்கல் கோயிலைக் கண்டு, அதன் சிறப்பைக்கண்டு, அதேபோல் எல்லோராவிலே மலையைக் குடைந்து, அழகிய சிற்பங்களும், ஓவியங்களும் நிறைந்த அற்புதமான கோயிலைத் தோற்று வித்திருக்கிறான். அதற்கும் கயிலாய நாதர் ஆலயம் என்று பெயர். கோயிலைக்கட்டி முடித்தபின் அதன் சிற்பி

'இந்தக் கோயில் நான் தோற்றுவித்த கோயில் இல்லை. தேவர்களே வந்து தோற்று வித்த கோயில்' என்று நினைத்ததாக அந்த கோயிலில் உள்ள கல்வெட்டு அப்படியே கூறுகின்றது. அந்தக் கோயிலுக்கும் அடிப்படைக் காரணமாக இருந்தது இந்த கயிலாயநாதர் ஆலயம்.

இவ்வளவு அழகான வரலாற்றுச் சிறப்புமிக்க, கலைச்செல்வங்கள் நிறைந்த இந்தக் கோயிலில் பராந்தகச் சோழனின் கல்வெட்டுகள் இருக்கின்றன. ராஜராஜப் பெருந்தகையின் கல்வெட்டுகள் இருக்கின்றன. ராஜேந்திரனின் கல்வெட்டுகள் இருக்கின்றன. சுங்கம் தவிர்த்த குலோத்துங்கச் சோழனின் கல்வெட்டுகள் இருக்கின்றன.

மூன்றாவது குலோத்துங்கன் காலத்தில் இந்த கோயிலில் வழிபாடு தடைபட்டு விட்டது. இந்தக் கோயிலுக்கு இருந்த நிலம், நிலத்திலிருந்து வரவேண்டிய வரி அனைத்தும் அருகிலுள்ள அநேக தங்காவதம் என்ற கோயிலுக்கு மாற்றப்பட்டது.

சோழர் காலம் முடிந்து, பாண்டியர்கள் சிலகாலம் ஆண்டபின், தென்னகத்துக் கோயில்களுக்கு, மரபுக்கு, பண்பாட்டுக்கு ஒரு பெரும் ஆபத்து வடதிசையிலிருந்து வந்த மாற்றரசர்களின் படை எடுப்பு ஏற்படுத்தியது. அங்கையர்கண்ணி அம்மையின் அருள்பெற்ற குமார கம்பனன் என்ற விஜய நகர வேந்தனின் ஆற்றலினாலே மீண்டும் தென்னகத்தில் பழைய சமயப் பண்பாடு, இந்து அரசர்களுடைய சிறப்பு நிலைபெற்றது.

குமார கம்பனன் கயிலாயநாதர் ஆலயத்தின் அழகை, சிறப்பைக் கண்டு, இந்தக் கோயிலுக்கு சொந்தமான நிலம், நிலத்திலிருந்து வரவேண்டிய வருவாய் அனைத்தையும் திருப்பி அளித்தான் என்று அவனுடைய கல்வெட்டுக் கூறுகிறது.

விஜய நகர பேரரசின் காலத்தில் மீண்டும் இந்த கோயிலின் சிறப்பு தழைத்தது. அதற்குப் பின்னர் 16ம்-17ம் நூற்றாண்டில் அவ்வப்பொழுது பெரியார்கள் வந்து வணங்கியிருக்கிறார்கள்.

இந்தக் கோயிலில் மற்ற கோயில்களை போல், பிற்காலத்தில் எடுக்கப்பட்ட கட்டிடங்கள் பண்டையகாலத்துக் கட்டிடத்தை மறைக்க வில்லை. அமைதியைக் கெடுக்கவில்லை. மூலஸ்தானத்தை முன் மண்டபத்தோடு இணைக்கின்றதாக அமைந்துள்ள ஒரே ஒரு கட்டிட பகுதியைத் தவிர வேறு எதுவும் கிடையாது. இராஜசிம்மன் தோற்றுவித்தது போலவே இன்றும் காட்சியளிக்கும் கோயில் கயிலாய நாதர் ஆலயம்.



# 3. அச்சுதமங்கலம்

சோழவளநாட்டில் திருவாரூருக்கும் நன்னிலத்துக்கும் அருகில் உள்ளது அச்சுதமங்கலம் என்னும் கிராமம். திருவாஞ்சியம் என்னும் பதியிலிருந்தும் இரண்டு கல் தொலைவில் உள்ள இவ்வூரை எளிதில் அடையலாம். இங்கு சோமநாதர் ஆலயம் என்ற வரலாறு கூறும் ஆலயம் ஒன்று உள்ளது. இதன் வாயிலாக அறியும் வரலாறு தமிழகக் கோயிற் கலையில் ஒரு திருப்பு முனையாக அமைகிறது. இந்தக் கோயிலை வங்காளத்தில் இருந்து வந்த ஒரு பெரியவர் கட்டியிருக்கிறார். வங்காளதேசத்தைச் சேர்ந்த கோஸ்வாமி மிச்ரர் என்பவரின் சகோதரர் ஸ்ரீகண்டசம்பு என்பவர் கி.பி. 1182ம் ஆண்டு இதைக் கட்டினார் என்று அந்தக் கோயிலின் அடித்தளத்தில் உள்ள கல்வெட்டுக் கூறுகிறது.

இந்த சீகண்ட சம்பு என்பவர் சோழப் பெருமன்னன் மூன்றாவது குலோத்துங்கச் சோழனுடைய ராஜகுருவாகத் திகழ்ந்தார். ஆம் அக்காலத்தில் சோழப் பெருமன்னர்களுக்கு வங்காள தேசத்தில் இருந்து வந்த சில சைவாசார்யர்கள் ராஜகுருக்களாகத் திகழ்ந்திருக்கிறார்கள். தமிழகத்தில் இருந்து சென்ற சில சிவாசாரியார்கள் காசி அரசர்களுக்கு ராஜகுருக்களாகத் திகழ்ந்திருக்கிறார்கள். அதுபோல. குலோத்துங்கச் சோழன் தனது குருவாகிய இவரை "ஸ்வாமிதேவர்" என்று அழைக்கிறான். அவரால் கட்டப்பட்ட இக்கோயிலில் எழிலார்ந்த சிற்பங்கள் பல திகழ்கின்றன. கல்லாலான இச்சிற்பங்கள் ஊர்த்துவ தாண்டவர், வீணாதர தக்ஷிணாமூர்த்தி, திரிபுராந்தகர், கஜசம்ஹாரர் முதலிய சிற்பங்கள் கலை வண்ணம் திகழ்கின்றன. கருவறை, அதன் முன்னுள்ள மண்டபம், அதன் முன் மகாமண்டபம், திருச்சுற்று இரண்டு கோபுரங்கள் இவற்றின் இடையில் நந்திமண்டபம் பலி பீடம் ஆகிய அனைத்துமே, அன்று கட்டிய போது எப்படி இருந்தனவோ அப்படியே இன்றும் உள்ளன. இவற்றின் அளவுகளும் வியத்தகும் வகையில் ஒன்றுக் கொன்று சரியான விகிதத்தில் அமைந்துள்ளன. ஏறத்தாழ அதே காலத்தில் கட்டப்பட்ட அம்பாள் கோயிலும் சிறப்பாக திகழ்கிறது. இக்கோயிலுக்கு குலோத்துங்க சோழன், தானே நிலங்களை அளித்து கோயில், நந்தவனம், மடவளாகம் முதலிய எடுக்க அளித்திருக்கிறான். அதோடு பல பயிர் நிலங்களுக்கு வரும் வரியை

இக்கோயிலுக்கு அளித்து இங்கு பூஜை, திருவிழாக்கள் நடத்த வகை செய்துள்ளான்.



வாயில் கோபுரம், அச்சுதமங்கலம்

இந்த கோயிலில் சிற்ப பணிபுரிந்த ஆறு சிற்பிகளைப் பற்றியும் கல்வெட்டுக் குறிக்கிறது. குலோத்துங்கச் சோழப் பெருந்தச்சன், ஐந்நூற்றுவ பெருந்தச்சன், ஈஸ்வரதேவ பெருந்தச்சன் என்று மூவர் தலைமை சிற்பிகளாகத் திகழ்ந்திருக் கிறார்கள். இவர்கள் மூவருக்கும் அவரவரோடு உடன் பிறந்தவர்கள் உதவி யாளராக நியமிக்கப் பட்டனர். இக்கோயிலைக் கட்டிய தச்சர்களில் முதன்மை யாகக் குறிக்கப்படுவன் குலோத்துங்கச்சோழனின் பெயரைப் பட்டமாக பூண்டிருக்கிறான். இதிலிருந்து இவன் அரசனின் தலைமைத் தச்சன் எனக் கொள்ளலாம். இக்கோயிலைக் கட்டிய சீகண்ட சிவாசாரியருக்கு ஒருமைந்தன் இருந்தார். ஈஸ்வரசிவன் என்பது அவர் பெயர். அவர் சீகண்ட சிவாசாரியருக்கு பிறகு குலோத்துங்கச் சோழனுக்கு ராஜகுருவாகப் பணிபுரிந்தார்.

அச்சுதமங்கலம் கோயிலைக் கட்டிய மற்றொரு சிற்பி இச்சிவாச்சாரியாரின் பெயரை பட்டமாகக் கொண்டு ஈஸ்வர தேவப் பெருந்தச்சன் என்று அழைக்கப்பெற்றான். அரசன் பெயரையும் அரச குருவின் பெயரையும் பூண்டிருந்த இச்சிற்பிகளே இங்குள்ள எழில் வாய்ந்த சிற்பங்களை தோற்றுவித்தவர்கள்.

சீகண்ட சம்புவின் மகன் ஈஸ்வரதேவர், குலோத்துங்கனின் அரச குருவானார் என்று கண்டோம். இவருக்கு சோமேச்வரன் என்று மற்றும் ஒரு பெயரும் இருந்தது. இவர் கும்பகோணத்துக்கருகில் பல கோயில்கள் தோன்ற காரணமாயிருந்தார். கும்பகோணத்திலும், கும்பகோணத்தைச் சுற்றிலும் சோமேச்சுவரர் என்று பெயர் பெற்ற கோயில்கள் இவரால் தோன்றியவை.

அச்சுத மங்கலம் இவர் பெயரால் சோமநாதமங்கலம் என்றும் பெயர் பெற்றது.

முதலில் இவ்வூரின் பெயர் அச்சுதமங்கலம் என்றுதான் இருந்தது. இக்கோயில் கட்டியபின்னர், இவ்வூரைச்சுற்றி பல சிற்றூர்கள் தோன்றின. சோமநாத நல்லூர், சோமநாத மங்கலம், சோமநாதச் சதுர் வேதிமங்கலம், சிவபாத சேகரமங்கலம் என்று அவை பெயர் பெற்றன. சோமநாத நல்லூர் என்பது வேளாண் குடிமக்கள் வாழ்ந்த பகுதி. நல்லூர் என்று பெயர் பெற்ற பண்டைய ஊர்கள் உழுகுடி மக்கள் வாழ்ந்த ஊர்களாகும். சோமநாத மங்கலம் சோமநாதச்சதுர் வேதி மங்கலம் என்பவர் அந்தணர் வாழ்ந்த ஊர்களாகும். மூன்றாம் குலோத்துங்கனுக்கு 'சிவபாதசேகரன்' என்று ஒரு பட்டப்பெயர் இருந்தது. இவனுக்கும் 200 ஆண்டுகளுக்கும் முன்னர் ஆண்ட முதலாம் இராஜராஜனுக்கும் இப்பட்டப்பெயர் இருந்தது.

1182ல் இக்கோயில் கட்டப் பட்டதிலிருந்து 1220 வரை இக்கோயிலுக்கு மூன்றாம் குலோத்துங்கச் சோழன் பல தானங்களை கொடுத்துள்ளான். தனது இராஜகுரு கட்டியது ஆதலின் இக்கோயிலில் அவனுக்கு சிறந்த ஈடுபாடு இருந்தது. தன்னுடைய ஐந்தாவது ஆட்சி ஆண்டில், இக்கோயில் உள்ள நிலம், ஊர் குடியிருப்பு நத்தம், நந்தவனம் ஆகியவை வரிகொடுக்கத் தேவையில்லை என அரசன் வரியை ரத்து செய்துள்ளான். இக்கோயிலைச் சுற்றி சில எண்ணெய் வணிகர்கள் குடி ஏற்றப்பட்டனர். இவர்களுக்கு மனை எடுத்து கொடுக்கப் பட்டது. இவர்கள் கோயிலுக்கு விளக்கெரிக்க தினம்தொறும் எண்ணெய் அளக்க வேண்டும். மேலும் 15 வேலி நிலத்தை அச்சுத மங்கலத்தில் இருந்து பிரித்து சோமநாத மங்கலம் எனப்பெயர் அளித்து பயிர் செய்ய வகை செய்தான். இந்நிலத்தின் வருவாயை இக்கோயிலுக்கு அளித்தான். ஆனால் இது போதாததாக



வாயில் கோபுரச் சுவரில் உள்ள உருவம், சோமநாத ஆண்டார்

காணப்பட்டது. ஆதலின் மேலும் 21 1/2 வேலி நிலத்தை அச்சுத மங்கலத்திலிருந்தும் பிரித்து சோமநாத மங்கலத்துடன் இணைத்து பெரியதாகச் செய்தான். இந்நிலங் களிலிருந்து அரசனுக்கு கொடுக்க வேண்டிய வரிகளை கோயிலுக்கு கொடுக்க ஆணையிட்டான்.

இங்குள்ள எழிலார்ந்த சிற்பங்கள் 1200 ஆண்டளவில் சோழர்கலை எவ்வாறு இருந்தது என்பதற்கு எடுத்துக் காட்டாகத் திகழ்கின்றன.



# 4. திருக்கோயிலூர்ப் பாட்டு

முல்லைப்பாட்டு என்றும் குறிஞ்சிப்பாட்டு என்றும் கேள்விப்பட்டிருக்கிறோம். பட்டினப்பாலையை வஞ்சி நெடும் பாட்டு என்பதும் அறிவோம். சங்கப்பாடல்கள் பத்தின் தொகுப்பைப் 'பத்துப்பாட்டு' என்று அழைப்பதும் அனைவருக்கும் தெரியும். அவ்வாறு இருக்க இது என்ன 'திருக்கோவலூர்ப் பாட்டு' என்று நினைக்கிறீர்களா! ஆம், இந்த சங்கப்பாடல்களை நினைவில் கொண்டுதான் திருக்கோயிலூரில் உள்ள ஒரு பாடல் கல்வெட்டைத் திருக்கோயிலூர்ப் பாட்டு என்று கூறுகிறேன்.

சங்கப்பாடல்களைப்போல் இக்கல்வெட்டு முழுவதும் ஒரு நெடும்பாடலாக ஆசிரியப்பாவில் திகழ்கிறது. இக்கல்வெட்டை இயற்றியவன் சங்கப் பாடல்களை நன்கு கற்றுச் சுவைத்தவன். இப்பாடலில் சங்கப் புலவன் கபிலனை இவன் குறித்துள்ளான். இக்கல்வெட்டு தொன்மை மரபில் இயற்றப் பட்ட ஒரு சிறந்த இலக்கியமாகவும், கல்வெட்டுச் செய்தியை இலக்கியப் பாணியில் அமைத்ததால் ஒரு புதுமை இலக்கியமாகவும் திகழ்கிறது. இக்கல்வெட்டு தமிழகத்தின் தலைசிறந்த மாமன்னன் இராஜராஜன் காலத்தது என்று அறியும்போது இன்னும் பெருமிதம் அடைகிறோம். இராஜராஜனது அவையில் அறங்களை எடுத்துரைக்கும் சோழ அதிகாரியாகத் திகழ்ந்த வீதிவிடங்கன் கம்பன் என்பவனால் கொடுக்கப்பட்ட கொடையை இது குறிக்கிறது. ஆதலின் கல்வெட்டு வீதி விடங்கனைப் புகழ்வதாக முடிகிறது.
பத்துப்பாட்டில் சில பாடல்கள்

*குன்று சூழிருக்கை நாடு கிழவோனே - மலைபடுகடாம்*
*ஒளிறிலங் கருவிய மலை கிழவோனே - பெரும்பாண்*
*காவிரி புரக்கு நாடு கிழவோனே - பொருநர்*
*பழமுதிர் சோலை மலை கிழவோனே - முருகாற்றுப் படை*

என முடிகின்றன.

இம்முடிவுகள் போலவே இக்கல்வெட்டும் வீதிவிடங்கனைப் புகழ்ந்து 'நலத்தரு பொன்னிநாடு கிழவோனே' என்று முடிகிறது. இம்முடிவே. இக்கல்வெட்டை இயற்றிய புலவன் பத்துப்பாட்டுக்களை தன் கண்

முன்னே நிறுத்தி இக்கல்வெட்டை இயற்றியிருக்கிறான் எனப் புலப் படுத்துகிறது.

இனிக் கல்வெட்டைப் பார்ப்போம். மற்ற கல்வெட்டுக்களைப் போல் இக்கல்வெட்டும் அன்றாண்ட அரசனாகிய இராஜராஜனின் புகழைக் கூறுவதுடன் தொடங்குகிறது.

இராஜராஜன் - அவனது தாய் - அவள் பிறந்த மலையமான் குலம் மலையர்களின் தலைநகராம் கோவலூர் - அங்கு சங்கப் புலவன் கபிலன் விண்ணுலகெய்திய கல் - அங்குள்ள சிவபிரான் - சிவபிரானின் வழிபாட்டுக்குக் கொடுக்கப்பட்ட நிலம் - அதன் வருவாயில் யார் யார் பங்கு பெற்று வழிபாடு செய்யவேண்டும் எனப் படிப்படியாகக் கூறி இராஜராஜனிடம் விண்ணப்பித்து, அவன் அனுமதி பெற்று அதற்காக தானம் அளித்தவன் வீதிவிடங்கன் கம்பன் - அவனே நலந்தரு பொன்னி நாடு கிழவோன்" எனக் கல்வெட்டு முடிகிறது.

பாட்டின் அமைதியும் பத்துப்பாட்டில் வரும் நெடும்பாட்டுக்களைப் போலவே அமைந்திருக்கிறது. நல்ல இனிய தமிழ். இலக்கிய நயம் சிறக்க ஒவ்வொரு பகுதியும் அமைக்கப்பட்டுள்ளன. கற்பனையின் சிகரத்தையே ஒவ்வொரு பகுதியும் எட்டிப் பிடிக்கின்றன என்றால் அது மிகையல்ல. அவ்வளவு சுவையுள்ள இலக்கியம் இது. சொல்லினிமையும் பொருள் செறிவும் நிறைந்து நிற்கும் இக்கல்வெட்டைப் பகுதி பகுதியாக அறிவது மிகவும் சுவை பயக்கும்.

**இராஜராஜன்**

முதல் பகுதி இராஜராஜனைக் குறிக்கிறது. இராஜராஜன், தண்டமிழ் நாடன், செம்பியர் பெருமான். அவன் தான் எவ்வளவு பெரிய வீரன்! கதிரவனின் வழியில் வந்த மன்னன். மாபெரும் மாற்றரசர்களை எல்லாம் வென்று புறங்கண்டவன் பாண்டியர்களை மலைக்கு ஓட்டியவன். சேரர் வஞ்சியைக் கைப்பற்றியவன், கங்கபாடி இவனடி பணிந்தது. உதகை இவனது சீற்றத் தீயால் பற்றிச் சாம்பலாயிற்று. ஈழ மண்டலத்தைத் தன் தண்டால் வெற்றி கண்டவன். தங்கள் முன்னோர் இமயத்தில் பொறித்த புலிச் சின்னத்தை புதுக்க வடதிசை நோக்கிப் படை செலுத்தியவன் இவன். இவனது வெற்றிக் குடைக்கீழ் பெரும் நாடுகள் அடங்கின. அவ்வளவு வெற்றிச் சிறப்பு வாய்ந்தவன் சண்ட பராக்கிரமன். இந்திர சமானன் என்றும் ராஜசர்வஞன் என்றும் புகழ்கொண்ட மன்னன். இராஜராஜன் என மாபெரும வீரனாக இவன் சித்திரிக்கப்படுகிறான்.

*ஜய ஜய (வென்று) மொழி*
*பன்னிய வாய்மையில் பணியப்*

*பொன்னியல் விசும்பரில் கதழும் பசும்பரி*
*வெள்ளுளை நெடுஞ்சுவற்று எடுத்த குறுந்துணைப் படுங்க*
*நள்ளுறப் பொன்ஞாண் வள்ளுற வச்சத்*
*தனிக்கா லரசு மனக்காற் கங்குல்*
*குழம்புபடு பேரிருள் பிழம்புபட உருட்டிய*
*செஞ்சுடர் மௌலி வெஞ்சுடர் வானவன்*
*வழிமுதல் வந்த மஹிபதி வழிமுதல் அதிபதி*
*நரபதி அசுவபதி கஜபதி கடலிடங் காவலன்*
*மதிமுதல் வழுதியர் வரைபுக*
*மற்றவர் தேவியர் அழுதுயர் அழுங்கலில் அழுங்கப்*
*பொழுதியல் வஞ்சியிற் காஞ்சி வகுத்த*
*செஞ்சிலைக் கலிங்கன்...*
*புதுமலர் வாகை புனைந்து நொதுமலர்*
*கங்கபாடிக் கவ்விக் கொங்கம்*
*வெளிப்படுத் தருளி யளிப்படுத் தருளிய*
*சாரல் மலையட்டுஞ் சேரன் மலைஞாட்டுத்*
*தாவடிக் குவட்டின் பாவடிச் சுவட்டுத்*
*தொடர்நெய்க் கனகந் துகள் எழ நெடுநற்*
*கோபுரம் கோவை குலைய மாபெரும்*
*புரிசை வட்டம் பொடிபடப் புரிசைக்*
*கதைகவின் படைத்த சூளிகை மாளிகை*
*உதைகை முன்னாள்ளெரி கொளுவி உதைகை*
*வேந்தைக் கடல்புக வெகுண்டு போந்து*
*சூழமண்டலந்தொழ ஈழமண்டலமும்*
*கொண்டு தண்டு விட்டருளிப் பண்டு*
*தங்கள் திருக்குலத்தோர் தடவரை எழுதிய*
*பொங்கு புலிப்போத்துப் புதுக்கத்*
*துங்கத் திக்கினிற் சேனை செலுத்தி மிக்க*
*ஒற்றை வெண்குடைக்கீழ் இரட்டை வெண்கவரி*
*தெற்றிய அனலந் திவள வெற்றியுள்*
*வீற்றிருந் தருளிய வேந்தன் போற்றிருந்*
*தண்தமிழ் நாடன் சண்ட பராக்ரமன்*
*திண்டிறல் கண்டன் செம்பியர் பெருமான்*
*செந்திரு மடந்தைமன் சீராஜராஜன்*

**இராஜராஜனின் தாய்**

இதுவரை இராஜராஜன் சிறப்பினைக் கூறிய கல்வெட்டு இப்பொழுது இவனது தாயை கூறுகிறது. மாவீரனாகிய இப்புலியைப் பெற்றெடுத்த இவன் தாயைப் 'புலியைப் பயந்த பெண் மான்' என்று கல்வெட்டுக்

கூறுகிறது. எவ்வளவு உயர்ந்த கற்பனை! வீரமும் மென்மையும் இச்சொற்களிலே எடுத்துரைக்கப்பட்டுள்ள புலமை ஈடிணையற்றது. புலி என்னும் சொல் வீரத்தைச் சுட்டுவதோடன்றி புலிக்கொடியுடைய சோழன் என்பதையும் சுட்டுவது புலவனின் திறமைக்கு எடுத்துக்காட்டு. பெண்மையின் சிறப்பனைத்தையும் பூண்ட இராஜராஜனின் தாயைப் பெண் மான் என்னும் கல்வெட்டு அவளை மாதவிக் கொடி என்றும் அழைக்கிறது. இப்புண்ணியத்தாய் இராஜராஜனின் தந்தை சுந்தர சோழன் இறந்தபோது அவனுடன் தீப்பாய்ந்தாள். பூதப் பாண்டியன் இறந்தபோது தடுத்த மக்களை இகழ்ந்து தீப்பாய்ந்தாளே பெருங்கோப்பெண்டு அவள் மரபில் வந்தவள் அல்லவா? கொழுந்து விட்டெரியும் தனது கணவனின் ஈமத்தீயின் மத்தியிலும் அவனது திருப்புயத்தில் முயங்கிய உத்தமி என அவளைப் புகழ்கிறது கல்வெட்டு.

*இந்திர சமானன் இராஜசர்வஞன் என்னும்*
*புலியைப் பயந்த பெண்மான்*
*கலியைக் கரந்து கரவாக் காரிகை சுரந்த*
*முலைமகப் பிரிந்து முழங்கெரி நடுவணும்*
*நிலை பெறுந் தூண்டா விளக்கு*
..................................
*அரைசர் தம்பெருமானதுல னெம்பெருமான்*
*பரைசை வண்களிற்றுப் பூழியன் விரைசெயு*
*மாதவித் தொங்கல் மணிமுடி வளவன்*
*சுந்தர சோழன் மந்தர தாரன்*
*திருப்புய முயங்குந்தேவி*

### மலையர் குலதெய்வம்

இராஜராஜனைப் பெற்றெடுத்ததாலேயே சிறந்த இவ்வுத்தமி தன் கணவனுடன் தீப்பாய்ந்த தெய்வப் பெண் எனில் அவளது சிறப்பைக் கூறவும் இயலுமோ! இவ்வளவு சிறந்த பெண் பிறக்கும் பேறு பெற்றது மலையமான் குலம். (இராஜராஜனின் தாய் மலையமான் குலத்துதித்தவள்)

அவ்வளவு சிறந்த மலையமான் குலத்தோர் தங்கள் குல தெய்வமாகப் போற்றிய புண்ணியக்கோயில் திருக்கோவலூர்க் கோயில். இவ்வூர் தென்திருக்கோவலூர் என்றழைக்கப்பட்டது. புண்ணிய அக்கோயில் பெண்ணை ஆற்றங்கரையிலுள்ளது. குடதிசையில் தோன்றி அருகில், சந்தனம் முதலிய வாசனை மரங்கள் நிறைந்த குன்றின் உச்சியிலிருந்து பாய்ந்து புது மதகுகளும் கலிங்குகளும் ஆங்காங்கே விளங்கப் பொங்கி வரும் அலைகளுடன் பாய்ந்து வரும் ஆறு பெண்ணையாறு. அப்பெண்ணையாற்றின் கரையில் அக்கோயில் உள்ளதால் புண்ணிய தீர்த்தம் என வணங்கப்பெறும்.

*............விருப்புடன்*
*வந்துதித் தருளிய மலையர் திருக்குலத்தோர்*
*அன்மை யாக தமரகத் தொன்மையில்*
*குலதெய்வ மாகக் கொண்டது நலமி தங்*
*கவசந் தொடுத்த கவின்கொளக் கதிர்நுதிந்*
*துவசந் தொடுத்த சுதைமதிற் சூழகழ்*
*புளகப் புதவக் கனகக் கோபுர வாயில்*
*மாட மாளிகை வீதித் தேசாந்தன்மைத்*
*தென்திருக் கோவலூரி சாந்தன்றக் கவன்றது*
*மிசாங் குடக்குக் கலுழி குணக்கு*
*கால்பழுங்கக் காளாகருவும கமழ்சந்தனமும்*
*தாளார் திரள்ச் சரளமு நீளார்*
*குறிஞ்சியும் கொகுடியும் முகடுயர் குன்றில்*
*பறிந்துடன் வீழப் பாய்ந்து செறிந்துயர்*
*புதுமதகு இடறி பொரக் கலிங்கு இடந்து*
*மொதுமொது முதுதிரை விலகிக் கதுமென*
*வன்கரை பொருது வருபுனல் பெண்ணைத்*
*தென்கரை உள்ளது தீர்த்தத் துறையது*

**கபிலக்கல்**

மலையர்குலத் தெய்வமான அக்கோயிலில் அருகில் இருக்கும் கல் கபிலக்கல் என்று அழைக்கப்படுவது. ஆம், முத்தமிழ் புலவனாக விளங்கினானே சங்கப் புலவன் கபிலன் அவன் பாரியின் பெண்ணை மலையமானுக்குக் கொடுத்து தன்பணி தீர்ந்ததென எண்ணி வீடு பேற்றை நினைந்து தீயில் பாய்ந்து உயிர் நீத்த இடம் அக்கல் என்று கல்வெட்டுக் கூறுகிறது.

*மொய் வைத்தியலு முத்தமிழ் நான்மைத்*
*தெய்வக் கவிதைச் செஞ்சொற் கபிலன்*
*மூரிவண் தடக்கை பாரிதன டைக்கலப்*
*பெண்ணை மலையற் குதவிப் பெண்ணை*
*அலைபுனல் அழுவத்து அந்தரி ட்சம்செல*
*மினல்புகும் விசும்பின் வீடு பேறெண்ணி*
*கனல்புகும் கபிலக் கல்லது*

சங்கப் புலவன் கபிலனைப் பற்றிச் சில புதிய செய்திகளை இக்கல் வெட்டுக் கூறுகிறது. கபிலன் பாரியின் பெண்ணை மலையர்க்குக் கொடுத்தான் என்பது ஒரு செய்தி. திருக்கோயிலூரில் கபிலன் வீடுபேறெண்ணி தீப்பாய்ந்து உயிர் நீத்தான் என்பது மற்றொரு செய்தி.



வீரட்டானேச்வரர் கோயிலின் அருகில் பெண்ணை ஆற்றுக்கரையில் உள்ள கபிலக்கல்

"பாரி தன் அடைக்கலப் பெண்ணை மலையர்க்குதவி" என்பது கல்வெட்டு வாசகம். அடைக்கலப் பெண் என்று ஒருமையிற் குறிக்கப்பட்டுள்ளது. பாரி மகளிர் இருவர் என்பது சங்கச் செய்தி.

ஆய்தொடி அரிவையர் (புறம் 117)

குறுந்தொடி மகளிர் (புறம் 113)

இவர் யாரென்குவை யாயின்... நெடுமாப் பாரி மகளிர் (புறம் 201)

பரந்தோங்கு சிறப்பிற் பாரிமகளிர் (புறம் 201)

என்றும் கபிலரே பாடிய பாட்டுக்கள் பன்மையில் கூறுகின்றன. பாரி மகளிர் பாடிய பாடலில் 'யாம் எந்தையும் இலமே' எனப் பன்மையில் குறித்துள்ளனர். அவன் மகளிரை பார்ப்பார் படுக்கக் கொண்டு போவான் பறம்பு விடுத்த கபிலர் பாடியது' (புறம் 113) என்றும்; 'அவன் மகளிரைக் கொண்டு போம் கபிலர் பறம்பு நோக்கி நின்று சொல்லியது' (புறம் 111) என்றும், புறநானூற்றின் பண்டைய அடிக்குறிப்புக்களும் பன்மையிலேயே கூறுகின்றன. அவ்வாறு இருக்க கல்வெட்டில் ஒரு பெண் மட்டும் குறிக்கப்பட்டுள்ளது குறிப்பிடத் தக்கது. மேலும் புறநானூற்றின் அடிக்குறிப்பு கபிலன் பாரி மகளிரைப் பார்ப்பார்ப் படுத்தான் எனக் குறிக்கிறது. ஆனால் கபிலர் பாரியின் பெண்ணை மலையமானுக்குக் கொடுத்தார் என்று கல்வெட்டுக் கூறுகிறது.

தமிழ் நாவலர் சரிதை என்னும் தொகுப்பில் பாரி மகளிரைப் பற்றிய சில செய்திகள் உள்ளன. பாரி மகளிருக்கு அங்கவை சங்கவை என்று பெயர். அவர்களில் அங்கவையை மலையமானுக்கு மணம் செய்து கொடுத்தனர். அம்மலையன் பெயர் தெய்விகன் என்பதாகும். இம்மணம் திருக்கோவலூரில் நடந்தது என்ற செய்திகள் தமிழ் நாவலர் சரிதையில் காணப்படுகின்றன.

*"சேரலர்கோன் சேரல் செழும்புத்திருக் கோவ*
*லூரளவுந் தான் வருக வுட்காதே-பாரிமகள்*
*அங்கவையைக் கொள்ள அரசன் மனமியைந்தான்*
*சங்கியாதே வருக தான்"*

என்பது ஒரு பாடல். இப்பாடலில் திருக்கோவலூர் அரசன் அங்கவையை மணந்துகொள்ள இசைந்துள்ளான் என்ற செய்தி காண்க. 'சங்கவையையும் கூடத்தான்' என்றும் ஒரு பாடம் உண்டு. மேலும் சில பாடல்கள் ஒரு பெண்ணுக்கு மட்டுமே மணம் நடந்ததாக குறிக்கின்றன. ஒளவை பாண்டியனைத் திருமணத்துக்கு வர எழுதிய பாடலில்:

*...............................தையற்கு*
*வேண்டுவன கொண்டு விடியல் பதினெட்டா நாள்*
*ஈண்டு வருக இயைந்து*

என்று உள்ளது. அதேபோல் சேரன், சோழன், பாண்டியன் ஆகிய மூவரும் வந்ததாகக் கூறும் பாடல்.

*"சேரனும், சோழனும், பாண்டியனும்*
*மங்கைக் கருகிட வந்து நின்றார் மணப் பந்தரிலே"*

என மங்கை ஒருவளையே குறிக்கிறது. திருமணம் திருக்கோவலூரில் நடந்தது என்று ஒரு பாடல் குறிக்கிறது.

*கருணையால் இந்த கடல் உலகங் காக்கும்*
*வருணனே மாவலையான் கோவற் பெருமணத்து*
*நன்பாரி தாழிகொண்ட நன்னீரது தவிர்த்து*
*பொன்மாரி யாகப் பொழி*

இப்பாடல்களிலிருந்து ஒன்று புலப்படும். பாரி மகளிரில் ஒருவரை மலையமான் மணந்து கொண்டான். அத்திருமணமும் திருக்கோவலூரில் நடந்தது என்ற செய்தியும் இராஜராஜன் காலத்துக் கல்வெட்டிலும் இருப்பது அறியற்பாலது. தமிழ் நாவலர் சரிதை கி.பி.17ம் நூற்றாண்டில் எழுதப்பட்டது எனத் தமிழ்ப் பேரறிஞர் கருதுவர். பாரிமகளை மலையமான் மணந்தது இராஜராஜன் காலம் வரை புகழ் பெற்றிருந்தது என்பதும் அது அண்மைக் காலம் வரை வழக்கிலிருந்தது என்பதும் தெளிவு.

**கோவலூர் வீரட்டானம்**

இவ்வளவு சிறப்பு வாய்ந்தது திருக்கோவலூர் வீரட்டானம். எட்டு வீரட்டானம் என்று புகழப்படும் வீரட்டானங்களில் இதுவே தொன்மையானது. பெரும் யோகிகள் எல்லாம் வந்து தங்கும் பெருமையுடையது. இங்கு ஆதவனைத் தொழும் அந்தணர்கள் ஆகமத் தொழில் வழுவாது அர்ச்சனை புரிவர். எழில்மிகு பாவையர் நாட்டியம் புரிவர். இசைக் கருவிகள் எல்லாம் இனிமையாக இசைக்கும் ஒலி நிரைந்தது. பக்தர்கள் எல்லாம் மனம் நிறைந்து பாடுவர். அரஹர என்னும் பேரொலி விண்ணைப் பிளக்கும் வகை பக்தர்கள் குழுமிய புண்ணியத்தலம், ஈசர் கோயில் எனக் கோவலூர் வீரட்டானம் கல்வெட்டில் புகழப்படுகிறது.

*புனல்வளர் பேரெட்டான வீரட்டானம்*
*அனைத்தினும் அனாதியாயது நினைப்பினும்*
*உணர்தற்கு அரியது யோகிகள் உள்ளது*
*புணர்தற்கு இனியது பொய்கைக் கரையது*
*சந்தன வனத்தது சண்பகக் கானது*
*நந்தன வனத்தின் நடுவது பந்தல்*
*கரும்படை பெண்பூங் கரும்பிடை துணித்தர*
*ஆட்டொலி ஆலை அயலது பாட்டொலிக்*
*கருங்கைக் கடையர் பெருங்கைக் கடைவாள்*
*பசுந்தாரட்டியும் செந்நெல் பழனத்*
*தசும்பார் கணியும்..... அருக்கன் அருச்சனை முற்றிய*
*நான்மறை தெரிந்து நூன்முறை உணர்ந்து ஆங்கு*
*அருச்சனா விதியொடு தெரிச்ச ஆகமத் தொழில்*
*மூவெண் பெயருடைய முப்புரி நூலோர்*
*பிரியாத் தன்மை பெருந்திரு உடையது*
*பாடகச் சீரடி பணைமுலைப் பாவையர்*
*நாடகத் துழதி நவின்றது*
*சேடகச் சண்டையும் கண்டையும் தாளமும் காளமும்*
*கொண்டதிர் படகமும் குளிறு மத்தளங்களும்*
*கரடிகைத் தொகுதியும் கைம்மணிப் பகுதியும்*
*முருடியல் திமிலை முழக்கமும் மருள்தரு*
*வால்வளைத் துணையும் மேல் வளைத் தணையும்*
*கருப்பொலி மேகமும் கடலும் எனக் கஞுலி*
*திருப்பொலி திருப்பலி சினத்து விருப்பொலி*
*பத்தர் தம் பாடல் பயின்றது*
*முத்தமிழ் நாவலர் நாற்கவி நவின்றது*
*ஏவலில் அருஷையோடு அரகர எனக் குனித்து*

*அடிமை செய் பருஷையர் பகுவிதம் பயின்றது*
*அருஷை முக்கண்ணவன் உறைவது கடவுளர் நிறைவது*
*மண்ணவர் தொழுவது வானவர் மகிழ்வது*
*மற்றும் இன்ன வளங்கொள் மதிற் பதாகை*
*தெற்றுங் கொழுநிழல் சிவபுரத்தாற்கு*

### கோயிலுக்கு தானம்

வீரட்டானத்து உறைகின்ற பெருமானுக்கு வழிபாட்டுக்குக் கொடுத்த தானத்தையும் கல்வெட்டு பாடலாகவே கொடுத்துள்ளது. கொடுத்த தானம் தேவன்குடி என்னும் ஊர் நிலமாகும். 12 சாண் நீளம் கொண்டது ஒரு கோல் என்னும் அளவு. இந்த 12 சாண் கோல் அளவால் 160 குழி கொண்டது ஒரு மா நிலம். இவ்வாறு 6 1/4 வேலி நிலம் தானமாக அளிக்கப்பட்டது. (சற்றேறக்குறைய 20 மா கொண்டது ஒரு வேலி) இந்நிலத்திலிருந்து 1 மா நிலத்துக்கு 6 கலம் இறையாக 720 கலம் அளிக்கவேண்டும் என்று நிர்ணயிக்கப்பட்டது. அந்நிலத்தில் வரும் வருவாயிலிருந்து என்னென்ன செய்தல் வேண்டும் என்றும் கல்வெட்டுக் குறிக்கிறது.

*பன்னாள் நிலைபெற முன்னாள் உரவோன்*
*செய்த தானம் தேவன் குடியில்*
*அலகியல் மரபில் அமைந்து உலகியல்*
*சாண் பன்னிரண்டில் அமைந்த தனிக்கோல்*
*போற்றுற வளந்த நூற்றறுபது குழி*
*மா வொன்றாக வந்த வேலி ஆறே காலில்*
*அந்தங் களைந்து நீங்கிய நிலத்தால்*
*நீங்கா நெற்றுகை ஆங்கொரு மாவிற்கு அறுகலமாக*
*கொழு நூற்றுவராடும் கூட்டி அளந்த*
*எழுநூற்றிருபதில் இறை மகற்கு உரிமை*
*நாழி எட்டான் வாழி அட்டானக்*
*கருங்கால் ஒன்றால் செங்கை இரண்டிட்டு*
*அளந்த நெல்லாற் றறுபதினில் களைந்த*
*நிவந்தத் தன்மை நினையில் உவந்து*
*நஞ்சுண்ட வர்க்கு அமுதுண நயந்த*
*ஒத்தெண் வழுவாப் பத்தெண் குத்தல்*
*பழ நெல்லரிசி பன்னிரு நாழிக்கு*
*பதினை இரட்டி நெல் பதினை இரட்டியும்*
*குறுவாளான நெடுவாள் நயனிக்கு*
*ஓரிரு நாழி யுள்படுத் துயர்ந்தநெல்*
*நாலெட்டான நாழியும்*

*மிளகு முப்பிடிக்கு செல்லக் குடுத்த நெல் லஞ்ஞாழியும்*
*சூழ் கறி துவன்ற போழ் கறி கொள் நெல்*
*நால் உரி உருக்கிய நறு நெய்*
*உழக்கரை தனக்கு வழக்கரை வினவில்*
*முந்நாழியுந் தயிர் முந்நாழிக்கு ஆங்கு*
*அறுநானாழியும் அடைக்காய் அமிதுக்கு*
*பந்திரு உழக்கும் பரிசாரகமாணன்*
*நான்கினுக்கு நெல் அறு நானாழியும்*
*திருமடைப் பள்ளிப் பெருமடைக்குதவும்*
*இந்தன ஒருவற்குத் தந்த முன்னாழியும்*
*ஆக நெற்கலமும் ஏக னற்றிவசம்*
*அப்பரிசு இயற்றலில் அறு வகை இருதுவும்*
*இப்பரிசு இயற்றி எழுந்து நேரான*

தேவன் குடியிலிருந்து வந்த நெல் 720 கலமும் கொண்டு செய்ய வேண்டியவை

| | |
|---|---|
| நாள் 1க்கு அமுது படிக்கு 18 குத்தல் | |
| பழநெல்லரிசி 12 நாழிக்கு | 32 நாழி நெல் |
| மிளகு 3 பிடிக்கு | 5 நாழி நெல் |
| கறி 4 உரி | |
| நெய் 1 உழக்கு | 3 நாழி |
| தயிர் 3 நாழி | 24 நாழி |
| அடைக்காயமுதுக்கு | 12 உழக்கு |
| பரிசாரகர் நால்வர்க்கு | 24 நாழி |
| விறகுக்கு | 3 நாழி |

பிற ஊர்களில் அளிக்கப்பட்ட நிலங்களின் அளவுகள்

| | |
|---|---|
| கோவலூரில் 15 மா; | இலுப்பைக்கால் 2 மா |
| மேட்டுக் கொல்லை 3 மா; | புல்லாலிபுரம் 5 மா |
| அலஞ்செறு 5 மா; | தேங்காச் செறு 2 மா |
| ஆக மொத்தம் 32 மா; நிலம் | |

இந்நிலங்கள் அர்ச்சனாபோகத்திற்காக அளிக்கப்பட்டன. மேலும் பிற இடங்களில் கொடுக்கப்பட்ட நிலம்.

| | |
|---|---|
| முணங்கல் பூண்டி 36 மா; | களர் நிலம் 10 மா |
| பகவந்தக் கழனி 28 மா; | காயம்பள்ளம் 2 மா |

படித்துழான் வேலி 8 மா; கணியக்கழனி 8 மா

பழனக்காடு 5 மா

ஆக இவற்றில் இருந்து வந்த நெல் 522 கலமும் 66 கலமும் ஆகும்.

முணங்கல் பூண்டியிலிருந்து 267 கலம் நெல் வந்தது (300க்கு 33 குறைவு) இவற்றில் இருந்து வருவது கொண்டு

அமுதுக்கு 1 தூணி நெல்

நெய் 3 பிடிக்கு 6 நாழி

தயிர் 3 நாழிக்கு 6 நாழி

அடைக்காயமுது 6 உரி

அபிஷேகம் செய்யும் மாணிக்கு 1 குறுணி 4 நாழி

வேதம் படித்த ஏவல் மாணிக்கு 1 குறுணி 4 நாழி

மேலும் திருவிளக்கு 80க்கும் இவை பயன்பட்டன. இவை தவிர ஆவியூர் என்ற ஊரில் சமணர் கோயிலுக்கு சொந்தமான பள்ளிச் சந்தம் (முக்குடையவர் தம் அறப்புறம்) நீக்கி 3 + 3/4 + 1 வேலி நிலம் இதிலிருந்து வந்த நெல் கீழ் வருபவர்களுக்கு பகிர்ந்து கொடுக்க நிர்ணயிக்கப்பட்டது.

32 நாடகமகளிர்க்கும்

பஞ்சாசாரியருக்கும்

நந்தவனத்துக்கு நீர் இறைப்போர்க்கும்

யோகி ஒருவனுக்கும்

திருவாய்க் கேழ்வி ஒருவனுக்கும்

கொடுக்க நிச்சயிக்கப்பட்டது.

*புதுமலர் விரிந்து மதுமலர் சோலைப்*
*புள்ளூர் கோவல உள்ளூர்ப் பழநிலம*
*இரட்டு முககாலிற றநத பதினைஞசு மொடடுக்*
*கலலைக் கவர் மூனறு மாவும*
*ஆலஞ செறுவில அஞச மாவும்*
*திரணடுபாய புனல தேஙகாச் செறுவில*
*இரணடு மாவும் இலுபடைக காலிரணடும்*
*நெல்லாலித தெழும புலலாலிப புறம*
*அஞசொடும கூடடி ஆகிய நிலததொகை*
*அபபுத் திரண்டியல மா முப்பததிரண்டும்*
*மேலாறு உணர்நத நாலாறு எண்பயில்*
*அந்தணர் அனைவர்ககும் அர்ச்சனா போகம்*

*தந்தபின்னைத் தடமலர்ப் பொய்கைப்*
*போதகர் பழனப் புதுமலர்ச் சோலைச்*
*சிதாரி பல மஞ்சு மஞ்சாமல்*
*கேட்ட திருவைய்யன் கோட்டமில் குணத்தால்*
*செம்பொற் புரிசை சிவபுரத் தார்க்கு*
*கோவல் அந்தணர் பால் கொண்டு கொடுத்தன*
*பண்டைக் கோலால் பண்டை குழித் தொகை*
*மணங் கொண்டிரண்டு முணங்கல் பூண்டி*
*ஒப்பத் தொறுமா முப்பத் தறுமாவும்*
*மிகவந்துயர் புனல் பகவந்தக் கழனி*
*எட்டு முதல் இருபது மாவும்*
*மட்டவிழ் பூத்துழாவிய புனல் மாத்துழான் வேலி*
*ஏவிய எட்டு மாவும் வாவியில்*
*கோடெறு பழனக் காடெறு மாநிலம்*
*அஞ்சும் களர்நிலம் பத்தும் நெஞ்சசத்*
*துள்ளத் தகும்புனல் உரவுக் கடலுகாயம்*
*பள்ளத் திரண்டும் பாவரும் கணியக்*
*கழனியில் எட்டும் கைகலந்து ரைப்பில்*
*உழனி...*
*மேற்படி காலால் பாற்பட வளந்த*
*இங் கடனவர் பாங்குடன் தொகுத்த*
*மெஞ்ஞூற் றுரைகையில் மேதகு தூநெல்*
*அஞ்ஞூற் றிருபத் திருகலம் என*
*மற்றைத் தொகையில் மதிவளர் சடையோன்*
*பெற்ற வாரம் பிழையறப் பேசில்*
*ஐம்ப திற்றைஞ் சொடு மொய்ம்புறு*
*பதினொரு கலத்தொடு முணங்கர் பூண்டியில்*
*கறைநெல் நஞ்சை நீக்கிப்*
*புஞ்சை நான்மா மாத்தால்*
*கலவரை யான வரையறை அறுகலம்*
*ஏற்றிப் பெறுகல வளவை மூன்றொடு*
*முப்பது குறைந்த முன்னூற்றுக் கலத்தினில்*
*மற்றக் கண்ணுதற்காக நிலத்த வருவந்த நிவந்தம்*
*நலந்தகு நாள் ஒன்றினுக்கு நால் முன்னாழி*
*பானிறத் தன்மை தூநிறக் குத்தல்*
*அரிசியிலான நெல்லு வரிசையில்*
*குறுபவள் கூலி யேற்றி பெறுவன*
*பேணிய பழநெல் தூணியுங் காணியவை*
*அமுது புகழு நெய்யமுது முப்பிடி*

*கொள்ளக் கொடுத்த நெல்அறு நாழியும்*
*பொழுது மூன்றினுக் கிழுதுபடு செந்தயிர்*
*ஒரு முன்னாழிக் கிருமுன் னாழியும்*
*அடைக்காய முதுக்கு ஆறு உரியது*
*அந்தணன் ஒருவன் அபிஷேகம் செய்ய*
*தந்தன குறுணி முற்றதைந்த நானாழியும்*
*ஓராண்டினுக்கு நேராண் டாக*
*நண்ணிய நக்ஷத்திரமென நல்லோன்*
*எண்ணிய திருவிளக்கு எண்பதும் கண்ணனக்*
*காவியர் கயல் பயில் ஆவியூரதனில்*
*திக்குடையிவரும் முக்குடை யவர்தம்*
*அறப்புற மான திறப்பட நீக்கிச்*
*சாலி விளைநிலம் வேலி யாக்கி*
*முதல்வதின் மூன்றே முக்காலே அரைக்கால்*
*இதன்தனி வந்த இயல்வகை உரைப்பில்*
*ஒப்பத் திருஅனையவர் முப்பத் திருவர்*
*பாடல் பயின்ற நாடக மகளிர்க்கும்*
*நெஞ்சா சார நிறைவொடு குறையா*
*பஞ்சா சாரியப் பகுதி யோற்கும்*
*நரைப் புதுமலர் விரி நந்தவானம்*
*இறைப்புத் தொழில் புரிந்த இருந்தவத் தோர்க்கும்*
*யோகி ஒருவனுக்கு நியோகமுடைய*
......................
*செஞ்சடைக் கடவுள்தன் திருவாய்க் கேழ்வி*
*தஞ்சுடைக் கடிகையன் தனக்கும்*

## பாட்டுடைத் தலைவன்

இந்நிவந்தங்களைக் கூறும் கல்வெட்டு இவற்றை யார் கொடுத்தார் என வீதி விடங்கன் கம்பன் என்பவன் இவற்றை அளித்த கொடையாளி எனக் கூறுகிறது. இவனே பாட்டுடைத் தலைவன். இவனைக் கூறும் பகுதியும் படித்துப் படித்து இன்புறத்தக்கது.

இவ்வீதி விடங்கன் இராஜராஜசோழனுடைய அவையில் அறங்களை எடுத்துக்கூறும் அதிகாரி. இவன் அம்பர் நாடன். மணற்குடி நாடு, ஆலங்குடி. திரைமூர் முதலிய ஊர்களை உடையவன். அரசனது ஏவல் கேளாது இருந்த மாற்றார்களைத் தண்டித்து புலிச் சின்னத்தின் புகழ் சிறக்க உழைத்தவன். நித்தவினோதன் என்றும் அருள்மொழி என்றும் பெயர் பெற்ற இராஜராஜனது காரியத்தைத் தவிர வேறு எக்காரியத்தையும் நினையாதவன். சிவபிரானுடைய நெற்றிக் கண்ணையும் சிந்தாமணியையும் போன்ற புகழ் பெற்றவன். யானை ஏற்றத்திலும் குதிரை ஏற்றத்திலும்

சிறந்தவன். இவ்வளவு சிறப்புப் பெற்ற கம்பன் ஆகிய வீதி விடங்கன் கரும்பு ஆலைகள் நிறைந்த பொன்னி நாட்டின் கிழவன் எனப்பாடல் முடிகிறது.

*நெஞ்சில் விதித்த முறைமை மதித்து நோக்கி*
*இன்னவை பிறவு இராஜராஜன்*
*தன்னவை முன்னற் தத்துவ நெறியில்*
*அறங்கள் யாவையும் இறங்கா வண்ணம்*
*விஞ்ஞா பனத்தால் மிகவெளிப் படுத்தோன்*
*அன்பது வேலியில் அடைகுன் றகர்க்கும்*
*ஒன்பது வேலி உடைய உரவோன்*
*கொம்பர் நாடுங் குளிமலர்ச் சோலை*
*அம்பர் நாடன் ஆலங் குடிக்கோன்*
*தெண்டிரை பழனந் திரைமூர் நாடன்*
*வண்டிரை துயர்பொழில் மணற்குடி நாடன்*
*நேரிய அருமொழி நித்த வினோதன்*
*காரியம் அல்லது காரியம் நினையா*
*தாரா தலைமை கூற்பக சதுசன*
*போரான் தலைமை புனர்புயத்து*
*கூத்தொழில் கேளாதேந் தொழில் முனைந்த*
*கண்டகர் கரிசறக் துறிசற் கலிசெக*
*மண்டல சுத்தியில் வயப்புலி வளர்த்தோன்*
*வான்பால் மதியும் வலம்புரி இடம்புரி*
*ஆன்பால் வதியும் விரிசடைக் கடவுள் நெற்றிக்கண்ணும்*
*நிலத்தவர் நினைந்த தெற்றிக் கண்ணும்*
*சிந்தாமணியும் போலப் பிறந்த புகழோன்*
*கோலக் கருங்களிற்று உழவன் கம்பத்தடிகள்*
*மாதி விடங்கு வருபரிவல்ல வீதிவிடங்கன்*
*மென்கருப் பாலை தலந்தருந் தண்டலைத்*
*தடநீர் நலந்தரு பொன்னி நாடு கிழவோனே*

## கி.பி. 1000-ல் சங்கப் பாடல்களின் செல்வாக்கு

சங்க நூற்களை கி.பி. முதல அல்லது இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்தவை என்று வரலாற்றாசிரியர் கூறுவர். இவை எழுந்த ஒரு ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர் இராஜராஜன காலத்தில் (கி.பி. 1000) சங்க இலக்கியங்கள் மீண்டும் சிறப்பாகப் படிக்கப் பெற்றன என இப்பாட்டால் அறிகிறோம். இராஜராஜன் செந்தமிழைச் சிறப்பாகப் போற்றியிருக்கிறான் என்பதற்கு இக்கல்வெட்டும் ஒரு சான்று. கி.பி.11-ம் நூற்றாண்டில் இராஜராஜன் காலத்தில் எழுந்த சில பாடலகள் இது போல் ஆசிரியப்பாவில் அமைந்துள்ளதைக காணும்போது

இந்நூற்றாண்டில் சங்கப் பாடல்கள் பெரிதும் உவந்து படிக்கப் பெற்றன என்பது தெளிவாகும். நக்கீரதேவர் இயற்றிய திருக்கண்ணப்ப தேவர் திருமறம் என்னும் பாடலும், கோபப் பிரசாதம் என்னும் பாடலும், நம்பியாண்டார் நம்பி பாடிய ஆளுடைப்பிள்ளை திருத்தொகை முதலிய பாடல்களும் இது போன்று ஆசிரியப்பாவாலாகிய சிறந்த பாடல்களாகும். இவை அனைத்தும் இராஜராஜன் காலத்தில் இயற்றப் பட்டவை. இவை நெடும் பாட்டுக்களாக அமைந்துள்ளதிலிருந்தும் இராஜராஜன் காலத்தில் சங்க மரபு மறுமலர்ச்சி பெற்றது எனத் தெளியலாம்.

ஆதலின் தொடக்கத்தில் கூறியதுபோல் இப்பாடலை 'திருக்கோயிலூர்ப் பாட்டு' என்பது பொருத்தமே. இப்பாட்டைத் தொடர்ந்து மேலும் மூன்று பாடல் கல்வெட்டுகள் உள்ளன. அவற்றிலிருந்து வீதி விடங்கன் கம்பனுக்கு மஹிமாலய மூவேந்த வேளான் என்னும் பட்டம் இருந்தது என்று அறிகிறோம்.

வீரட்டானத்தாரின் முடிமேல் வைக்கப் பொன்னாலான பூ அளித்தான். மூன்று கழஞ்சு பொன்னால் பூவேலைப் பாடுடன் கூடிய மணிப்பட்டம் ஒன்றும் அளித்தான். மேலும் நூறு பொன்னால் சிவலிங்கம் ஒன்றும் அதற்கு வெள்ளியினால் பீடம் ஒன்றும் செய்து அதன்மேல் பொன் போர்த்துக் கொடுத்தான் என்றும் அப்பாடல்கள் கூறுகின்றன.

*வேலியர்கோன் வீதிவிடங்கள் விறல் கம்பன்*
*ஆலியல் மான் சோழனதிகாரி-கோலப்*
*படியின்மேல் பொற்பூப் பைங்கோவல் வீரட்டர்*
*முடியின்மேல் வைத்தான் முயன்று.*

*பொன் முக்கழஞ்சால் மணிப்பட்டம் பூப்புனைந்து*
*மின்மிக்க கட்டமைந்து மேற்கட்டி சொன்மிக்க*
*கோவலான் வீரட்டற்கு ஈந்தான் குலவேலி*
*காவலான் வாழ் கம்பன் கண்டு*

*சென்னி திறல் ஸ்ரீராஜராஜற்கு யாண்டு*
*திகழும் இருபத்தேழில் செழுநீர் வேலி*
*மன்னிய கம்பன் மஹிமாலய மூவேந்த வேளான்*
*விண்ணப்பத்தால் மணிநீர் கோவல்*
*வென்னியல் சீர்வீரட்டத்தில் இலிங்கமொன்று*
*பொனூற்றால் செய்ததற்கு வெள்ளிப்பீடம்*
*பன்னிய தொண்ணூற்றால் முக்கழஞ்சுடை அம்பொன்*
*போர்த்ததும் அய்ங்கழஞ்சின்மேல் பத்துமாவே.*

மாபெரும் வீரன் இராஜராஜன்; அவனை ஈன்ற ஈடிலாத்தாய் மலையமான் குலத்தவள்; அம்மலையர் குலத்து நகரம் திருக்கோவலூர் அங்கு அனாதியாயது விரட்டானர் கோயில். அப்புண்ணியக்கோயில் எவ்வளவு சிறந்ததாக இருக்கவேண்டும்! அக்கோயிலுக்குத் தானம் அளிக்கும் பேறு பெற்றவன் கம்பன் வீதி விடங்கன் எனில் அவன் புகழ் தான் என்னே!

இச்சிறப்புடைய கல்வெட்டு திருக்கோவலூர் வீரட்டானேசுவரர் கோயிலில் கருவறையின் தெற்கு, கிழக்கு, வடக்குச் சுவர்களில் வெட்டப்பட்டுள்ளது. தமிழ் நாட்டுக் கல்வெட்டு வரலாற்றில் பொன்னேட்டில் வடித்து வைத்து போற்றத்தக்கது.



# 5. இராஜராஜன்



ராஜராஜன் உருவம்

இராஜராஜன் தமிழ்த்தாயின் ஒப்பருந்தவப்புதல்வன். அவனது ஆற்றலை, அவன் விட்டுச் சென்றுள்ள அளப் பரும் கலைச் செல்வங் களை, அவனது ஆட்சித் திறனை, எங்கோ மூலையில் புற்றிட்டுக் கிடந்த திருமுறை களைத் தேடி எடுத்து அளித்த பெருமையை, இன்னும் பல சிறப்புக் களை நோக்கும்போது இம்மன்னன் இந்திய நாட்டிலேயே ஆண்ட மன்னர்கள் அனைவரிலும் தலையாயவன், சிறந்தவன், போற்றிப் புகழத் தகுந்தவன் என்பது தெளிவு. பல மன்னர்களைப் பற்றிய கல்வெட்டுகளும் செப்பேடுகளும் கிடைத்திருக்கின்றன. அவற்றில் பல அன்று ஆண்ட அரசர்களைப் பற்றியச் செய்திகளைக் கூறுகின்றன. ஆயினும் இராஜராஜனுடைய கல்வெட்டுகள் தனிச்சிறப்பு வாய்ந்தவை. அவற்றில் பலவற்றை இராஜராஜன் எழுதும்படி தானே ஆணையிட்டான். ஆதலின் அக்கல்வெட்டுகளிலிருந்து அம்மன்னனுடைய சிந்தனைகள் எவ்வாறு இருந்தன; அவன் செயலாற்றும் திறமை எவ்வாறு இருந்தது; அவனது தனித்தன்மை என்ன என்பதையும் மிகவும் தெளிவாக நாம் அறிய முடிகிறது.

தஞ்சையில் இராஜராஜன் எடுப்பித்த பெருங்கோயிலில் பல கல்வெட்டுகள் இருக்கின்றன. இவற்றில் பல இராஜராஜனால்

கொடுக்கப்பட்ட தானங்களை (பரிசுகளைக்) கூறுகின்றன. பிற மற்றவர்கள் அளித்த பரிசுகளைக் குறிக்கின்றன. இராஜராஜன் அளித்த பரிசுகளை மட்டும் நாம் ஆய்ந்தால் அம்மன்னனின் சிறப்பை தெளிவாக அறியலாம். தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, 'தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள்' என்ற தலைப்பில் ஒரு நூலை வெளியிட்டுள்ளது. இராஜராஜனது கொடைகள் அதில் இடம் பெற்றுள்ளன.

**கலன்கள்:**

இதில் பல அன்று வழக்கிலிருந்த அடுகலன்களின் பெயர்களை நமக்குத் தெரிவிக்கின்றன. தளிகை, மண்டை, கெண்டி, தட்டம், குடம், ஒட்டுவட்டில், கலசம், படிக்கம், நெடுமடல், மானவட்டில், கறண்டிகைச் செப்பு, இலைச் செப்பு, தாரைத்தாள்வட்டில், ஈச்சொப்பிக்கை, இலைத்தட்டு மூக்குவட்டகை, கைவட்டகை, வட்டில், பிங்காளம், கச்சோளம், சட்டுவம், நெய்முட்டை, குறுமடல் ஆகிய கலன்களின் பெயர்கள் நமக்குக் கிடைக்கின்றன. இவற்றில் பெரும்பாலானவை பொன்னாலும், வெள்ளியாலும் செய்யப்பட்டவை.

இவற்றில் சில எவ்வாறு இருந்தன என்பதையும் இராஜராஜன் தெளிவாக குறித்திருக்கிறான். "தூக்கத்தில் தலையில் தைத்த பதினாறு? உட்பட பொன்னின் கொடிக்கருக்கு இரண்டும், சிங்கபாதம் இரண்டும் உட்பட தாரைத்தாள் வட்டில்' (இந்த வட்டிலின் தாள்கள் சிங்கக் கால்கள் போல் செய்யப்பட்டிருந்தன). 'மூக்கும், அடியும் உட்பட கலசப்பானை.' 'அடியும் மூழலும் உட்பட கறண்டிச்செப்பு.' "யாளிக்கால் நான்கும் மூழலும் உட்பட இலைச்செப்பு" என இம்மன்னன் தான் கொடுத்த சிறு பாத்திரங்களின் உருவங்களைக் கூட தெளிவாகக் குறிப்பிட்டுள்ளது போற்றத்தகுந்தது. ஒரு நெய்முட்டை கூட விட்டுவிடாமல் பதிவு செய்து வைத்துள்ளது எந்த அளவிற்கு கோயில் பொருள்களைக் காக்க வேண்டுமென்று பின்வரும் சந்ததியினருக்கு எடுத்துரைப்பது போல் காண்கிறோம். இவற்றை இராஜராஜன் பரிகலன்கள் என்று கூறுகிறான்.

இவற்றில் மற்றொரு சிறப்பும் உண்டு. இப்பரிகலன்கள் எங்கிருந்து வந்த பொருளால் செய்யப்பட்டவை என்பதைக் கூட இராஜராஜன் குறிக்கிறான். தன்னுடைய பண்டாரங்களிலிருந்து கொடுத்தவை எவை? சேரமானையும், பாண்டியர்களையும் மலைநாட்டில் தோற்கடித்தபோது கிடைத்த வெள்ளியைக் கொண்டு இங்கு செய்து அளித்த கலன்கள் எவை என்பதையும் தெளிவாகக குறித்துள்ளது வியக்கத்தக்கது. தன்னுடைய பண்டாரத்திலிருந்தும், மாற்றரசர்களை வெற்றி கண்டபோது கொண்ட பண்டாரங்களிலிருந்தும், கொடுத்த

பொன்னாலான கலன்கள் எவை என்பதையும் தெளிவாகக் குறித்துள்ளான்.

இந்த கல்வெட்டுகளில் 'தளிகை ஒன்று' என்று பல கலன்கள் திரும்பத் திரும்ப எழுதப்பட்டுள்ளதைக் காண்கிறோம். ஒரே வகையான கலன்களை ஏன் பலதடவை திரும்பத் திரும்ப எழுதவேண்டும் என்று கூட ஐயம் நமக்குத் தோன்றும். ஆனால் கல்வெட்டைச் சற்றுத் தெளிவாகப் பார்த்தால் இவ்வாறு எழுதியிருப்பதின் நோக்கம் தெரியும். ஒரே வகையைச் சார்ந்த கலமாக இருந்தாலும் அவற்றின் எடை வேறுபடுவதால் அவற்றைத் தனித்தனியாகக் குறித்துள்ளான். அது மட்டுமல்ல! மிக அதிக எடையுள்ள கலத்திலே தொடங்கி படிப்படியாக எடை குறைந்து வருகிற வகையில் அவற்றை வரிசைப்படுத்தி குறித்துள்ளதையும் காணலாம். உதாரணமாக ஒரு கல்வெட்டில் முப்பது தளிகைகளைக் குறித்துள்ளான். 983 கழஞ்சு எடையுள்ளதில் தொடங்கி 982, 981, 980, 978 என வரிசையாக எழுதப்பட்டுள்ளது எவ்வளவு கவனத்துடன் இந்த பட்டியல் தயாரிக்கப்பட்டுள்ளது என்பதும் தெளிவாகும். இரண்டு கலன்கள் ஒரே எடை உடையவையாக இருந்தால் அவற்றை ஒரே வரியில் குறித்து விடுவதையும் காண்கிறோம். நெய் முட்டைக்குக் கூட எடை எடுத்து வைத்திருப்பது இன்னும் சிறப்பாகும்.

### "சிவபாத சேகரன்"

இராஜராஜன் தான் எடுப்பித்த கோயிலிலே தனது தெய்வத்தை பிரதிஷ்டை செய்து அதனுடைய வழிபாட்டிற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்துள்ளான். சிறந்த சிவபக்தனாதலின் தன் தெய்வத்திற்கு இராஜராஜேச்வரம் உடைய பரமஸ்வாமி எனப் பெயர் சூட்டி மகிழ்ந்தான். அந்த தெய்வத்தினுடைய புகழை, பெருமையை தான் என்றென்றும் போற்றி வணங்க வேண்டும் என்பது இராஜராஜனுடைய அவா. என்றென்றும் இராஜராஜேச்வரமுடைய பரமஸ்வாமியின் புகழை வெளி உலகத்திற்கு எடுத்துரைக்கும் அடியானாக தன்னை ஆட்படுத்திக் கொண்டான். அவன் பல காளங்களை இக்கோயிலுக்கு கொடுத்திருக்கிறான். அவை தங்கத்தால் செய்யப்பட்ட காளங்கள் ஆகும். இரண்டு குழல்களை உடையவை. அவற்றில் ஒன்றில் சிவபாதசேகரன் என்றும், மற்றொன்றில் ஸ்ரீ இராஜராஜன் என்றும் பெயர் பொறித்தான். தஞ்சைப் பெருங்கோயிலில் இனிது உறைகின்ற பரம்பொருளின் நாள்அணி விழாக்களில் இக்காளங்கள் ஊதப்படும்போது, அதன் மூலமாக 'இராஜராஜனும்', 'சிவபாதசேகரனும்' அத்தெய்வத்தின் புகழை மக்களுக்கு எடுத்துரைத்தனர். அந்த அளவிற்கு இராஜராஜன் பக்திப் பெருக்கினால் சிவபிரானின் திருவடியை என்றும் மறவாத சிந்தையனாகத் திகழ்ந்தான் என்பதை இது நமக்குக் காட்டுகிறது.

**வெற்றி மலர்:**

மாற்றசர்களை வெற்றி கொண்டு தன் தலைநகருக்குத் திரும்பிய போது இராஜராஜன் செய்த முதற்பணி தன் தெய்வத்தின் முன்னிலையில் சென்று தங்கத்தினாலே பூக்களைச் செய்து தான் அடைந்த வெற்றிக்குக் காரணம் அப்பரம்பொருள் என்றும் அதுவே தன்னை வெற்றிக்கு ஊக்குவித்தது என்றும் இதயம் நெகிழ வணங்கி அதன் திருவடிகளில் பொற்பூக்களை அட்டித் தொழுதான். "சத்தியாஸ்ரனை எறிந்து எழுந்தருளி வந்து ஸ்ரீ பாதபுஷ்பமாக அட்டித் திருவடி தொழுதன திருபொற் பூ ஒன்று-தாமரைச் செயல் திரு பொற்பூ ஒன்று" எனக் குறிக்கிறான். இவ்வாறு கொடுக்கப்பட்ட பூக்களும் கணக்கெடுக்கப்பட்டு எடை எடுக்கப் பட்டு பதிவு செய்யப்பட்டன.

**அணிகலன்கள்:**

இராஜராஜன் பெருங்கோயிலிலே இருந்த செப்புத் திருமேனிகளுக்கும் பரம்பொருளுக்கும் அணிவிக்க ஏராளமான திரு ஆபரணங்களை அளித்திருக்கிறான். இவற்றில் திருப்பட்டிகை, முத்துவளையல், திருமாலை, ஸ்ரீசந்தம் முதலிய பல அணிகலன்கள் கொடுக்கப்பட்டன. அவற்றையும் மிக அழகாகவும், வரிசையாகவும் இராஜராஜன் பதிவுகளில் எழுதி வைத்திருக்கிறான். இவற்றை நோக்கும்போது இவ்வணிகள் எவ்வாறு செய்யப்பட்டன, எவை எவை கொண்டு கட்டப்பட்டன என்பதையெல்லாம் அறிய முடிகிறது. இவ்வணி கலன்களை செய் வதற்குப் பயன் படுத்தப்பட்ட



லோகமகாதேவி - உருவம்

ஆயிரக்கணக்கான முத்துக்களை இராஜராஜன் பெரியவுடையாரின் திருவடிகளிலே மலர்களாக அர்ப்பணித்து வணங்கினான் என்றும், அவற்றைக் கொண்டு இவ்வணிகள் செய்யப்பட்டன என்றும் அறிகிறோம். "உடையார் ஸ்ரீ இராஜராஜதேவர், ஸ்ரீபாதபுட்பமாக அட்டித் திருவடி தொழுத" என்று ஒவ்வொரு அணியிலும் குறிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். வட்டம், அனுவட்டம், ஒப்புமுத்து, குறுமுத்து, நிம்பொளம், பயிட்டம், அம்பு முது, கறடு, இரட்டை, சப்பத்தி, சக்கத்து, குளிர்ந்த நீர், சிவந்தநீர் என்ற பலவகை முத்துக்கள் குறிக்கப்பட்டுள்ளது அக்காலத்திலிருந்த முத்துக்களின் வகைகளை நமக்குத் தெரிவிக்கிறது. இவ்வணிகலன்கள், அவற்றின் நிறைக்கு ஏற்ப வரிசைப்படுத்தி பதிவு செய்யப்பட்டன. நிறை எடுக்கும்போது சரடும், சட்டமும் நீங்க, உள்ளே வைத்து செய்த அரக்கும் பிஞ்சும் சேர்த்து எவ்வளவு நிறை என்று கணக்கெடுக்கப்பட்டது. தக்ஷிணமேருவிடங்கன் என்று பெயர் பெற்ற ஒரு எடையால் (காசுக்கல்) நிறை எடுக்கப்பட்டது.

**நவரத்தினங்கள்:**

இராஜராஜன் நவரத்தினங்களால் ஆன பல மோதிரங்களை அளித்திருக்கிறான். அவற்றில் முதலிலே குறிக்கப்படும் அணியில் நவரத்தினங்கள் எவை என்பதைத் தெளிவாக குறித்திருக்கிறான். வயிரம், நீலம், முத்து, புஷ்பராகம், கோமேதகம், பவழம், மரகதம், வைடூரியம், மாணிக்கம் ஆகிய ஒன்பதும் நவரத்தினங்கள் என்று அறிகிறோம். அடுத்துக் குறிக்கப்படும் நவரத்தின மோதிரங்களைச் சுருக்கமாக நவரத்தினம் ஒன்பது என்று கூறி முடித்து விடுகிறான். இதிலிருந்து தான் குறிப்பவைகளை எவ்வளவு தெளிவாகவும், குறிப்பாகவும் இராஜராஜன் எழுதியுள்ளான் என்பதை அறியலாம்.

**திருப்பதியம்:**

இக்கோயிலிலே வழிபாட்டின்போது தேவாரத் திருப்பதிகங்கள் பாடித் தெய்வத்தைப் பரவ வகை செய்தான். அதற்காக நாற்பத்தெண்மரை தேவாரம் ஓதுபவராக அமர்த்தினான். திருப்பதியம் விண்ணப்பம் செய்தல் என்று கூறுகிறான். திருப்பதியம் ஓதும்போது அவர்களுக்குப் பக்கவாத்தியமாக உடுக்கையும், கொட்டி மத்தளமும் வாசிக்கப்பட்டன. அவர்களுக்கு நாள் ஒன்றுக்கு மூன்று குறுணி வீதம் தஞ்சாவூர் பண்டாரத்திலிருந்து நெல் அளிக்கப்பட்டது. திருப்பதிகம் பாடுபவர்கள் திருநாவுக்கரையன், சம்பந்தன், செம்பொற்சோதி, சீருடைகழலான், சீராளன், திருஞானசம்பந்தன், எடுத்தபாதப்பிச்சன், சிவக்கொழுந்து ஆகிய எழில்மிகும் தமிழ்ப்பெயர் பூண்டு விளங்கினர். இதைத் தவிர இவர் அனைவரும் சிவதீக்கை பெற்றவர்கள், ஒவ்வொருவனுடைய தீக்கைப் பெயர்களும் குறிக்கப்பட்டுள்ளதை இக்கல்வெட்டில்

காண்கிறோம். இதிலிருந்து தெய்வத்தின் முன்னிலையில் தேவாரம் ஓதுவார்கள் சிவதீக்கை பெற்றவர்களாக இருத்தல் வேண்டும் என்று முன்னர் கட்டுப்பாடு இருந்தது என அறியலாம்.

**தேவரடியாள்:**

முற்காலத்தில் தெய்வீக வழிபாட்டின் அங்கமாக நாட்டியம் திகழ்ந்தது. பதினாறு அங்கங்களை உடைய வழிபாட்டு முறையில் கூத்து (நிருத்தம்) பதினைந்தாவது அங்கமாக குறிக்கப்படுகிறது. தாண்டவம் எடுத்துரைத்த தவச்செல்வர் சிவபெருமான் ஆதலின் அவர் உரைகின்ற கோயிலில் சுவர்களில் அப்பெருமான் ஆடிய 108 கரணங்களை (82 முடிவடைந்துள்ளன) சிற்பமாக செதுக்கி அமைத்த பெருமை இராஜராஜனையே சாரும். தில்லையிலே நடம் புரிகின்ற கூத்தப்பெருமானிடத்தில் எல்லையில்லா ஈடுபாடு கொண்ட இராஜராஜப் பெருந்தகை, தான் தோற்றுவித்த நடராஜப் பெருமானின் உருவங்களை 'ஆடவல்லான்' என்று அழைத்து அகமகிழ்ந்தான். தன் நாட்டில் வழங்கிய அளவுகளுக்கும் ஆடவல்லான் என்ற பெயர் சூட்டி மகிழ்ந்தான். இறைவன் ஆடிய ஆடலில் தன் உள்ளத்தைப் பறி கொடுத்த இப்பெருந்தகை தன் நாட்டிலே ஆடலில் சிறந்து பெரும் புகழ் எய்திய நானூற்றுக்கும் மேற்பட்ட நாட்டிய மகளிர்களுக்குத் தான் தோற்றுவித்த பெருங்கோயிலில் நாட்டியப் பணிபுரியும் பேறு அளித்தான். இந்நாட்டிய மகளிர்கள் பல்வேறு கோயில்களிலே நாட்டியப் பணி புரிந்து சிறந்தவர்கள். இவர்களில் பலர் ஆடவல்லான், ஐயாறு, புகழி, பெற்ற திரு, பாவை முதலிய அழகிய பெயர்களைக் கொண்டிருந்தனர்.

இராஜராஜன் மீது ஆறாத காதல் கொண்டிருந்த ஒருவள் 'இராஜராஜி' என்றே பெயர் கொண்டிருந்தாள்.

**தேவரடியாளாகத் தகுதி:**

இவர்கள் கோயிலிலே கூத்தாடுபவர்களே ஆயினும் இவர்களது தொழிலுக்குத் தேவையான ஆடல் தகுதியை இவர்கள் பெற்றிருக்க வேண்டும். உரிய கல்வியும் பயிற்சியும் உடையவர்களே தேவரடியாளாகக் கோயிலில் பணிபுரிய முடியும். இவர்களில் யாராவது இறந்து விட்டால் அல்லது வேறு நாட்டிற்குச் சென்று விட்டால் இவரது அடுத்து வாரிசுகள் (அடுத்த முறை கடவார்) இப்பணியைச் செய்யலாம் என்று குறிக்கப்பட்டது. இவர்களில் வாரிசாக இருந்தாலும் உரிய தகுதி, கல்வி பயிற்சி இல்லாவிட்டால் (அடுத்த முறை கடவார் தாம் தாம் யோக்யர் அல்லாதுவிடில் யோக்யராயிருப்பாரை ஆளிட்டு பணி செய்வித்துக் கொள்ளவும்) அவர்கள் பணி செய்ய முடியாது. ஆயினும் பணி தடைபடாமல் இவர்களே தகுதியுடைய வேறு ஆட்களை

நியமித்து இப்பணி செய்யலாம் என்று இராஜராஜன் பணித்தான். இதிலிருந்து இரண்டு செய்திகளை அறிகிறோம். ஒன்று கோயில்களில் பணிபுரிவாரின் சந்ததிகளுக்கு வருங்கால வாழ்வுக்கு வழி வகுக்கப்பட்டது. வழிவந்தவர்கள் என்ற காரணத்தினாலேயே அவர்கள் பணி செய்ய உரிமை உண்டு என்பதும் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. சந்ததியாக இருந்தாலும் உரிய தகுதி பெற்றிருக்க வேண்டும். அவ்வாறு தகுதி பெறாவிட்டால் சந்ததியினரே வேறு தகுதியுடைய ஆளை அமர்த்திக் கொண்டு பணி செய்விக்கலாம். இந்த வாய்ப்பு மிகவும் இன்றியமையாதது. காரணம் சந்ததியினர் உடல் நலக்குறைவாலோ அல்லது பிறப்பிலே ஏற்பட்ட குறைகளாலோ வாழ வகையின்றி போய்விடக்கூடாது என்பதாகும். அவ்வாறு குறைபாடு உள்ளவர் களுக்கு அடுத்து வரும் தலைமுறை அப்பணியை செய்யக் கூடுமாதலின் அவர்களுக்கு இவ்வாய்ப்பை அளிக்க வேண்டும் என்று இராஜராஜன் கருதியிருக்கிறான். இதிலிருந்து அவன் எந்த அளவுக்கு பணிபுரிவாரின் வாழ்விலும், அவர்களது சந்ததியாரின் வாழ்விலும், நலனிலும் அக்கரை எடுத்துக் கொண்டான் என்பது தெளிவாகிறது. அவ்வாறு அடுத்த சந்ததியினர் இல்லாது போய்விட்டால் பதிலாக தகுதி உள்ளவர்களை நியமிக்க கோயில் நிர்வாகத்தினருக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது. இவ்வாறு நாட்டியப் பணிபுரியும் ஒவ்வொரு பெண்ணுக்கும் ஓர் ஆண்டிற்கு 100 கலம் நெல் கொடுக்கப்பட்டது. 400-க்கும் மேற்பட்ட இந்த ஆடல் மகளிர்களுக்கு வசிப்பதற்கு என்று பல தெருக்களை அமைத்து ஒவ்வொரு வீட்டிற்கும் எண் இட்டு, எந்த வீட்டில் யார் இருந்தார்கள் என்பதையும் இராஜராஜன் கல்வெட்டுக் குறிக்கிறது. இவர்களுக்கு நாயகம் செய்ய சாவூர் பரஞ்சோதி என்பவரும் கோவிந்தன் சோமநாதன் என்பவரும் நியமிக்கப்பட்டார்கள்.

### நட்டவரும் இசைஞரும்:

இவை தவிர இவர்களுக்கு நட்டவம் செய்ய எழுவர் நியமிக்கப்பட்ட னர். அவர்கள் நிருத்தமாராயன், நிருத்தப்பேரையன் முதலிய பட்டம் அளித்து கௌரவிக்கப் பட்டவர்கள். இதைத் தவிர பல இசைக் கருவிகளை இசைப்பதற்கும் ஆரியம்பாடவும், தமிழ்பாடவும், கொட்டி மத்தளம் வாசிக்கவும், முத்திரைச்சங்கு ஊதவும், பலர் நியமிக்கப்பட்டனர். இவர்களில் பலர் இராஜராஜனது பல்வேறு படைகளிலே பணிபுரிந்தவர்கள். படையிலே இசைக் கருவிகள் இசைக்கக்கூடிய வல்லமை படைத்தவர்கள் இராஜராஜனது படையிலே மிகுந்திருந்தார்கள் என்பதை நோக்கும்போது எவ்வளவு சிறந்த பண்பட்ட படையாகத் திகழ்ந்தது எனக் கண்டு வியக்கிறோம். உதாரணமாக குழல் ஊதுபவன் குதிரைப் படையிலிருந்து வந்தவன். பக்கவாத்தியம் வாசிப்பவர் பலர் பல்வேறு வலங்கை வேளைக்காரர்

படையைச் சேர்ந்தவர்கள். கீழ்கண்ட படைகளிலிருந்து இசை வல்லுநர்கள் இப்பெருங் கோயிலுக்கு பணிபுரிய அமர்த்தப்பட்டனர்.

**இசை மிகுந்த படை:**

1. நிகரிலி சோழத் தெரிந்த உடநிலை குதிரைச் சேவகர்
2. மும்மடி சோழத் தெரிந்த யானைப்பாகர்
3. அழகிய சோழத் தெரிந்த வலங்கை வேளைக்காரர்
4. க்ஷத்திரிய சிகாமணி தெரிந்த வலங்கை வேளைக்காரர்
5. சத்ருபுஜங்கத் தெரிந்த வலங்கை வேளைக்காரர்
6. ராஜ கண்டீவத் தெரிந்த வலங்கை வேளைக்காரர்
7. ராஜராஜத் தெரிந்த வலங்கை வேளைக்காரர்
8. அரிதுர்க்க லங்கணத் தெரிந்த வலங்கை வேளைக்காரர்
9. மூர்த்த விக்ரமாபரண தெரிந்த வலங்கை வேளைக்காரர்
10. மும்மடி சோழத் தெரிந்த பரிக்காரர்
11. ரணமுக பீமத் தெரிந்த வலங்கை வேளைக்காரர்
12. விக்கிரமாபரணத் தெரிந்த வலங்கை வேளைக்காரர்
13. இளைய ராஜராஜத் தெரிந்த வலங்கை வேளைக்காரர்

இவற்றிலிருந்து இராஜராஜனிடத்தில் மூலப்படையாக இருந்த படைகளின் பெயர்களையும் அறிகிறோம்.

**தொழிலாளியைப் போற்றிய இராஜராஜன்:**

இதிலிருந்து வேறு சில செய்திகளும் அறிய முடிகிறது. உடுக்கை வாசிப்பவனுக்கு ஸ்ரீ ஹஸ்தன், சகஸ்ரபாகு என்று பெயர் இருப்பது தொழிலுக்கு ஏற்ப உள்ள பெயராகக் காணப்படுகிறது. பள்ளித் தொங்கல் பிடிப்பான், விளக்கு எடுப்பார், நீர்த் தெளிப்பார், கணக்கு, வண்ணத்தான், நாவிசம் செய்வார், அம்பட்டன் முதலிய பலர் இங்கு பணி செய்ய அமர்த்தப்பட்டுள்ளார்கள். தையான், ரத்தினத் தையான், கன்னான், தட்டான் முதலிய பல தொழிலாளிகளும் இக்கோயிலில் பணி புரிந்திருக்கிறார்கள். இக்கல்வெட்டிலிருந்து பல பெரும் சிறப்புகளை அறிகிறோம். இராஜராஜன் சிறு தொழிலாளிக்குக் கூட பெரும்பட்டங்கள் அளித்து அவர்களையும் இந்த திருப்பணியிலே ஈடுபடுத்தியிருப்பது அவனது பரந்த நோக்கத்திற்கு ஓர் எடுத்தக்காட்டாகத் திகழ்கிறது. தட்டானுக்கு **பெரும் தட்டான்** என்றும், தையானுக்கு **பெருந்தையான்** என்றும், நாவிதனுக்கு **பெருநாவிசன்** என்றும், கணிதம் வல்லானுக்குக் **கணிதாதிராஜன்** என்றும், பள்ளித்தொங்கல் பிடிப்பானுக்கு **தொங்கல் பேரையன்** என்றும் இவன் பட்டங்கள் அளித்துள்ளது தொழிலாளி வர்க்கத்தினர் அறிந்து இன்புறத்தக்கது. பலருக்கு மாராயன், பேரையன், அரையன்

முதலிய பட்டங்கள் கொடுத்து சிறப்பித்திருக்கிறான். அவன் கொடுத்த பட்டங்கள் அவரவர் தொழிலுக்கு ஏற்ப அமைந்திருக்கின்றன. அத்துடன் அரச பட்டப் பெயர் ஒன்றையும் இணைத்து கொடுக்கப் பட்டுள்ளது தொழில் புரிபவர்களை அரசன் எவ்வளவு உயர்ந்த நிலையிலே வைத்து மகிழமுடியுமோ அந்த அளவிற்கு சிறப்பித்திருப்பது இராஜராஜனின் தனிப்பெரும் தன்மைக்கு ஓர் எடுத்துக் காட்டு. இராஜராஜன் அளித்த சில பட்டப்பெயர்கள் கீழே குறிக்கப்பட்டுள்ளன.

1. மும்முடிசோழ நிருத்தமாராயன்
2. மும்முடி சோழ நிருத்தப்பேரையன்
3. அருமொழி நிருத்தப் பேரையன்
4. வகையிலி நிருத்தப்பேரையன்
5. பஞ்சவன் மாதேவி நாடகமையன்
6. நித்திவினோத வாத்யமாராயன்
7. அறிஞ்சிகை காமரப்பேரையன்
8. ராஜேந்திர தசரையன்
9. இருமடிசோழ வாத்யமாராயன்
10. ராஜராஜ ஸ்ரீஹஸ்தன்
11. ராஜராஜ சஹஸ்ரபாகு
12. செம்பியன் வீணைஆதித்தன்
13. மும்முடிசோழ தொங்கல் பேரையன். (திருத்தொங்கல் பிடிப்பான்)
14. செம்பியன் கொற்றப் பெருங்கணி
15. ராஜராஜ கணிதாதிராஜன்
16. ராஜராஜ ப்ரயோகத்தரையன்
17. கேரளாந்தக பெருந்தைய்யான்
18. வீர சோழ பெருந்தைய்யான்
19. க்ஷத்திரிய சிகாமணி பெருங்கன்னான்
20. க்ஷத்திரிய சிகாமணி பெருந்தட்டான்

முதலியவை ஆகும். இப்பட்டங்களின் இனிமை கண்டு இன்புறுக.

### தஞ்சைக் கோயிலைக் கட்டிய ஸ்தபதி:

இவ்வளவு சிறந்த கல்வெட்டில் இம்மாபெருங் கோயிலைத் தோற்று வித்த சிற்பிகளின் பெயரைக் குறிக்காமலா இருப்பான்? அவர்களின் பெயர்கள் குறிக்கப்பட்டுள்ளன. சிற்பிகளின் தலைவனுக்கு தச்சாசார்யன் என்று பெயர். வீரசோழன் குஞ்சரமல்லனான **இராஜராஜப் பெருந்தச்சன்** என்பவன் இக்கோயிலில் தச்சாசார்யனாகக் குறிக்கப்படுகிறான். இவனுக்கு உதவியாக குணவன் மதுராந்தகனான நித்த வினோதப் பெருந்தச்சன் என்பவனும் பணி புரிந்திருக்கிறார்கள். தற்காலத்தில் கோயில்களை நிர்மாணிக்கும் சிற்பிகளை ஸ்தபதி



இராஜராஜேச்வரம் என்னும் தஞ்சைப் பெருங் கோயில்

என்கிறோம். அவர்கள் அக்காலத்தில் பெருந்தச்சன் என்று பட்டம் பெற்றுச் சிறந்தனர் என பல கல்வெட்டுகளிலிருந்து அறிகிறோம். ஆதலின் இராஜராஜனது பெயர் பூண்டு இராஜராஜப் பெருந்தச்சன் என்று அழைக்கப்பட்ட தச்சாசார்யனே வியத்தகும் தஞ்சைப் பெருங் கோயிலைத் தோற்றுவித்த தமிழகத்தின் தலையாய சிற்பி என்பதில் ஐயமில்லை.

இராஜராஜனது இக்கல்வெட்டில் மற்றொரு சிறப்பையும் காண்கிறோம். இராஜராஜன் இக்கோயிலில் பணிபுரிய சிலருக்கு ஆணையிட்டிருக்கிறான். அவர்கள் சிலகாலம் இங்கு பணி புரிந்திருக்கிறார்கள். ஆனால் இக்கல்வெட்டுகளைப் பொறிப்பதற் குள்ளாக அவர்கள் இறந்து போய் விட்டார்கள். அப்பணியைப் பிறர் செய்தனர். ஆயினும் நிலையான கல்வெட்டில் முதலில் அமர்த்தப் பட்டவர்கள் இறந்துபோன போதிலும் அவர்களது பெயரையும் குறித்து அவர்களுக்குப் பின் வந்தவர்களின் பெயரையும் கல்லிலே குறித்து வைத்துள்ள பெருமையைக் காண்கிறோம். கல்வெட்டு எழுதும்போது இறந்தவருடைய பெயரைக் குறிக்க வேண்டிய தேவை இல்லை. ஆயினும் "வீணை வாசிப்பார் இருவருக்கு சுப்ரமணியன் கூத்தனான செம்பியன் வீணை ஆதித்தனுக்கு பங்கு மூன்றரையும், இவன் செத்தமையில் இவன் மகனைக் கொண்ட அரையன் சதாசிவனுக்குக் காணியாகவும்; பராந்தகக் கொங்கவாளில் கீர்த்தி நாதனுக்கு பங்கு முக்காலும் இவன் செத்தமையில் இவன் தம்பி கீர்த்தி கிளை தாங்கிக்கு காணியகாவும்" என்று குறிப்பிட்டுள்ளதிலிருந்து பணி செய்தவன் இறந்தபோதிலும் இராஜராஜன் அவனுக்கு எவ்வளவு பெருமை அளித்திருக்கிறான் என்று அறியலாம். இதுவும் இராஜராஜனுடைய பெருந்தன்மையின் எடுத்துக்காட்டு.

**கோயில் பொறுப்பு:**

இக்காலத்தில் வங்கிகளில் பொருளாளர் (Cashier) களாகவும், கணக்காளர்களாகவும் நியமிக்கப்படுபவர்களிடத்தில் பிணைப்பு பணம் (Security Deposit) பெற்று பிறகுதான் அவர்களை நியமிக்கிறார்கள். இராஜராஜன் தான் எடுப்பித்த கோயிலிலே பண்டாரத்தையும், கணக்கையும் வைத்துக் கொள்வார் எவ்வளவு சிறந்தவர்களாக இருக்கவேண்டும் என்பதற்கு உள்ள கட்டுப்பாடுகளைக் கல்வெட்டில் குறித்திருக்கிறான். இப்பணிகளில் அமர்த்தப்படுபவர்களுக்கு நிலையான நிலம் (பூமி சம்பத்து) இருக்க வேண்டும். நல்ல நிலையிலே உள்ள சொந்தக்காரர்கள் (பந்து சம்பத்து) இருகக வேண்டும். பொருள் (அர்த்த சம்பத்து) உடையவர்களாக இருக்க வேண்டும். கோயில் பொது மக்களுக்காக எடுக்கப்படும் ஒரு பொது ஸ்தாபனம். ஆதலின்

அதன் செல்வத்தை நிர்வகிப்பவர்கள், அதன் கணக்கை வைத்துக் கொண்டிருப்பவர்கள், உயர்ந்த நிலையிலுள்ளவர்களாக இருக்க வேண்டும். அவற்றில் ஏதாவது தவறு நேருமானால், தவற்றை சரி செய்ய போதிய வாய்ப்பு இருக்க வேண்டும் என்ற உயரிய நோக்குடனே இராஜராஜன் மேல் குறிப்பிட்டுள்ள கட்டுப்பாடுகளை நியமித்துள்ளான். அது மட்டுமல்ல, பரிசாரகம் செய்பவர்களுக்குக் காசும், நெல்லும் பண்டாரத்தார்களும், கணக்கர்களும் உள்ளூர் பண்டாரத்திலிருந்து கொடுக்கவேண்டும் என்றும், பண்டாரிகளும், கணக்கர்களும் தங்களுடைய ஊதியத்தை நாட்டுப் பண்டாரத்தில் சென்று வேறொருவரிடமிருந்து பெற்றுக்கொள்ள வேண்டுமென்றும் பணித்தான். கோயில் கணக்கு எந்த அளவிற்கு சீராக இருத்தல் வேண்டும் என்று இராஜராஜன் நினைத்தான் என்பதற்கு இது எடுத்துக் காட்டு.

**பெரும் பணி மக்களின் பணி:**

தன் ஆட்சிக்கு உட்பட்ட பல ஊர்கள், இக்கோயிலில் பணிபுரியும் கணக்கர்களையும், திருமெய்காப்பாளர்களையும், பண்டாரிகளையும், பரிசாரகர்களையும் நியமிக்க இராஜராஜன் வாய்ப்பளித்தான். இவ்வாறு நியமிக்கப்பட்ட மெய்காப்பாளர்களுக்கு அந்தந்த ஊர்களே ஊதியம் தரவேண்டும் என்று நியமித்தான். தங்கள் ஊரிலிருந்து கோயிலுக்குப் பணிக்கு சென்று வரும்போது ஏற்படும் செலவுகளுக்கு படிச்செலவும் கொடுக்கவேண்டும் என்று நியமித்தான். இதிலிருந்து இராஜராஜனின் இன்னம் சில சிறந்த குணங்களை அறிய முடிகிறது. அவன் ஒரு மாபெரும் பேரரசன். அவன் நினைத்தால் துங்கபத்திரை ஆற்றங் கரையிலிருந்து ஈழம் வரையிலும் உள்ள பரந்த பகுதியிலிருந்து எவ்வளவோ ஆயிரக்கணக்கான ஆட்களை அவனே நியமிக்க முடியும். ஆயினும் அவ்வாறு செய்யாமல் தன் ஆட்சியிலிருந்த பல்வேறு ஊர்ச்சபைகளே ஆட்களை நியமிக்க வாய்ப்பளித்தான். தஞ்சைப் பெருங்கோயிலைத் தான் தோற்றுவித்த போதிலும் அது அனைத்து ஊர்களுக்கும் பொது என்ற ஓர் எண்ணத்திற்கும், அனைத்து மக்களும் இக்கோயிலிலே நமக்கும் பங்கு உண்டு, இதன் நிர்வாகத்தில் நாமும் பங்கு ஏற்கிறோம் என்று பெருமை கொள்ளும் வகையிலும் ஒவ்வொரு ஊருக்கும் வாய்ப்பளித்திருக்கிறான் என்பதை நோக்கும்போது இராஜராஜனுடைய உன்னதக் கருத்துக்கள் நமக்குத் தெளிவாகின்றன.

**அரசனது இறை ஆலயத்துக்கு:**

தஞ்சையிலே தான் எடுப்பித்த இப்பெருங்கோயிலின் நடைமுறைச் செலவுகளுக்காகத் தனக்குச் சேர வேண்டிய இறையைக் கோயிலுக்கு அளக்க ஆணையிட்டான். பல ஊர்களிலே உள்ள நிலங்களை



தஞ்சைப் பெருங்கோயிலின் உள் திருக்கோபுரம்
இராஜராஜன் திருவாசல்

இவ்வாறு இக்கோயிலுக்கு தேவதானமாக அளித்தான். இந்த ஊர்களையும், அளித்த நிலங்களையும் குறிக்கும்போது மிகவும் தெளிவாகக் குறித்துள்ளான். ஓர் ஊரிலே உள்ள மொத்த நிலம் எவ்வளவு? அவ்வூரில் கோயில், குளம், இருக்கை முதலிய இறை கட்டாத நிலங்கள் எவ்வளவு? மீதி இறை கட்டின நிலங்கள் எவ்வளவு? அந்த நிலங்கள் அளந்த இறை "இராஜ ராஜதேவர் கொடுத்த ஊர் நத்தம், கோயில், குளங்கள், அவ்வூர் நிலத்தை ஊடறுத்துப் புறவூருக்குப் போன வாய்க்கால்கள், பறைச்சேரி, கம்மாளச்சேரி, சுடுகாடு முதலிய இறையிலி நிலங்கள் நீக்கி இறை கட்டின நிலத்தால் காணிக்கடன்" என் ஆணையிட்டிருப்பதிலிருந்து அக்காலத்தில் வேளாண்துறை (துரவு) எவ்வளவு சிறப்பாக வகை படுத்தப்பட்டு நிர்வகிக்கப்பட்டது என்பது புலனாகும்.

## ஆண்டானும் அடியானும் சமம்:

தஞ்சைப் பெருங்கோயிலில் விளக்கு எரிப்பதற்காக பல பொருள் களை இராஜராஜன் கொடுத்திருக்கிறான். அதை சில கல்வெட்டுகள் குறிக்கின்றன. இக்கல்வெட்டிலிருந்து பல சிறந்த செய்திகளை நாம் அறிகிறோம். இக்கல்வெட்டில் பல உயர் அதிகாரிகளின் பெயர் குறிக்கப்பட்டுள்ளன. அவர்களது பெயர்கள் கீழே குறிக்கப்பட்டுள்ளன. இவர்களில் பெரும்பாலானவர்கள் கோழிப் போரிலே பங்கு கொண்டவர்கள். கோழிப் போர் மிகவும் கடுமையாக நடத்திருக்க வேண்டும் என ஊகிக்கலாம். தனது படை வீரர்கள் கோழிப் போரிலே ஊனம் ஏதுமின்றி வெற்றி வாகை சூடித் திரும்பவேண்டும் என

இராஜராஜன் வேண்டி பல விளக்குகளுக்கு வகை செய்துள்ளான். அவ்வாறு விளக்குகள் எரிப்பதற்கு பசுக்களையும், ஆடுகளையும், எருமைகளையும் அளித்திருக்கிறான். இவற்றை வீரர்களுக்கு அளித்து அவ்வீரர்கள் அவற்றை இக்கோயிலுக்கு கொடுத்திருக்கின்றனர். "வில்லவன் மூவேந்த வேளான் தன்னை உடையார் இராஜராஜதேவர் கோழிப்போரில் ஊத்தை அட்டாமல் என்று கடவ திருவிளக்குக்குத் தந்த" என்று குறிக்கப்பட்டுள்ளது இதை நமக்குத் தெரிவிக்கிறது. இதே போன்று பல வீரர்களுக்கும் குறிக்கப்பட்டுள்ளது. இராஜராஜன் விளக்குகள் எரிக்க தான் சில ஆடுகள் அளித்தான். அவன் படை வீரர்கள் சில அளித்தனர். ஒரு விளக்கு எரிக்க சாதாரணமாக 96 ஆடுகள் அளிக்கப்படுவது மரபு. இதற்கு இராஜராஜன், தான் 48 ஆடுகளைக் கொடுத்தான். மீது 48 ஆடுகளை தனது படை வீரன் அளிக்க வாய்ப்பளித்தான். தானும், தன் படை வீரனும் இணைந்து இவ்விளக்கு எரிக்க வகை செய்ததை, தங்கள் இருவர் பெயரையும் குறித்து பெருமைப்படுவதிலிருந்து காண்கிறோம். தனது வெற்றிகளுக்கு காரணமாக உயிர் கொடுக்க முன் வந்த பெரும் வீரர்களுக்கு எவ்வித ஊனமும் ஏற்படக்கூடாது என்ற அவனது வேண்டுதலும், அவர்களுக்குத் தன்னுடன் சமநிலை அளித்த பெருமையும் இராஜராஜன் ஒருவனிடத்தில்தான் காண்கிறோம். வியத்தகும் பரந்த மணப்பக்குவம். இச்சிறந்த மன்னன் ஒரு விளக்குக்கு அல்ல பல விளக்குகளுக்கு தான் பொருள் கொடுத்தபோது தனது படை வீரனையும் கொடுத்ததாகக் கல்வெட்டில் பொறித்துள்ள பெருமையைக் காண்கிறோம்.

**பணிப் பெண்ணுக்கும் சம அந்தஸ்து:**

படை வீரர் மட்டும்தானா? இல்லை, இல்லை. தன் கீழ் பணிபுரிகின்ற பணிப்பெண் கூட இதுபோல் விளக்குகளுக்குப் பொருள் கொடுக்கும் வாய்ப்பளித்து அவளுடைய பெயரையும் தனது பெயருடன் கல்வெட்டில் பொறித்துள்ள பெருமையைக் காண்கிறோம். "உடையார் இராஜராஜ தேவர் கொடுத்த கால்மாட்டில் அடுத்த பசு நாற்பத்து இரண்டும் உய்யக் கொண்டான் தெரிந்த திருமஞ்சனத்தார் வேளத்து பெண்டாட்டி (வேலைக்காரி) வரகுணன் எழுவத்தூர் திருவிளக்குக்கு வைத்த காசு" என குறிப்பிட்டுள்ள பெருந்தன்மையை, இராஜராஜனின் அளப்பரும் அன்புச் செல்வத்தைக் காணும்போது அவனுக்கு ஈடு இணையாக வேறு எந்த பேரரசனும் இருக்க முடியாது எனும் எண்ணம் மேலிடுகிறது.

இராஜராஜனுக்குத் தோள் கொடுத்து உடன் நின்று பணியாற்றிய வீரர்:

1. பெருந்தரம் உத்தரங்குடையான் கோன் வீதிவிடங்கனாந வில்லவன் மூவேந்த வேளான்
2. பெருந்தரம் மாராயன் இராஜராஜன்
3. பெருந்தரம் கண்டாச்சன் பட்டாலகனான நித்தவினோத விழுப்பரையன்.
4. பெருந்தரம் ஆலத்தூர் உடையான் காளன் கண்ணப்பனான் இராஜகேசரி மூவேந்தவேளான்.
5. பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளான்.
6. உடையார் இராஜராஜ தேவருக்கு நடுவிருக்கை செய்த இராஜேந்திர சிங்க வளநாட்டு மிறைக் கூற்று, காமரவல்லிச் சதுர்வேதி மங்கலத்து கோட்டையூர் பட்டன் பூவத்தன் பூவத்தனார்.
7. பெருந்தரம் நித்தவினோத வளநாட்டு ஆவூர் கூற்றத்து செம்பங்குடிச் செம்பங்குடையான் அமுதன் தேவனான இராஜவித்யாதர விழுப்பரையன்.
8. உய்யக்கொண்டான் தெரிந்த திருமஞ்சனத்தார் வேளத்து பெண்டாட்டி வரகுணன் எழுவத்தூர்
9. உடையார் ஸ்ரீ இராஜராஜ தேவர் மும்மடி சோழத் தெரிந்த பரிவாரத்தார்.
10. சேநாபதி குரவன் உலகளந்தானான இராஜராஜமஹாராஜன்.
11. மூலபரிவார விட்டேறான ஜனநாதத் தெரிந்த பரிவாரத்தார்.
12. திருமந்திர ஓலை இராஜகேசரி நல்லூர் கிழவன் காறாயில் எடுத்த பாதம்
13. பெருந்தரம் உலோக மாராயன்
14. சோனகன் சாவூர் பரஞ்சோதி
16. பெருந்தரம் வைரி சங்கரன்
17. நித்தவினோத வளநாட்டு பாம்புணி கூற்றத்து அரைசூர் உடையான் ஈராயிரவன் பல்லவயனான மும்மடி சோழ போசன்
18. பெருந்தரம் நம்பன் கூத்தாடியான ஜெயங்கொண்ட சோழ பிரும்ம மஹாராஜன்.
19. பெருந்தரம் வயலூர்க் கிழவன் திருமலை வெண்காடன்
20. பெருந்தரம் அருமொழி பல்லவரையன்
21. பெருந்தரம் நித்தவினோத வளநாட்டு மஹாராஜன்
22. பெருந்தரம் வயிரி அருமொழியான கரிகால கர்ணப் பல்லவரையன்
23. பெருந்தரம் கோன் சூற்றியான அருமொழிப் பல்லவரையன்

## தஞ்சாவூர் புறம்படியில் இருந்த தெருக்களும், குடியிருக்கைகளும்

**தெருக்கள்:**

1. கந்தர்வத் தெரு
2. மடைப்பள்ளித் தெரு
3. வில்லிகள் தெரு
4. ஆனையாட்கள் தெரு
5. ஆனைக்கடுவார் தெரு
6. பன்மையார் தெரு

**பெருந்தெருக்கள்:**

1. இராஜவித்யாதரப் பெருந்தெரு
2. வீர சோழப் பெருந்தெரு
3. ஜயங்கொண்ட சோழப் பெருந்தெரு சூரசிகாமணிப் பெருந்த ெரு

**அங்காடிகள்:**

1. கொங்கவாளார் அங்காடி
2. இராஜராஜ பிரும்ம மஹாராஜந் அங்காடி

**பேரங்காடி :**

1. திரிபுவன மாதேவிப் பேரங்காடி



**தஞ்சைப் பெருங்கோயிலில் இருவாயிற் கோபுரங்கள். இராஜராஜன் திருவாயிலும் கேரளாந்தகன் திருவாயிலும்**

**வேளம் :**

1. உத்தமசீலியார் வேளம்
2. அபிமாந பூஷணத் தெரிந்த வேளம்
3. உய்யக்கொண்டார் தெரிஞ்ச திருமஞ்சனத்தார் வேளம்
4. இராஜராஜத் தெரிந்த பாண்டித் திருமஞ்சனத்தார் வேளம்
5. அருமொழிதேவத் தெரிந்த திருப்பரிகலத்தார் வேளம்

**படைவீடு பிற:**

1. சிவதாஸன் சோலையான இராஜராஜ பிரம்ம மஹாராஜந் படைவீடு
2. ரௌத்தர மஹாகாளத்து மடவிளாகம்
3. பிரம குட்டம்

**தஞ்சாவூர் உள்ளாலையில் இருந்த தெருக்களும், குடியிருக்கைகளும்:**

1. சாலியத் தெரு
2. பாண்டி வேளம்

இராஜராஜன் ஏராளமான செப்புத் திருமேனிகளை செய்து அளித்திருக்கிறான். அவற்றினுடைய உருவ அமைதியை, அவை கரங்களிலே கொண்டுள்ள சின்னங்களை, அவற்றின் எடையைக் குறித்துள்ள சிறப்பு அளப்பரும் சிறப்பாகும்.

"இராஜராஜப் பெருந்தகையே, தமிழகத்தின் தவச்செல்வமே, சிந்தனைத் தெளிவில், செயலாற்றும் திறனில், வெற்றிச் சிறப்பில், மக்கள் பால் கொண்ட பேரன்பில், கலை ஆர்வத்தில், அனைத்திற்கும் மேலாகப் பக்திப் பெருக்கில் உனக்கு ஈடு யார்? இணை யார்?" என வியந்து மகிழ்கிறோம். அவனது புகழ் கூறுவதிலே இன்பம் பெறுகிறோம். இது எங்கும் நிலைக்க இறை அருளை இறைஞ்சுகிறோம்.



# 6. இராஜராஜ சோழன் முடிசூடிய திருநாள்

தஞ்சைத் தரணியை ஆண்ட மாமன்னர்களில் ஈடு இணையற்ற மன்னன் முதலாம் இராஜராஜ சோழன். இம்மன்னனைப் பற்றி அறிந்துகொள்ள தமிழ் மக்களுக்கு ஆர்வம் பெரிதும் உண்டு. அதுவும் அம்மன்னனின் ஆற்றலை, கலைத்தொண்டை, பக்தியை அதிகம் அறிந்துகொள்ள உணர்ச்சி பெருக்கிட்டு ஓடுவது இயற்கையே.

இராஜராஜனைப் பற்றிய ஆய்வுகளில் அவன் எப்பொழுது பட்டத்துக்கு வந்தான் என்பது ஒரு முக்கியமான கேள்வி. அவன் முடிசூடிய தேதியை பல அறிஞர்கள் கணக்கிட முயன்றிருக்கின்றனர். அண்மைக் காலத்தில் அவன் முடிசூடிய நாள் கி.பி.985ம் ஆண்டு ஜூலை மாதம் 18ம் தேதிதான். அன்று புனர்வசு நட்சத்திரம், தேய்பிறை. சனிக்கிழமை. அன்றுதான் முடிசூடினான் என திட்டவட்டமாக கூறி வருகின்றனர். அதுகுறித்து ஆய்வது இக்கட்டுரை.

இதற்கு அடிப்படையாக சில செய்திகளை காண்போம். கன்யாகுமரி மாவட்டத்தில் சுசீந்திரத்தில் இராஜராஜனின் கல்வெட்டு ஒன்று உள்ளது. "இராஜ ராஜ ராஜகேசரி பந்மர்க்கு யாண்டு பத்தும் யாண்டு துடங்கின கற்கடக ஞான்று," என்று உள்ளது. கீல்ஹார்ன் என்ற மேலைநாட்டு அறிஞர், இந்நாளை ஆராய்ந்தார். இராஜராஜனின் 10வது ஆட்சி ஆண்டு கற்கடக (ஆடி மீ) மாதம் தொடங்கியது என்று முடிவு செய்தார். (பத்தாம் யாண்டு தொடங்கின கற்கடக ஞான்று என்று உள்ளதால் இம்முடிவுக்கு வந்தார்.) ஆதலின் அவன் ஆடிமாதம் முடிசூடிக் கொண்டான் என்று தெரிகிறது என்றார். பின்னர் வந்த 'ராபர்ட் சீவல்' என்ற அறிஞர் இதன் அடிப்படையில் இராஜராஜன் 985ல் ஜூன் 25லிருந்து ஜூலை 12க்குள் முடிசூடியிருக்கக் கூடும் என்று அறிவித்தார்.

கோனேரிராஜபுரம் கல்வெட்டையும், உடையார்குடி கல்வெட்டையும் கொண்டு மேலும் சேதுராமன் ஆய்ந்துள்ளார். கோனேரிராஜபுரம் கல்வெட்டும் இராஜராஜன் காலத்தது. அவனது 26ம் ஆட்சி ஆண்டில் வெளயிடப்பட்டது. அதில் உள்ள பஞ்சாங்க குறிப்புகள் "ஆடி மாதம், தேய்பிறை, 14ம் நாள், புனர்வசு நட்சத்திரம், புதன்கிழமை," என்று

உள்ளது. இது கொண்டு இக்கல்வெட்டு கி.பி.1010ல், ஜூலை 12ம் தேதி வெளியிடப்பட்டது எனத் துல்லியமாக கூறலாம். இதிலிருந்து கி.பி.985ல் ஆடி மாதம் புனர்வசு நட்சத்திரம். ஜூலை 18ம் தேதி என்று கண்டுள்ளார்.

அதே போல் உடையார்குடி கல்வெட்டு இராஜராஜனின் மூன்றாம் ஆண்டு வெளியிடப்பட்டது. பஞ்சாங்க குறிப்புகள் ஆடி மாதம் திருவாதிரை நட்சத்திரம், சனிக்கிழமையாகும். ஆதலின் இவ்விரு கல்வெட்டுக்களையும் ஆய்ந்து இராஜராஜன் முடிசூடிய பெருநாள் 18.7.985, தேய்பிறை, சனிக்கிழமை, புனர்வசு நட்சத்திரம் என்று திட்டவட்டமாக அறிவித்திருக்கிறார். இராஜராஜன் ஆட்சி தொடங்கியது ஆடி மாதம் என்று கீல்ஹார்ன் எழுதியதை ஏற்றுக்கொண்டு அதன் அடிப்படையில் அமைந்த ஆய்வு இது.

சுசீந்திரம் கல்வெட்டை ஆழ்ந்து நோக்கினால் கீல்ஹார்ன் கொண்ட முடிவு தவறு என்று தெளிவாகத் தெரிகிறது. பண்டைய கல்வெட்டுகளில் ஒரு மரபு உண்டு. இவை தானம் கொடுத்ததைக் கூறுகின்றன. இவ்வாறு கூறும்போது, “இவ்வாண்டு இம்மாதம் முதல் இந்த தான பத்திரத்தில் உள்ளபடி நிறைவேற்ற வேண்டும். ‘கார் முதல்’ அல்லது ‘பசான்முதல்’ இவ்வாறு செய்யவேண்டும் என்று குறிப்பர். அதேபோல ''இந்த ஆண்டு, இந்த மாதம் தொடங்கின இந்நாள், இதை தானமாக வைத்தேன்,” என்று குறிக்கப்பட்டிருக்கும். ‘ஆண்டு என்ற சொல்’ ஆண்டில் என்ற பொருளில் வரும்.

இதே சுசீந்திரத்தில் இராஜராஜனுக்கு முன் ஆண்ட ஒரு பாண்டிய மன்னன் கல்வெட்டு உள்ளது. மாறஞ்சடையன் என்னும் அம்மன்னனின் கல்வெட்டில் ஒருவன் விளக்குக் கொடுத்த செய்தி உள்ளது. அதை, “யாண்டு இரண்டு இதன் எதிராண்டு துடங்கின கற்கடக ஞாயிற்று, “ என்று குறிக்கப்பட்டுள்ளது. இதற்கு எதிராண்டு ஆடிமாதம் தொடங்கியது என்று பொருள் இல்லை. எதிர் ஆண்டில் அதாவது, அடுத்த ஆண்டில் என்று ஆடி மாதம் தொடங்கியதோ அன்று என்பதே பொருள். ஆதலின் இராஜராஜன் கல்வெட்டில், “பத்தாம் ஆண்டே ஆடி மாதம்தான் தொடங்கியது,” என்று பொருள் கொண்டது தவறு. “பத்தாம் ஆண்டில் ஆடி மாதம் என்று தொடங்கியதோ அன்று என்பதுதான் பொருள்.” ஆடி மாதம் தொடங்கிய நாளைக் குறிக்கிறதே ஒழிய ஆண்டு தொடங்கியதை இக்கல்வெட்டு கூறவில்லை. இதற்கு எடுத்துக்காட்டாக எத்தனையோ கல்வெட்டுக்களை கூறலாம். கல்வெட்டு வாசகங்கள் பதிவு செய்யும் பத்திரங்களில் உள்ள வாசகங்கள் போன்றவை. ஆதலின் மிகவும் கவனமாக படித்தல் வேண்டும்.

கீல்ஹார்ன் கொண்ட தவறான கருத்தின் அடிப்படையில், இராஜராஜனின் பத்தாம் ஆண்டு ஆடி மாதம் தொடங்கியது. ஆடி மாதம் புனர்வசு நட்சத்திரம் இன்ன தேதியில் வருகிறது. ஆதலின் 985ல் ஜூலை 18ம் தேதி, சனிக்கிழமை தேய்பிறையில்தான் முடிசூட்டிக் கொண்டான் என்ற கருத்து ஏற்புடையது அல்ல.

அவ்வாறெனில் இராஜராஜன் முடிசூடிய தேதி எது என வினவில் இன்னும் சரியான சான்றுகள் வெளிப்படவில்லை என்பதுதான் சரி. அதுவரை இந்த தேதியை வைத்துக் கொள்ளக் கூடாதா என்றால் அது வரலாறு அல்ல. தனிப்பட்ட விருப்பம் என்பதாம்.



இராஜராஜனும் கருவூர் தேவரும், ஓவியம், பெருங்கோயில்

# 7. அருள்மொழி: ஆயிரம்



இராஜராஜன்

*சீர்மிகு சுந்தரச் சோழரின் செல்வ!*
*செந்திரு மடந்தை வானவன் தேவி*
*எழில்மான் பயந்த புலியின் ஏறே!*
*கரிகால் வளவன் பின்வரு காவல!*
*ஐப்பசித் திங்கள் சதயநாள் பிறந்தோய்!*
*அக்கன் குந்தவை அன்பினில் வளர்ந்தோய்!*
*அருண்மொழி என்னும் இயற்பெயர் கொண்டோய்!*
*இராசர் தம்ராசன் எனும்பெயர் ஏற்றோய்!*
*காந்தளூர்ச் சாலை கலமறுத் துகந்தோய்!*
*வேங்கை நாடும் கங்க பாடியும்*
*தடிகைப் பாடியும் நூளம்ப பாடியும்*
*குடமலை நாடும் கொல்லமும் கலிங்கமும்*
*எண்டிசை புகழ்தர ஈழமண் டலமும்*
*இரட்டப் பாடி ஏழரை இலக்கமும்*
*முந்நீர் பழந்தீவு பன்னீ ராயிரமும்*
*திண்திறல் வென்றித் தண்டார் கொண்ட*
*ராஜகே சரிக் கோவே உந்தன்*
*வாள்ஒளி படரா நாடும் உளதோ!*
*புலிக்கொடி பறந்திடாப் புவனமும் உண்டோ!*



திறையிடும் சிற்றரசர்

அரசர் கட்கரசே அடியினில் வீழ்ந்தனம்
பெருந்திறை கொணர்ந்தனம் பெற்றி ஈதெனப்
பொன்னும் பொருளும் புனைமணி அணிகளும்
முத்தும் பவளமும் மங்கலப் பொருட்களும்
கணக்கி னிலடங்கா கரிகளும் பரிகளும்
கடுகியே கொடுத்தனம்! கரதலம் கூப்பினம்!
எண்டிசை மன்னரும் ஈங்குற் றுள்ளோம்!
கண்ணோ க்காலே கரந்திடும் எம்தமை
உம்தம் அடிகளை எம்முடி மலர்த்த
சென்னியர் நாட்டின் சீர்புகழ் பரவிட
சிற்றரசாய் எமை ஏற்றிடும் எனவே
ஏத்திடும் அரசை எண்ணலும் எளிதோ!



உலகளந்த சோழன்

வேட்புலம் முதலாய் வென்றியாற் கொண்ட
காடும் நாடும் கல்லும் தெற்றியும்
திணைத் துளியளவே ஆயினும் தவிரா -
தூர்தொறும் ஊர்தொறும் ஊன்றியே அளந்து
விளைநிலம் ஈது! விளையா நிலமிது!
இறைதரு நிலமிது! இறைஇலி இதுவென
வளமையின் வகையால் தரம்தரம் பிரித்து
வளநா டுடனே பல்புரம் அமைத்து
பழம்பெயர் தவிர்த்து தன்பெயர் நிறீஇ
மண்டலம் கூற்றம் வளநா டூரென
மண்ணுல கறியா மாண்புடன் வகுத்து
வரியி லிடுவோர், வகைபல செய்வோர்,
கணக்கர், ஓலை, கண்காண் புரிவோர்
பண்டா ரத்தின் பொத்தக முடையோர்,
பட்டோ லையிடு பூட்சிப் பாட்டம்
திணைக்க ளத்துடனே, திருவாய்க் கேழ்வி,
நடுவு இருக்கை, நல்லறம் பகர்வோர்,
பெருந்தரம், சிறுதரம், வேளைக் காரர்,
அதிகார கரெனப் பாங்குட னமர்த்தி
ஊர்தொறும் குடவோலை முறைதனை நிறுவிய
உலகளந்த சோழ! உன்சீர் இந்த
உலகெலாம் பரவி புலவர்தம் நாவில்
இன்றும் உளதெனில் பிறிதும் உண்டோ
புகழ்தனைப் பெறவே!



திருமுறை கண்ட ப்பெரும்புகழ சோழன

தென்னா டுடைய தேவினை நாளும்
தேன்தமிழ் இசையால் பாடிய மூவர்
தேவா ரங்கள் காணா தொழிய
திருநா ரையூர் நம்பியின் துணையால்
தில்லைப் பதியில் பொல்லாப் பிள்ளை
திருக்கர நீட்ட அறைதனை தெரிந்து
மன்றுள் ஆடும் தெளி தேனுக்கும்
மன்னி அருளும் மலர்க் கொடிதனக்கும்
பதிகம் பாடிய மூவர் தமக்கும்
அன்புடன் திருவிழா அமைவுற எடுத்து
திருந்திய கதவம் திறனுடன் திறந்து
மறைந்த பாக்களை புற்றினில் கண்டு
மறையோர் புகழ இமையோ வியக்க
இவ்வுல கெங்கும் இசைப்பா தந்த
திருமுறை கண்ட பெரும் புகழ்ச்சோழ!
நின்பெயர்
தமிழ் உளவரையும் திகழ்ந்திடும் அன்றோ!



நித்த வினோதன்

உலகின் தோற்றமும் திதியும் மறைவும்
அளவில் பரவெளி அலைந்த இசையும்
நாத வெளிதனில் நடந்திடும் ஆடலும்
அண்ணல் வகுத்த அரும்கலை அன்றோ!
அம்மையும் அமர்ந்து அருளிய அன்றோ!
தேவரும் ரிஷகளும் தவம்புரி முனிவரும்
பெரியரும் சிறியரும் கண்டும், கேட்டும்,
களித்தும், சிறந்த கவின்முறை அன்றோ!
தேவர்தம் குலம்தொறும் தினம்புரி விழவில்
ஆடலும் பாடலும் அங்கம் என்ன
ஆகம நூல்கள் பகர்ந்திடு மரபை
ஆலயம் அனைத்தும் நடந்திட வகுத்தனை!
தளிச்செரி பெண்டிரும் தகவுடன் ஆட
திருப்பதி கங்கள் பண்ணுடன் இசைக்க
தென்தமிழ்நாடதில் எங்கும் திகழ்ந்திட
அன்று நீ அளித்தமை அன்றோ எம்மிடை
இன்றும் உளது! இவ்வரும் பாங்கே
என்றும் நிலைக்கும் என்னிடில் மிகையோ!
நித்த வினோத வாழ்த்தினம் நினையே!



பௌத்தம் போற்றிய பெருந்தகை

அலைகடல் கடந்த கடார நாடும்
விலையில் பொருள் கெழு விஜயதேசமும்
ஒருகுடைக் கீழே தனியர சாற்றிய
பெரும் புகழ் மாரவிஜயோத் துங்கன்
தன்னரும் தந்தையின் தனிப் பெயராலே
சொல்லரும் சீர்மிகு சூளாமணி எனும்
விஹாரை ஒன்று உன்னரு நாட்டில்
நாகைப் பட்டின நல்லூர் தன்னில்
போதி நீழற் புண்ணியன் வழியில்
போந்த பிக்கு சங்கம் திகழ
அமைத்திட நீயும் அருளினை அன்றோ!
ஆனைமங்கலப் பெயர் பெரும் ஊரை
பூசையும் விழாவும் பொலிந்திட தந்தனை!
உந்தன் பெயரால் பள்ளியும் அமைத்தனை!
எல்லாச் சமயமும் சமம்என ஏற்ற
உன்னிலும் உளரோ உயர் தவத்தோரே!



நின்புகழ் நிலைக்கும் ஆயிரம் ஆயிரம், ஆயிரம் ஆண்டே

*தஞ்சைமா நகர்தனிலே தரணியெலாம் போற்றிடவே*
*தக்கிண மாமேருவெனப் பெருங்கோயில் படைத்தனையே!*
*பெருங்கோயில் அதுதனையும் கருங்கல்லால் எடுத்தனையே!*
*கல்எல்லாம் அரும்பணியால் கலைப்பொருளாய் மாற்றினையே!*
*கலைமிளிர கண்வியக்கும் சிலைவடிவாய் நிறுத்தினையே!*
*சிலைகளையே செகம்புகழ செம்பாலும் வடித்தனையே!*
*கண்கவரும் ஓவியமும் வெண்சுதையில் விளைத்தனையே!*
*எண்ணிலா அணிகலன்கள் எண்ணியே அளித்தனையே!*
*பண்செய்த பயிர்நிலங்கள் நெல்அளக்க விடுத்தனையே!*
*நொந்தாமல் விளக்கெரிய நற்பசுக்கள் கொடுத்தனையே!*
*பதிகங்கள் பாடிடவும் பரதவகை ஆடிடவும்*
*பரிகலன்கள் எடுத்திடவும் பல்கணக்கு எழுதிடவும்*
*மெய்காத்து நின்றிடவும் பல்லோரை அமர்த்தினையே!*
*உயிர்அனைய தமக்கையுடன் உயர்காதல் தேவியரும்*
*உன்தானைத்தலைவருடன் உவந்தளித்தோர் கொடைகளையே*
*கல்லிலே வெட்டிவைத்துப் புதுச்சரிதம் படைத்தோய்நீ!*
*பரதவள நாடுமே பார்த்திராப் புரவலன் நீ!*
*சொற்கோயில் எடுப்பவரும் புனைந்தறியா புகழ்க்கோயில்*
*கற்கோயில் என்போமோ! கலைக்கோயில் என்போமோ!*
*புதியரில் புதியன் நீ! பழையரில் பழையன் நீ!*
*பண்பன் நீ! அன்பன் நீ! பக்தன் நீ! சித்தன் நீ!*
*சிவனடி மறவாச் செம்மால்! சிவபாதசேகர!*
*முத்தமிழ்ப் பெருமை மூவுலகேற்றிய மும்முடிச்சோழ!*
*இத்தரை எங்கும் நின்புகழ் நிலைக்கும்*
*ஆயிரம் ஆயிரம் ஆயிரம் ஆண்டே!*

# 8. வரலாற்றுப் பேராசிரியர் சேக்கிழார்

"இந்திய நாட்டின் வரலாற்றுப் பேராசிரியர்களில் ஈடு இணையற்றவராக திகழ்ந்தவர் சேக்கிழார்,"

தற்கால வரலாற்றாசிரியர்களும் கண்டு வியக்கும் வகையில் சேக்கிழார் வரலாற்றுச் செய்திகளை தொகுத்து தமது பெரியபுராணத்தில் கொடுத்துள்ளதை கல்வெட்டுச் சான்றுகளுடன் விளக்கலாம்.

சமீப காலங்களில் வரலாற்று ஆசிரியர்கள், அரசர்களின் வரலாற்றையும், போர்களையும் வெற்றிகளையும் மட்டும் கூறுவது வரலாறு அல்ல! மக்களுடைய வரலாற்றை எடுத்துக் கூறுவதே வரலாறு என்று கூறிவருகின்றனர். ஆனால் 850 ஆண்டுகளுக்கு முன்னரே, சேக்கிழார் தமது நூலில் முழுமையாக மக்கள் வரலாற்றிற்கே முதலிடம் கொடுத்து எழுதியுள்ளதைக் காணலாம். ஒவ்வொரு குடி மக்களுடைய வாழ்க்கையையும், படம்பிடித்துக் காட்டுவதுபோல் சேக்கிழார் எழுதியுள்ளது குறிக்கத்தக்கது. உதாரணமாக, காட்டில் வாழும் வேடர்களின் பழக்க வழக்கங்களைக் கண்ணப்பர் வரலாற்றில் அவர் அமைத்துள்ளதைக் காணலாம்.

வரலாறு எழுதுவது என்பது இன்றைய சமுதாயத்துக்கும் பயனளிப்பதாக இருக்க வேண்டும் என்று இன்றைய வரலாற்றறிஞர்கள் கூறுகிறார்கள். அன்றே சேக்கிழார் பண்பட்ட மக்களின் வரலாற்றை எடுத்துக் காட்டி சமுதாயம் சிறப்புற வேண்டும் என்ற நோக்கிலேயே தமது நூலை இயற்றியுள்ளதும் குறிப்பிடத்தக்கது.

நீதிமுறை, பொருளாதாரம், கல்விமுறை, நாடாட்சி, குடிமக்களின் பழக்கவழக்கங்கள், இயல், இசை, நாட்டியம் ஆகிய அனைத்தையும் தகுந்த இடங்களில் விரித்து இயற்றியுள்ளது சேக்கிழாரின் வரலாற்றுப் புலமைக்கு எடுத்துக்காட்டு.

வரலாறு என்பது பொதுவாக வறண்ட செய்தித் தொகுப்பாகவே அமையும். ஆனால் மாறாக அதை அனைத்து மக்களும் ஆர்வத்தோடு கேட்கவும், சொல்லவும், நல்ல உவமைகளுடன் கூடிய ஈடில்லாத காப்பிய நடையில் சேக்கிழார் படைத்துள்ளார் எனப்பண்டைய மக்களே குறிப்பிட்டுள்ளனர். இந்த வரலாற்றுப் பேராசிரியர்க்கெல்லாம்

பேராசிரியரை அன்றிருந்த அரசே உலகம் உவப்ப கவுரவித்து சிறப்புச் செய்தது.

சேக்கிழார் எழுதிய நூலின் பயனாக சுமார் 800 ஆண்டுகளாக அவர் குறித்துள்ள ஊர்களும், அடியவர்களும் தமிழ் மக்களின் மனத்தில் சிறந்த இடம் பெற்று, கலைகளும், இசையும், நாட்டியமும், மிக உயர்ந்த நிலையை அடைய அடிப்படையாக அமைந்தன. சேக்கிழார் இல்லையென்றால், பெரும்பாலான கோயில்களில் உள்ள கோபுரம், மண்டபங்கள், சுற்று மாளிகைகள், வழிபாடுகள் இல்லை என்றே கூறலாம்.

இன்று நம்மிடையே உள்ள தமிழ்ப்பண்பாடு, கலை முதலியவற்றிற்கு பெரும் காரணமாகத் திகழ்ந்தவர் சேக்கிழார். வரலாற்றை மட்டும் கூறுபவராக இல்லாமல் அக்காலத்திலிருந்து இன்றுவரை ஓராயிரம் ஆண்டுகளுக்கு மக்களின் வாழ்வையே நெறிப்படுத்திய ஒப்பற்ற செம்மல் சேக்கிழார் பெருமான்; அவரது சிறந்த தொண்டை தமிழகம் சிறப்பாக நினைவுகூற வேண்டும்.



சேக்கிழார் திருஉருவம், சிவபுரம்

# 9. சேக்கிழாரின் உருவச்சிலை



தில்லை நடராஜர் கோயில் மேலைக் கோபுரத்திருக்கும் சேக்கிழார் திருவுருவம்

தமிழ்மொழியில் ஈடு இணையில்லா வரலாற்றுக்காப்பியம் ஒன்றை எழுதிய பெருமை சேக்கிழார் பெருமானுக்கே சாரும். சோழமன்னன் இரண்டாம் குலோத்துங்கனின் அவையில் அமைச்சராக இருந்தவர் சேக்கிழார். அரசன் சமணக் காப்பியமாம் சிந்தாமணியைக் கேட்டு இன்புற்று வந்தான். இங்குவாழ்ந்த சைவப் பெரியார்களின் வரலாற்றை கேட்பாய் எனச் சேக்கிழார் கூற, தாங்களே அவ்வரலாற்றை எழுதவேண்டும் எனச் சேக்கிழாரைக் கேட்டுக் கொண்டான். அவ்வாறு தோன்றியதுதான் பெரியபுராணம். சேக்கிழார் ஒரு மஹத்தான வரலாற்றுப் பேராசிரியர்.

சுந்தரமூர்த்தி நாயனாரின் திருத்தொண்டத்தொகையை அடிப் படையாகக்கொண்டு அவருக்கு முன்பிருந்த அடியார்கள் வரலாற்றையும், அவர் சமகாலத்தில் வாழ்ந்த அடியார்களின் வரலாற்றையும், பின்வந்தோர்களின் வரலாற்றையும், தொகுத்து அவரவர்களின் நாடு இருந்த ஊர்கள் அவதரித்த திருமரபு சிவசமயத்தொண்டு பரமுக்திபெற்றோர்கள், சீவன்முக்தர்களாக வாழ்ந்தோர்கள் என தொகுத்து இவ்வரலாற்றை எழுதினார். இப்படி அடைவுபடப்பிரித்து யாவருக்கும் எளிமையாகப் புரிந்து கொள்ளும்படி

பொருள் தெரிந்து காப்பிய உவமைகளுடன் ஒரு பெரும் காப்பியமாக படைத்தார் என உமாபதிசிவம் தமது காப்பியத்தில் கூறுகிறார்.

சேக்கிழார் பெரியபுராணம் எழுதி முடித்ததை சோழன் கேட்டு வந்தோர்க் கெல்லாம் பொன்னும் பொருளும் வாரி வழங்கினானாம். அவரை பட்டத்து யானைமீது அமர்த்தி பெரும்விழா எடுத்தான் என்றும் அறிகிறோம். சேக்கிழார் பெரியபுராணம் எழுதிமுடித்தபோது மக்கள் அடைந்த மகிழ்ச்சியை உமாபதி சிவம் மிகஅழகாக பாடுகிறார்.

தேவரும் எழுதவொண்ணாத மறையை தமிழில் எழுதியுள்ளார் என்று மகிழ்ந்தார்களாம். தேவாரம் பாடிய மூவரும் ஒன்றாய் உலகில் உருவெடுத்தவர் சேக்கிழார் என்றனர். வான்மீகி முனிவரையோ வேதவியாசரையோ ஆதிசேடனையோ அகத்தியரையோ இவருக்கு ஈடாகக் கூறமுடியுமோ என்கிற அளவுக்கு பெரியபுராணம் சிறந்திருந்தது எனக் கூறினார்களாம். காப்பியவடிவிலே சொல்லின் எளிமையிலே பொருள் நயத்திலே ஆதாரத்தின் அடிப்படையில் தொகுப்பதிலே பெரியபுராணம் ஒப்பரும் தமிழ் வரலாற்றுக் காப்பியம் என்பதில் ஐயமில்லை. அன்றிலிருந்து தில்லைவரலாற்றையோ சைவ வரலாற்றையோ கூறப்புகுந்தால் சேக்கிழார் பெருமானை நினையாது இருக்கமுடியாது. அத்த கையப் பெருந்தகைக்கு அவர் வாழ்ந்த காலத்தி லேயே உருவச்சிலை எடுக்கப் பட்டிருக்கிறது. அச்சிலையும் தில்லையிலேயே இருக்கிறது எனக்காணும்போது தமிழ் மக்கள் பெரும் மகிழ்வு பெறலாம்.



அனபாய சோழன்
(இரண்டாம் குலோத்துங்கன்)

பெரியபுராணம் தோன்ற ஒருவகையில் காரணமாயிருந்த இரண்டாம் குலோத்துங்கச் சோழன் தில்லையில் பெரும் திருப் பணிகள் ஆற்றினான். தில்லை மாநகர் பொன்மயமாக்க திருமுடிசூடிய பெருமான்

என இவனை கல்வெட்டுகள் கூறும். இவனுக்கு திருநீற்றுச் சோழன் என்று ஒரு பட்டப்பெயர் உண்டு. இப்பொழுது தில்லையில் உள்ள வெளிப் பிராகாரத்துக்கு இவன் பெயர் உண்டு. இதை ஒட்டியுள்ள கோபுரத்துக்கும் இவன் பெயர் உண்டு என ஆறிகிறோம். இதன் நான்கு புறத்தும் நான்கு கோபுரங்களை எடுக்க வகை செய்தவனும் இவனே. இங்கு மேலைக் கோபுரத்தின் புறத்தே தெற்குப்பக்கத்தில் உள்ள பிள்ளையாருக்கு குலோத்துங்கச் சோழன் விநாயகப்பிள்ளையார் என்று அக்காலத்தில் பெயர் இருந்ததைக் கல்வெட்டுக் கூறுகிறது. ஆதலின் இக்கோபுரத்தை குலோத்துங்கன் கட்டினான் என்பதில் ஐயமில்லை.

இக்கோபுரத்தில் நுழைவாயிலில் தென்புறத்தே இரு உருவச்சிலைகள் உள்ளன. ஒன்றில் தாடியோடு காணப்படும் அரசன் சிலை. அருகில் முண்டித்த திருமுடியும் கழுத்திலும் கரங்களிலும் உருத்திராக்க மாலைபூண்டு கூப்பியகையினராக சிவப்பழமாக நிற்கும் பெரியார் உருவச்சிலையைப் பார்த்ததும் சேக்கிழாரின் நினைவு பளிச்சிடும். உமாபதி சிவம் சேக்கிழாரை எவ்வாறு சித்தரித்திருக்கிறாரோ அதே உருவை இங்கு காண்கிறோம். அனபாயசோழனும் சேக்கிழாரும் உடன் நின்று தில்லை அம்பலவாணனை சேவிக்கும் கண்கொள்ளாக் காட்சியை இங்கு இன்றும் காணலாம்.



# 10. ஆறுமுகநாவலர் படைத்த சேக்கிழார் திருவுருவம்

தமிழர் வரலாற்றில், தமது ஆட்சிப் பொறுப்பைத் துறந்து, சமய வாழ்க்கை மேற்கொண்டு தில்லையம்பதியில் நடராஜப் பெருமானின் தொண்டராக நாயன்மார்களின் வரலாற்றை ஈடில்லா காப்பியமாகப் படைத்து, என்றென்றும் தமிழ் மக்களின் மனதில் நீங்காமல் நிலைத்து நிற்கும் பெருமகனார் சேக்கிழார் பெருமானார். ஏறத்தாழ 900 ஆண்டுகளுக்கு முன்னர் குலோத்துங்கச் சோழன் அவையில் அமைச்சராயிருந்த சேக்கிழார் தில்லையில் ஆடவல்ல பெருமானே "உலகெலாம்" என்று அடியெடுத்து கொடுக்க பெரியபுராணத்தை எழுதி முடித்தார் என்பர், 14ம் நூற்றாண்டில் வாழ்ந்த உமாபதி சிவம் அவர்கள், பெரியபுராணம் எழுதிய வரலாற்றை 'சேக்கிழார் புராணம்' என்று எழுதியிருக்கிறார். அதில் இவ்வரலாறு பற்றி பின்வருமாறு குறிக்கிறார்.

அனபாயன் ஆகிய குலோத்துங்கச் சோழன் வேண்டுகோளின்படி சேக்கிழார் பெரியபுராணம் எழுதத் தொடங்கினார். அரசன் ஆர்வம் மேலிட தூதுவரை அனுப்பி, பெரியபுராணம் எவ்வளவு முடிந்துள்ளது என அறிந்துவரச் சொன்னானாம். தூதுவருக்குத் தெரியாமல் ஒற்றர்களை அனுப்பியும் அறிந்துவரச் சொன்னானாம். சென்ற தூதுவர்கள் கால்பகுதி முடிந்து விட்டது என்று ஓடி வந்து கூறி னார்கள். இன்னம் சிலர் பின்னர் போந்து அரைப்பகுதி முடிந்தது என்றனர் பின்னர் வந்தோர் பெரியபுராணம் முற்றிலும் எழுதி முடித்து விட்டார் சேக்கிழார் என்றனர். இச்செய்தி கொண்டு வந்தோருக்கு தன் கழுத்திலிருந்த மாலையை எடுத்துக் கொடுத்து, பொன்னும் பொருளும் நவரத்னங்களும் வாரி வழங்கினானாம் மன்னன். அவ்வளவு மட்டற்ற மகிழ்ச்சி அவனுக்கு. தில்லைக்கு அரசன் ஓடினானாம். வெற்றி முரசும் மணியும் அறைந்து, தெருவெல்லாம் அலங்கரித்து, யானை, குதிரை, தேர், கால்நடை வீரர்கள் ஆகிய நால்வகை சேனைகளுடன் சென்று சேக்கிழார் காலில் வீழ்ந்தான். முண்டமான திருமுடி; காதுகளில் குண்டலங்கள்; திருக்கழுத்திலும் மார்பிலும் ருத்ராக்ஷமாலைகள் இவைகள் அலங்கரிக்கத் திகழ்ந்த சேக்கிழாரை தொண்டர் சீர் பரவுவார்

என்று அடி வணங்கினான் . சேக்கிழார் பெருமானே திருத்தொண்டர் புராணத்தை நீரே வாசித்து பொருள் அருள வேண்டும் என வேண்டிக் கொண்டான். சேக்கிழாரே ஓராண்டு பெரியபுராணம் வாசிக்க அவ்வாண்டு முழுவதும் சோழவேந்தன் தில்லையிலேயே தங்கி அதைக் கேட்டு மகிழ்ந்தான் என்கிறது உமாபதி சிவாசாரியார் செய்த சேக்கிழார் புராணம்.



பெரியபுராணம் அரங்கேறிய தில்லை. ஆயிரக்கால் மண்டபம்

சேக்கிழார் இயற்றிய இம்மாபெரும் புராணத்தை அக்காலத்திலேயே ஓலைச்சுவடியில் எழுதினர் என அறிகிறோம். ஆதலின் பெரும்பாலும் ஓலைச்சுவடியிலேயே இருந்த இப்புராணத்தை அச்சுப் பதிப்புமுறை வந்த பிறகு மிகவும் சீராகக் காகித வடிவில் அச்சிட்டு ஆயிரக்கணக்கானோர் படித்து இது மேலும் பரவ வழிவகுத்த பெருந்தகை யாழ்ப்பாணத்து ஆறுமுகநாவலர். சேக்கிழார் சைவத்துக்கு செய்த பெருந்தொண்டுக்கு சமமானது 19ம் நூற்றாண்டில் ஆறுமுகநாவலர் செய்த அருந்தொண்டாகும். 1822ல் யாழ்ப்பாணம் நல்லூரில் தோன்றி 1879ல் மறைந்த இப்பெரியவர் தமிழுக்கும் சைவத்துக்கும் ஈடு இணையற்ற தொண்டு ஆற்றியவர். இவர் தமது பெரும் செல்வம் கொழிக்கும் பணிகளை எல்லாம் துறந்து, சைவத்துக்காகவே தம்மை அர்ப்பணித்துக்கொண்டு சிதம்பரத்தில் பல ஆண்டுகள் வாழ்ந்து அங்கு சைவபிரகாச வித்யாசாலை என்ற ஒரு பள்ளியை ஆரம்பித்தார். 1879ல் சிவபதவி அடைந்த இவருக்கும்

சேக்கிழாருக்கும் சிதம்பரம் ஞானபிரகாசர் குளக்கரையில் இன்றும் ஒரு கோயில் உள்ளது. ஆறுமுக நாவலரே மிகவும் முயன்று கோயில் எடுக்க முயன்றார். ஆனால் அது முற்றுப் பெறவில்லை. பின்னர் சேக்கிழார் கோயில் முடிக்கப்பட்டது. இங்கு சேக்கிழாருக்கும் ஆறுமுக நாவலருக்கும் உத்ஸவ விக்ரகங்கள் உள்ளன. ஆறுமுகநாவலருக்கு எடுக்கப்பட்டுள்ள இவ்வுத்ஸவ விக்ரஹத்தில் 11-12-1968ம் ஆண்டு அது செய்யப்பட்டதாகக் குறிப்பு உள்ளது.

அண்மையில் தில்லையம்பதியில் சேக்கிழாருக்குத் தனியாக இக்கோயில் அருகில் ஒரு பெரிய மண்டபம், மிக அழகாக அமைக்கப் பட்டுள்ளது. இம்மண்டபத்தை அமைக்க அமெரிக்கா நாட்டில் வசித்து வரும் திருமதி **காந்தை** ஜயகாந்தம் அம்மாள் அவர்கள் 15லக்ஷம் ரூபாய் நன்கொடை அளித்து இருக்கிறார்கள். சேக்கிழாருக்காக இவ்வளவு பெரும் பொருள் அண்மைக்காலத்தில் வழங்கிய பெருமை இவ்வம்மையாருக்கே சாரும். இம்மண்டபத்தை ஆறுமுகநாவலர் உயர்நிலைப்பள்ளியை நிர்வகித்து வருபவரும் சிதம்பரம் நாட்டியாஞ்சலி டிரஸ்டின் உபதலைவருமான திரு.க. சுவாமிநாதன் அவர்கள் சேக்கிழார் மண்டபத்தை அழகுற அமைத்துள்ளார்கள்.

தில்லை சேக்கிழார் கோயிலில், எழிலார்ந்த தஞ்சாவூர் பாணியில் தீட்டப்பட்ட ஓர் ஓவியம் இன்றும் உள்ளது. நூறு ஆண்டுகளுக்கும் மேலாக அது இங்கு இருப்பதாக திரு சுவாமிநாதன் அவர்கள் குறிக்கிறார்கள். இந்த ஓவியம் ஆறுமுகநாவலர் அவர்களாலேயே 1870 வாக்கில் செய்யப்பட்டதாகக் காணப்படுகிறது. இதில் பல அரிய செய்திகள் காணப்படுகின்றன. முதலில் மிகவும் பெரியதாக நடராஜப்பெருமான் தில்லையம்பதியில் பொன்னம்பலத்தில் இடப்புறத்தே சிவகாமி அன்னை நின்ற திருக்கோலம். ஆடவல்ல பெருமானின் காலடியில் இருமருங்கும் பதஞ்சலி முனிவரும் வியாக்ரபாத முனிவரும் சேவித்து நிற்கின்றனர். பொன்னம்பலத்தின் இருமருங்கும் ஐங்கரனும் முருகப் பெருமானும் உள்ளனர். முன் கீழே இரு பகுதிகளாக உள்ளன. முதலில் உபமன்னிய முனிவர் அமர்ந்து, தவமுனிவர்களுக்கும், சிவனடியார்களுக்கும் திருத்தொண்டர் வரலாற்றை எடுத்துரைக்கிறார். அவர் பின் நந்தியம் பெருமானும் பிருங்கி முனிவரும் சேவித்து நிற்கின்றனர்.

பெரியபுராணத்தை தொடங்கும்போது சேக்கிழார், தென்திசையில் தமிழ்நாட்டின் சிறப்பையும் அங்கு சுந்தரமூர்த்தி நாயனார் தோன்றியதன் சிறப்பையும் முனிவர்கட்கு கூறுவதாக தொடங்குகிறார். இதுதான் பெரியபுராணத்தின் காட்சியாக அமைகிறது. அதையே இந்த ஓவியத்தில் காண்கிறோம்.

அதன்கீழ் ஒரு பெரும் வரலாற்று நிகழ்ச்சியே காணப்படுகிறது. சேக்கிழாரை பட்டத்து யானைமீது அமர்த்தி ஊர்வலமாக அழைத்து வருகிறான் சோழ மன்னன். அவர்பின் அமர்ந்து அவருக்கு அவன் சாமரம் வீசி வருகிறான். பட்டத்து யானை முன்னே சிவனடியார்கள் எல்லாம் கொற்றக்குடை, ஆலவட்டம், பரிகலன்கள் ஏந்திமுன் செல்கின்றனர். அரச கலைஞர்கள் துத்தி, காளம், தாரை, கொம்பு, முதலிய இசைக்கருவிகளை வாசித்துமுன் நடக்கின்றனர். ஒருவர் நந்திபோல் முகம் அணிந்து முரசியம்பி செல்கிறார். யானையின் பின்னர் அமைச்சர், பிரதானியர், சிவனடியார் கூட்டம் வரிசை வரிசையாக செல்கின்றனர். சேக்கிழாரை பட்டத்து யானை மீதமர்த்தி அரசன் பெருவிழா எடுத்து வீதி உலாவாக வரும் பெருமிதக் காட்சி. சேக்கிழார் புராணத்தில் எவ்வாறு இக்காட்சி சித்தரிக்கப்பட்டுள்ளதோ அதே போல இந்த ஓவியத்தில் வரையப்பட்டுள்ளது.

சுருங்கக் கூறின் இந்த ஓவியம் பெரியபுராணம் தோன்றிய வரலாற்றையும் எழுதிமுடித்து சேக்கிழார் வீதி உலா வருவதையும் காட்டும் ஒப்பரும் வரலாற்று ஓவியம் இதை பெரியபுராண ஓவியம் என்றே கூறலாம். பெரிய புராணத்துக்கு பல சித்திரங்களை வரைந்து ஆறுமுகநாவலர் அச்சிட்டுள்ளது அனைவரும் அறிந்ததே. அவரே சேக்கிழார் புராணத்தையும், திருமுறை கண்ட புராணத்தையும் அச்சில் கொண்டுவந்துள்ளார். அவரது மாணாக்கர் இப்புராணங்களுக்கு முதலில் உரை எழுதினார். இந்த ஓவியமும் 1870காலக் கூட்டத்தில் வரையப்பட்ட ஈடு இணையிலா வரலாற்று ஓவியம் இன்றும் பாதுகாக்கப்பட்டு வருகிறது.



# 11. ஒட்டக்கூத்தன் கோயில்

தமிழ்க்காவிய உலகில் கவிச்சக்கரவர்த்தி என்று புகழ்பெற்றவர்கள் இருவர். இராமகாதை எழுதிய கம்பநாடர் ஒருவர். சோழப் பேரரசர்கள் மூவரின் அவையை அலங்கரித்து விக்கிரமச் சோழன், இரண்டாம் குலோத்துங்கச் சோழன், இரண்டாம் இராஜராஜன் ஆகிய மூவர் பேரிலும் மூவர் உலாவும், தாராசுரம் கோயிலை மையமாக வைத்து தக்கயாகப் பரணியும் பாடிய ஒட்டக்கூத்தன் இரண்டாமவன். ஒட்டக்கூத்தனுக்கு "கூத்தமுதலியார்" என்றும் 'மலரிவருங் கூத்தன்" என்றும் "கௌடப்புலவன்" என்றும் 'கவிசக்கரவர்த்திகள்" என்றும் பெயர்கள் உண்டு. இவனுக்கு தமிழ் மொழியிலும், சம்ஸ்கிருத மொழியிலும் இருமொழிப்புலமை இருந்ததால் "சர்வஞ்ஞ கவி" என்ற மற்று மொருபட்டமும் உண்டு. பெருமிதமான கவிகள் புனைவதில் வல்லவன் ஆதலின் "கவிராக்ஷஸன்" என்ற பட்டமும் காணப்படுகிறது. சைவ சமயத்திலும் சாக்த சமயத்திலும் ஆழ்ந்த அறிவு பெற்றிருந்த இவனது பாடல்களால் புலப்படும். மூவருலா, குலோத்துங்கள் பிள்ளைத்தமிழ், காங்கேயன் நாலாயிரக் கோவை, அரும்பைத் தொளாயிரம், ஈட்டி எழுபது, எனப் பல நூல்கள் இயற்றியுள்ளான். அரிசல் ஆற்றங்கரையில் கூத்தனூர் என்ற ஊரில் சரஸ்வதி தேவிக்கு கோயில் எடுத்து, அத்தேவியை தனது பாடலில் பரவியுள்ளான். இரண்டாம் இராஜராஜ சோழன் மீது உலாப் பாடியபோது அம்மன்னன், இவன் பாடிய ஒவ்வொரு கண்ணிக்கும் ஆயிரம் பொன் கொடுத்தானாம்.

இக்கவிச்சக்கரவர்த்திக்கு திருஞான சம்பந்தர் மீது அளவிலாத பக்தி உண்டு. ஆதலின் தான் பாடிய தக்கயாகப் பரணியில் ஞான சம்பந்தருடைய வரலாற்றை வெகுவாக எழுதியுள்ளான் ஞானசம்பந்தரை முருகப் பெருமானின் அவதாரமாகவே கூறுகிறான். தமிழ் முனிவனாம் அகத்தியர் மீது ஈடிலா மதிப்புள்ளவன். இரண்டாம் இராஜராஜன் மீது புதுமுறையில் தக்க யாகப்பரணி என்னும் நூல் பாடி சிறப்பித்தவன். தக்கன், சிவபெருமானை அவமதிப்பதற்கென்றே ஒரு யாகம் தொடங்கினான். சிவபெருமானின் சீற்றம் வீரபத்திரக் கடவுளாகத் தோன்றி தக்கன் யாகத்தை அழித்தது. அதனால் "தக்கயாகப் பரணிக்கு" வீரபத்திரப் பரணி என்றும் பெயர் உண்டு. வீரபத்திரரை தோற்றுவித்த சிவபெருமான், தாராசுரம் கோயிலில் உறைகின்ற பரமன். அந்தக்

கோயிலைச் சமைத்தவன் இராஜராஜசோழன் என அவன் புகழைப் பாடியுள்ளான்.



ஒட்டக்கூத்தர், வீரபத்திரர் கோயில், குடந்தை

வீரபத்திரக் கடவுளை சிறப்பாக வழிபடுபவர்கள் வீரசைவர் என்ற சைவப் பிரிவினர். சோழர்காலத்திற்கும் முன்பிருந்தே தமிழ் மக்களில் பலர் வீரசைவர்களாகத் திகழ்ந் திருக்கிறார்கள். இவர்களது மடங்கள் தமிழகத்தில் பல ஊர்களில் உண்டு. கும்ப கோணத்தில் மகாமகக் குளக் கரையில் "பெரியமடம்" என்று ஒருமடம் இன்றும் உள்ளது. இம்மடத்தை ஒட்டக்கூத்தன் தனது தக்கயாகப் பரணியில் பாடியுள்ளான். சோழர் காலத்திருந்தே இம்மடம் சிறப்புற்றிருந் திருக்கிறது. இதற்கு எதிரில் வீரபத்திரருக்கு ஒரு கோயில் உண்டு.

இக்கோயிலில் கருவரையில் வீரபத்திரச் சிலை உள்ளது. இதன் முன் மண்டபத்தில் பல சோழர்காலச் சிலைகள் - கணபதி, மகேசுவரி, பத்ரகாளி ஆகிய சிலைகள் உள்ளன. இங்குதான் ஒட்டக்கூத்தனுடைய கற்சிலை உள்ளது. தலையிலும், கழுத்திலும், கரங்களிலும், உருத்திராக்க மணி அணிந்து எடுத்துக்கட்டிய கொண்டையுடன் கம்பீரமாக இருகரங்களையும் கூப்பி வீரபத்திரரை கும்பிட்டு நிற்கும் இந்த மாக்கவியின் சிலை எழிலே வடிவானது. அவன் வாழ்ந்த காலத்திலேயே எடுக்கப்பட்டது. தமிழ்க்கவி ஒருவன், கவிச்சக்கரவர்த்தி என்ற பட்டம் பெற்ற ஒரு பெருமகள் வாழ்ந்த காலத்திலேயே எடுக்கப்பட்ட உருவச் சிலை இன்றும் உள்ளது என்று காணும்போது தமிழ் உள்ளங்கள் பெருமகிழ்ச்சியால் மலரும் என்பதில் ஐயமில்லை.

இக்கவிச்சக்ரவர்த்தியின் உருவச் சிலை மட்டும் அல்ல. அவனது சமாதியும் கும்பகோணத்துக்கு அருகில் தாராசுரத்தில் இன்றும் உள்ளது. அங்குள்ள வீரபத்ர சுவாமி கோயிலில் பின்புறம் சிவலிங்க வடிவில் உள்ளது கூத்தனின் சமாதி. இக்கோயிலில் சோழர்கால திருஞானசம்பந்தர் கற்சிலையும் உள்ளது. கூத்தனுக்கு சம்பந்தரிடம் சிறந்த பக்தி உண்டு என்று கண்டோம்.

கும்பகோணம், தாராசுரம் ஆகிய இரண்டு இடங்களிலும் உள்ள வீரபத்திரர் கோயில்கள் நாயக்கர் காலத்திலும், பின்னர் மராட்டியர் காலத்திலும் திருப்பணிகள் செய்யப்பட்டுள்ளன. வேறு எங்கும் காணக்கிடைக்காத அளவுச் செங்கல்லையே சிற்பமாக வடித்து மெய்சிலிர்க்கவைக்கும் கலைவண்ணத்தைக் இவற்றில் காணலாம். கோயில் கோபுரத்திலிருந்து ஒரு முழம் கூட விடாது, கோயில் இடம் ஆக்ரமிக்கப் பட்டு விரைவுவிரைவாக கட்டிடம் இப்பொழுது எழுப்பப்படுகின்றது. கோயில் வழிபாட்டுக்கும், எழிலுக்கும், பண்பாட்டுக்கும் உடைமைக்கும் ஏற்படும் அதிவேக அழிவுகள். சட்டமே மறைந்துவிட்டாயோ என்று கேட்கத்தான் தோன்றும்.

இவ் விருகோயில்களுக்கும் இப்பொழுது திருப்பணி செய்ய; பெரியவர் திருநாவுக்கரச முதலியார் அவர்கள் முயற்சி மேற்கொண்டு பணி நடைபெற்று வருகிறது. முதலியார் அவர்களுக்கு எப்பாடுபட்டாவது செங்கற் கலைப்பணியை காப்பாற்றவேண்டும் என்ற ஆசை. ஆர்வத்தோடு பணிபுரிகிறார்கள். இவை சிமெண்டு பூசி அழித்து விடாமல் காப்பாற்றப்படும் என எதிர்பார்க்கலாம்.





வீரபத்ரர் கோயில் - தாராசுரம்
ஒட்டக்கூத்தன் சமாதியுள்ளது

# 12. சிதம்பர முனியின் வரலாற்று ஆர்வம்

வரலாற்றில் இயல்பாகவே ஈடுபடுவோர் பலர் உண்டு. முந்தையோர் புராணவரலாற்றில் ஈடுபட்டிருந்தனர். இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த காஞ்சிபுரம் சிதம்பர முனிவர் பண்டைய தமிழ் வரலாற்றில் மிகவும் ஈடுபாடு கொண்டிருந்தார்.

காஞ்சிபுரத்தைச் சார்ந்த சிதம்பரமுனிவர் சிவஞானபோதத்துத் திராவிட மாபாடியம் எழுதிய சிவஞான யோகிகளின் சீடர். சிவஞான யோகிகள் 1785ல் சிவபரிபூரணம் அடைந்தார்கள். ஆதலின் சிதம்பர முனிவர் அக்காலத்தில் வாழ்ந்தவர் என்பது தெளிவு. தமிழ்நாட்டில் உள்ள முருகத்தலங்களைத் தொகுத்து க்ஷேத்திரக்கோவை ஒன்று இயற்றியுள்ளார். இதை **குமரகுருபரர் சரணத் தமிழ்மாலை** என்று அவர் பெயரிட்டு அழைத்தார். நூறு முருகத்தலங்கள் இவ்வாறு இடம் பெற்றுள்ளன. ஒரு தலத்துக்கு ஒரு பாடலாக நூறு பாடல்கள் உள்ளன. இவற்றை பிள்ளைத் தமிழ் மரபில் இயற்றியுள்ளார். இதை 'சுப்பிரமணியக் கடவுள் க்ஷேத்திரக் கோவை பிள்ளைத்தமிழ்" என்ற தலைப்பில் திருவாவடுதுறை ஆதீனத்தில் வெளியிட்டுள்ளனர். பாடல்கள் மிகவும் அற்புதமாக உள்ளன. இவற்றில் தான் சிதம்பர முனிவர் தமது வரலாற்று ஆர்வத்தை ஒவ்வொரு பாட்டிலும் வெளியிட்டுள்ளார்.

**சங்கத்தமிழ்**

மதுரை ஆலவாய் ஆறுமுகத்தையனைப் பாடும்போது சங்கத் தமிழ் வரலாறு இவர் மனதைக் கவர்கிறது. தலைச்சங்கத்தில் 4449 புலவர் தமிழ் ஓதினர். இடைச் சங்கத்தில் 449ன்மர் தமிழ்பாடினர். கடைச்சங்கத்தில் நக்கீரர் முதல் 49ன்மர் தமிழ் பாடினர். 4449-449-49 என மூன்று சங்கங்களில் புலவர்கள் இருந்தனர். அவர்களுக்கு விதிகளை எடுத்துச் சொல்லும் அகத்தியர் திகழ்ந்தார். அந்த அகத்தியருக்கு ஆதிகுருவாகத் திகழ்ந்தவர் முருகப்பெருமான். அங்கனம் திகழும் ஆலவாய் ஆறுமுகத்தையா தாலேலோ என்று பாடுகிறார்.

## திருமயிலைப் பாடல்

திருமயிலையம்பதியை நினைக்கிறார். அங்கு வள்ளுவப் பெருந்தகைதான் நினைவுக்கு வருகிறது. வள்ளுவர் தமிழ்க் கடவுளாம் முருகப் பெருமானின் கரத்திலிருந்து கனியை வாங்கிப் புசித்தார். அதனால் உலகுக்கு நீதியை ஒப்பிலா மரபாக எடுத்தியம்பினார். அது கேட்ட முடியுடை வேந்தர் அனைவரும் அவரது தாள் பணிந்தனர். தமிழில் ஈடிலாப் பாடல் பாடிய அவ்வைக்கு இளையவராகத் திகழ்ந்தார். சைவர் கன்மம், ஆணவம், மாயை என்னும் மூன்று மலங்களைக் கூறுவர். மனிதரின் மேம்பாட்டுக்கு முட்டுக் கட்டையாகத் திகழ்பவை இவை. அகண்ட இருளாக இவை அறிவை மூடியுள்ளன. சூரியனைக் கண்ட இருள் அகல்வது போல், இம்மும்மலங்களும் அகல வேண்டுமென்றால் காளியோடு ஆடும் பிரசண்ட தாண்டவப் பெருமானே உண்மை என அறிதல் வேண்டும் என்று வள்ளுவர் உணர்த்தினார். இதுவே நலம் என்று மால், அயன் ஆயதேவர்கள் எல்லாம் ஓதினர். நாட்டின் சிறப்புக்கு அறம், பொருள், இன்பம் என்னும் பொருள்களே ஞானங்கொடுத்து வீடுபேறு அளிக்கும். நால்வகை பொருள்களும் உலகோர் அனைவரும் அறிந்து கொள்வதற்காக வேதந்தமிழ் செய்தார் வள்ளுவர். அந்த வள்ளுவர் வாழ்பதியில் உள்ள குமரா சிறுபறை கொட்டி அருள். இங்குதானே வாயிலார் இருந்தார். எனக்கருதும் முருகா சிறுபறை கொட்டியருள் என்றார்.

இந்த திருமயிலைப் பாடலில் முழுமையாக இடம் பெறுவது வள்ளுவர். அவரைப் பற்றி நான்கு முக்கிய செய்திகள் இடம் பெறுகின்றன. முருகன் கொடுத்த பழத்தை புசித்து உலகநீதி கூறியதால் முடி மன்னர் வணங்குகின்றனர் (அதியனுக்கு நெல்லிக் கனி ஈந்த) அவ்வைக்கு இளையவராய் திகழ்ந்தார். சைவசமயச் சிறப்பை எடுத்தியம்பினார். அறம், பொருள், இன்பம், ஞானம் என்ற நான்கும் உலகோர்அறிய வேதத்தை தமிழ் செய்தார் என்பன.

வள்ளுவர் சைவநெறியைப் பின்பற்றினார் என்றும், திருக்குறள் வேதத்தின் சாரம் என்ற கருத்தும் இருநூறு ஆண்டுகளுக்கு முன் கருதப்பட்டது என்று சிதம்பர முனிவரின் பாடலால் தெரிய வருகிறது. மயிலையை நினைக்கும் போது வள்ளுவர் தான் நம் கண்முன் நிற்கிறார் என்பதும் இதனால் தெளிவு

## கூகைவலஞ்செய்யும் குன்று

கடும் இருளில் காணும் சக்தி வாய்ந்தது கூகை என்னும் பறவை. புறா முதலிய பறவைகளை இரவில் அடித்துத் தின்னும் பறவை இது. இதன் அலறல் பயங்கரமாக இருக்கும். நாய், நரி, பேய்கள் உலவும் ஈமப்புறங்காட்டில் உயரமாக வளர்ந்த மரங்களில் இது தங்கும் என்றும்,



திருவள்ளுவர் சிலை - லண்டன் பல்கலைக்கழக வளாகத்தில் உள்ளது

கோட்டான், ஆந்தை முதலிய பறவைகளுடன் இவையும் கொடும்பறவைகளில் ஒன்றாகக் கூறுவர். கொடுமையான இந்தப் பறவை கூட சிவபெருமானைப் பாடி உய்ந்ததாக ஒரு தலவரலாற்றில் கூறியுள்ளனர். திருக்கழுக் குன்றத்தில் இரண்டு கழுகுகள்

சிவபெருமானை தினந்தொறும் வந்து வணங்குவதாக கூறுவர். உண்மையில் இவர்கள் இருவரும் இருமுனிவர்கள் என்றும் காசியபர் என்னும் முனிவரின் மைந்தர்கள் என்றும் ஒரு சாபத்தால் கழுகாகப் பிறந்து நாள்தொறும் இராமேச்சுரம் சென்று மூழ்கி, திருக்கழுக்குன்றம் வந்து பரமனைப் பணிந்து காசி, செல்வதாக வரலாறு. இன்றும் இரு கழுகுகளுக்கு திருக்கழுக்குன்றத்தின் உணவு அளிப்பது கண் கூடு. இவ்விரு கழுகுகளும், இராமேச்சுரத்திலிருந்து வடமுகமாய் கழுக்குன்றம் செல்லும் வழியில் உள்ள கொடுங்குன்றம் என்னும் மலையை வலஞ் செய்து பின்னர் செல்கின்றனர் என்பர். கொடுங்குன்றம் என்பது இப்பொழுது பிரான்மலை என்று அழைக்கப்படுகிறது. மதுரைக்குப் பக்கத்தில் உள்ள இங்கு மலையில் உள்ள சிவாலயம் திருஞான சம்பந்தர் பாடல் பெற்றது. முருகப்பெருமானுக்கு உகந்த தலம். நாள்தோறும் இம்மலையை வலஞ்செய்யும் இருகழுகுகளும் பாடல்களைப் பாடிக்கொண்டே வலம் செய்யுமாம். என்ன பாடல்கள்? சைவப் பெரியார் நால்வர் பாடல்களைப் பாடிக் கொண்டே வலம் வருமாம். அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகியோரின் தேவாரப்பதிகங் களையும், மாணிக்கவாசகரின் திருவாசகத்தையும் பாடிக்கொண்டே மங்கைபாகா என்று துதித்துகொண்டே வலம் வருமாம். பிரான்மலை முருகனைப்பாடும் போது சிதம்பர முனிவர், இவ்விரு கழுகுகளின் வரலாற்றை நினைவு கூர்ந்து, இவைகள் கூட பாடும் தேனினும் இனிய பாகு போன்றவை நால்வரின் பாடல்கள் எனக்கூறி முருகனைப் பரவுகிறார். நால்வரின் பாடல்கள் அவ்வளவு சிறப்புடையவை என நால்வர் பெயரும் கூறிப் பாடுகிறார்.

**பாடல்**

*ஊகம் திரிகாலத் தியல்பு முணர்ந்த உபய முனிவரர்கள் ஒரு*
*சாபத்தால் கழுக்குன்றின் உயர்ந்த கழுகாம் காரணப் பேர்*
*ஏகன் சம்பந்தப்பெருமான் இலங்கு திருநாவுக்கரசிங்*
*கெனையாள் சுந்தரப் பெருமாள் எழில் மாணிக்க வாசகன் சொற்*
*பாகுநிகர் தேவாரங்கள் பகரும் திருவாசகங்களும பொற்*
*பரமன செவியிலேற மங்கைபாகாவென்று துதிசெயது*
*கூகை வலஞ்செய் கொடுங்குன்றிற் குமரா தாலோ தாலேலோ*
*குருவே குணமாம பொன்மேருக்குனறே தாலே தாலேலோ*

**உஜ்ஜயினி**

உச்சயினி மாநகர் பண்டைய இந்தியாவில் புகழ்மிக்கது. அங்கு வாழ்கின்ற முருகப் பெருமானையும் சிதம்பரமுனிவர் பாடுகிறார். அதைப் பாடும்போது அவருக்கு பல வரலாற்று நாயகர்களின் நினைவுதான் வருகிறது. பஞ்சபாண்டவர்கள், விக்கிரமாதித்தன் முதலிய

பொற்புடை மன்னர்கள் எல்லாம் ஆண்ட பதி என்கிறார். இப்பதியை எண்ணுங்கால் காசி, காஞ்சி, துவாரகை, அயோத்தி, மதுரா, மாயாபுரி முதலிய புகழ்வாய்ந்த நகரங்களோடு ஏழாவது நகராக சப்தபுரியாகத் திகழ்வது உச்சயினி. இதற்கு அவந்திகா என்றும் பெயர் உண்டு. இங்கு செப்பரும் வடமொழிக் கவிஞன் காளிதாசன் வாழ்ந்தான். ஆதலின் அவனை சிதம்பரமுனிவர் நினைவு கூறுகிறார். அவன் போற்றிய உஜ்ஜயினி மாகாளியைக் கூறுகிறார். இத்துடன் உஜ்ஜயினுக்கு மற்றும் ஒரு சிறப்பும் உண்டு. இந்நகரை அப்பர்பெருமான் பாடியிருக்கிறார் என்றால் இதன்புகழ் கூற வேண்டுமோ. வாகீசர் போற்று புரி என்கிறார். அப்பாடலைப் பாருங்கள்.

*கற்பகமெனும் காசிபுரி காஞ்சிபுரி துவா*
*ரகாபுரி அயோத்தியா புரி*
*கருது மதுராபுரி கவின்கொள் மாயாபுரி*
*கலந்த ஓராறு புரியோ*
*டற்புத மிகுந்திடும் தன்னொடு சத்தபுரி*
*ஆகியே நின்றருள் புரி*
*அரனருளினால் பஞ்ச பாண்டவர்கள் விக்கிர*
*மாதித்தரே யாதியாப்*

*பொற்புடைய மன்னவர்களாண்டபுரி வாகீசர்*
*போற்றுபுரி காளிதாசன்*
*போற்றுமாகாளி பூசித்தபுரி என்னிலாப்*
*புண்ணியர்கள் வாழ்ந்திடுபுரி*
*சிற்பரா நதிபெருக அவந்திகாபுரி முருக*
*சிறுதேரு ருட்டி யருளே*
*செகமெலாம் உச்சினி என்னவருபுரிமுருக*
*சிறுதேருருட்டியருளே.*

இதுபோல் சைவவரலாற்றில் சிறப்பிடம் வகித்த தலம் "ஸ்ரீசைலம்" என்பதாம். திருப்பருப்பதம் என்றும் அழைக்கப்படும் இப்புண்ணியத் தலத்தைப் பற்றி பல செய்திகளை சிதம்பர முனிவர் அருளுகிறார். இம்மலையின் சிகரத்தை தரிசித்தாலே முக்தி உண்டு. முருகப் பெருமானுக்கு மயில்தர காசிபமுனிவர் இங்கு தனது உயிர் நீத்தாராம். பலபல பெரியோர்கள் தமது உடல் இவ்வுலகுக்குச் சுமை என்று கருதி தமது உயிரை இம்மலையில் நீத்திடுவர். வடக்கிருந்து உயிர் நீத்தல்போல். கந்தன் தமது தந்தையாம் சிவபரனை இங்கு பூசித்தாராம் உமை அன்னை சிவபெருமானை அர்ச்சிக்கும் போது அவருக்கு மகிழ்ச்சி உண்டாக்க அகத்தியமுனிவர் காசி மகிமையை இங்கு எடுத்துரைத்தாராம். எண்ணிலா அடியார்கள் இம்மலையிலிருந்து சிறு சிலைகளை எல்லாம் சிவலிங்கம் என்று அணிந்து கொள்வார்களாம்.

அம்மலைவாழ் முருகா. சிறுதேர் உருட்டியருள் என்று பாடுகிறார். ஸ்ரீசைலமலை வீரசைவர்களின் சிறந்த க்ஷேத்திரமாக வணங்கப்படுவது. அவர்கள் தங்கள் கழுத்தில் எப்பொழுதும் சிவலிங்கத்தைக் கட்டியிருப்பார்கள். அவர்களை லிங்கம் கட்டிகள் என்று அழைப்பர். அவர்களில் ஏராளமானோர் இங்கிருந்து சிறுகற்களை சிவலிங்க மெனத் தரிக்கிறார்கள் என்ற வரலாற்றுக் குறிப்பை ஸ்ரீசைலப் பாடலில் குறிக்கிறார்.

சிதம்பரத்தில் மேலைக் கோபுரத்தில் அறுமுகப் பெருமானின் திருவுருவம் உள்ளது. அது சிறப்பாக வழிபடப்படுகிறது. சிதம்பரத்தில் சிவகாமியன்னை கோயிலுக்கருகில் பாண்டிய நாயகம் என்று முருகப் பெருமானின் கோயில் புகழுடைத்து. அங்கு சிறப்பாக பூசை நடைபெறுகிறது. இருப்பினும் மேலைக்கோபுரத்து அறுமுகனுக்கும் சிதம்பரமுனிவர் காலத்தில் வழிபாடு ஓங்கியிருந்தது என்பது அவர் பாடலால் அறிகிறோம். மேலைக் கோபுரத்தே உள்ள அறுமுகவேளை. ஆனந்த நடம்புரியும் நடராஜப்பெருமானும் சிவகாமியன்னையும் காக்கின்றனர். அவரோடு வெண்தாமரை மீதமர்ந்த ஸரஸ்வதிதேவியும் செந்தாமரை மீதமர்ந்த திருமகளும், சப்த மாதர்களும், துர்க்கை மாதாவும், பத்ரகாளியும் காக்க என்று பாடுகிறார்.

*சீரார் சிதம்பரத்தே செம்பொன் மேலைக் கோபுரத்தே*
*திகழும் மூவாயிரவர் பூசை செய்யும் ஆறுமுகவேளைக்*
*காரார் கூந்தல் சிவகாமி காண அருளானந்தநடம்*
*காட்டும் பரமசிவன் அருளும் கருணாநிதியைத் தனி புரக்க*
*நீரார் வெண்டாமரையாளும் நெடியோன் செந்தாமரை யாளும்*
*நிரைவாம் சத்தமாதாவும், நிலைக்கும் துர்க்கை மாதாவும்*
*பாரார் தரிக்கும் முகம் கரம் கண்பரவாயிரம் ஈராயிரம் மேல்*
*பகரும் மூவாயிரம் வீரபத்ர காளி யன்னையுமே.*

மாணிக்கவாசகப் பெருமான் திருவாசகமும், திருக்கோவையாரும் பாடினார். திருக்கோவையார் இன்பரசம் ததும்பும் அகத்துறைப் பாடல்களாக அமைந்தவை. ஆதலின் மாணிக்கவாசகப்பெருமான், இன்பரசம் நிறைந்து விளங்கும் திருக்கோவையாரை பாடியிருக்க மாட்டார் என்றும், அது வேறுயாரோ பாடியது என்றும் சில ஆராய்ச்சியாளர் கூறுவர். சிறந்த சைவ அறிஞரான மு. அருணாசலம் அவர்களே இவ்வாறு கருத்துக் கூறியுள்ளார். ஆனால் சிதம்பர முனிவரே திருவாசகத்தையும் கோவையாரையும் மாணிக்க வாசகரே பாடியுள்ளார் என்று கூறுகிறார். கோயிலிலே ஆடுகின்ற பெண்கள் இப்பாடல்களைப் பாடி விழாக்காலங்களில் பரமனைப் பாடி ஆடும் பாடல்கள் இவை. ஆதலின் இவற்றை மாணிக்கவாசகர் பாடியிருக்கமாட்டார் என்று எண்ணத் தேவையில்லை. பாடலைப் பாருங்கள்

*எனையும் ஒருபொருளெனத் திருவுளத்தெண்ணியே*
*என்கனவு முன்பு வந்தே இருந்தருள் செய் குருவடிவு*
*காட்டியே கருணையுடன் இணையடி என்முடி வைத்தவன்*
*உனைமுனம் பெற்றவன் ஒன்றொழிய ஆயிரம்*
*உயர்ந்த கணநாதர்சூழ் ஒருபெருந்துறைதனில்*
*குருந்தமர நீழலில் உகந்துறையும் பரம நாதன்*
*வனச மலரடி பெருகும் ஆனந்தமதுவுண்டு*
*வண்டளி கடுப்ப மதுர வாசகம் கோவைபாடும்*
*பெரிய மாணிக்க வாசகன் என்னும் ஞான*
*தினகரன் மகோதயஞ் செய் வாதபுரி முருக*
*திருவாயின் முத்தமருளே தென்னவன் பிரமராயன்*
*புகழவரு குமர திருவாயின் முத்த மருளே*

என்று திட்டவட்டமாக கூறியுள்ளதால் இதில் ஐயத்துக்கு இடமில்லை.

திருவிடைக்கழி என்ற பதிமீது கருவூர் சித்தர் திருவிசைப்பாமாலை பாடியுள்ளார் என

*.................................. மதுர*
*கவிபாடுகின்ற கருவூர் சித்தரைக் கண்டு*
*கன்றின் முன் தாய்வருதல் போல*
*ஒருவடிவு காட்டியே திருவிடைக் கழியிளில்*
*உகந்த நம்மைப் பாடென*
*உல்லாச ஆனந்த வெள்ளத்துள் மூழ்கியவர்*
*உள்ளன்புடன் பாடிய*
*திருவிசைப் பாமாலை சூடும்ஓர் ஈராறு*
*திண்புயாசலன் வருகவே*

என்று பாடுகிறார்.

உமாபதிசிவம் திருமுறை கண்டபுராணம் என்று ஒரு புராணம் இயற்றியுள்ளார். இதில் இராசராச அபயகுலசேகரனாகிய சோழமன்னன், திருநரையூர் நம்பியாண்டார் நம்பியின் உதவியோடு, தில்லையம்பதியில் ஓர் அறையில் புற்றில் மறைந்து கிடந்த திருமுறை ஓலைச்சுவடிகளை கண்டெடுத்த வரலாறு கூறுகிறார். அ.ச. ஞானசம்பந்தம் போன்றவர்கள் இது கட்டுக் கதை. பின்னர் யாரோ எழுதியது என்று கடுமையாக மறுத்திருக்கிறார்கள். அண்மைக்காலத்துக் கட்டுக்கதை இது என்பது அவர் வாதம். ஆனால் இது அண்மைக் காலத்தது அல்ல. சிதம்பர முனிவர் காலத்துக்கும் முன்பேயிருந்தது என்று அவர் பாடலால் காணலாம். உமாபதி சிவம் கூறிய வரலாற்றை சிதம்பர முனிவர் அப்படியே தமது பாடலில் கூறுவதைப் பாருங்கள்.

*முகில்போல் பொழியும் மூவர்திரு*
*முறைகண்டெடுக்கச் சோழேசன்*
*முக்காலத்தினியல்புணர்ந்த*
*முத்தர் நம்பியாண்டார் தாள்*
*புகழ அங்கே நிவேதித்த*
*பொற்பார் மோதகாதியெல்லாம்*
*பொருந்த துதிக்கையாலெடுத்துப்*
*பொசிக்க அவர்தாம் பின்கேட்க*
*மகிழ்ஐங்கரத்தோன் கனகசபை*
*வாயுதிக்கில் இருந்த தென்றே*
*வந்தே அருளத் திருமுறையில்*
*வையமெல்லாம் வாழவைத்துத்*
*திகழு நாரையூர் குமரா*
*சிறியேஞ் சிற்றில் சிதையேலே*
*தெய்வக் குறப்பெண் மணவாளா*
*சிறியேஞ் சிற்றில் அழியேலே.*

என்று திருமுறைகண்ட வரலாற்றை திருநாரையூர் பாடலில் பாடுகிறார். அதுபோல குன்றத்தூர் முருகனைப் பாடும்போது சேக்கிழார் வரலாற்றைக் கூறுகிறார். நம்பி ஆரூரனாகிய சுந்தரர் திருத்தொண்டத் தொகை பாடினார். அவற்றின் பொருளை திருநாரையூர் பொல்லாப்பிள்ளையார் எடுத்துக் கூறினார். இவற்றில் 73வர் கதைகள் அடங்கியிருந்தன. அதை நம்பி ஆண்டார் நம்பி திருத்தொண்டர் திருவந்தாதி என்று பாடினார். தில்லையம்பதியில் சிற்றம்பலத்தில் ஆடும் அண்ணல் நடராஜப் பெருமான் "உலகெலாம்" என்று சொல் எடுத்துக்குறிக்க குன்றத்தூர் சேக்கிழார் திருத்தொண்டர்புராணம் விரித்துரைத்தார். இவ்வரலாறு அனைத்தையும் சிதம்பரமுனிவர் தமது குன்றத்தூர் பாடலில் பாடுவதைப் பாருங்கள்.

*காக்க நம்பியாரூரர்*
*கவினார் திருத்தொண்டத்தொகைக்கு*
*காரார் சோலை நாரையூர்க்*
*கரிமாமுகத்தோன் பொருளுரைக்க*
*ஆக்கம் எழுபத்தின் மூவர்*
*அணிசேர்கதை எல்லாம் அடக்கி*
*அறைந்த நம்பி யந்தாதி*
*அரிய சிற்றம் பலத்துள்ளே*
*தூக்கும் பதத்தோன் திருவாக்குத்*
*தோன்ற உலகெல்லாம் என்று*

*சொல்ல எல்லாம் அறிந்து*
*திருத்தொண்டர் புராணம் விரித்துரைத்த*
*சேக்கிழார் வாழ் குன்றத்தூர்ச்*
*சேயே சிற்றில் சிதையேலே*
*தெய்வ யானை மணவாள*
*சிறியேஞ் சிற்றில் சிதையேலே*

இதுபோல் வரலாற்றில் சிறந்த கங்கை கொண்ட சோழபுரத்துப் பெருங்கோயிலைப் பாடியிருக்கிறார். ஒவ்வொருபாடலிலும் ஒரு வரலாற்றுச் செய்தியைத் தொடர்ந்து குறிக்கும் சிதம்பர முனிவரின் வரலாற்று ஆர்வத்தை எண்ணி எண்ணி மகிழலாம். அவரைப் பற்றி ஒரு ஆய்வு நூலே எழுதலாம்.



சிக்கல் சிங்கார வேலர்

# 13. கவிசொல்

''பித்தனென்றே என்னைப் பாடு" என வெண்ணெய் நல்லூர் பெருமான் அடிஎடுத்துக் கொடுக்க சுந்தரர் பாடிய தேவாரம் நமக்குக் கிட்டியது. அதேபோல் ''அடியாரைப் பாடு"என திருவாரூர்ப் பெருமான் கூற" தில்லை வாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என திருத்தொண்டத் தொகை பாடினார் சுந்தர மூர்த்தி சாமிகள். திருநரையூர் நம்பியாண்டார் நம்பிக்கு பொல்லாப் பிள்ளையார் அடி எடுத்துரைக்க ''திருத்தொண்டர் திருவந்தாதி பாடினார்.

திருத்தொண்டர் வரலாற்றை பெரியபுராணமாகப்பாட சேக்கிழார் பெருமானுக்கு "உலகெலாம்" என்ற அடியைத் தில்லை ஆடவல்லபெருமான் எடுத்துக் கொடுத்தார். நமக்கு ஈடில்லா பெரியபுராணம் கிடைத்தது. சிவபெருமான் எடுத்துரைக்க கவிபாடிய சுந்தரர் போல் பலரை நாம் அறிவோம். செந்தமிழ் செல்வனாகிய முருகப்பிரான் இதே போல் பல கவிஞர்களுக்கு அடியெடுத்து கொடுத்துள்ளதாகவும் அவ்வருளால் நமக்கு கவிதைகள் கிட்டியுள்ளன என்றும் சான்றோர் கருதியுள்ளனர். அவ்வாறு அருள்பெற்ற கவிஞர்கள் யார் எனப் பட்டியல் போட்டு தருவது போல் உள்ளது ஒரு பாடல். அப்பாடலை இயற்றியவர், கச்சி சிதம்பரமுனிவர். திராவிட பாடியம் இயற்றிய மாதவச் சிவஞான யோகிகளின் சீடர். அவர் இயற்றியுள்ள குமரகுருபரன் சரணத் தமிழ்மாலை யென்னும் சுப்ரமணியக் கடவுள் க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத் தமிழில்தான் இப்பாடல் உள்ளது. இருநூறு ஆண்டுகளுக்கும் முன் எழுதப் பட்டுள்ளது. திருவாவடுதுறை ஆதீனம் குருமகா சந்நிதகள் அவர்களின் திருவுளப் பாங்கின் படி இருமுறை வெளியிடப்பட்டுள்ளது. நூறுபாடல்கள் உள்ள இந்நூலில் புள்ளிருக்குவேளூரில் உள்ள முத்துகுமாரசாமியைப் பாடும்போது இந்தப் பட்டியல் கிடைக்கிறது.

பிரும்மா, சுரகுரு, இந்திரன், தென்பொதியமலை முனிவனாம் செந்தமிழ்ச்சொல் அகத்தியன், நக்கீரன், ஒளவை, பொய்யாமொழிப் புலவர், அருணகிரிநாதர், பல சித்தர்களும் போற்றும் கருவூர் சித்தர். பகழிக்கூத்தர், சிவானந்த குமரகுருபரர் ஆகிய அத்தனை பெரியோர் களுக்கும் கவிபாடும் ஆற்றலை அருளிய பெருமான் முருகப்பெருமான். அவர்களுக்கு கவிசொல் என்று அடி எடுத்து கொடுத்த முத்துக் குமரா

உன் கனிவாய் முத்தம் அருள் என்று பாடுகிறார் சிதம்பர முனிவர். அப்பாடலைப்பாருங்கள். (ஞ.25)

தெய்வநம்பிக்கையும், அதில் ஆழ்ந்தபக்தியுடைய உள்ளங்கள் தான் கனிந்து தெய்வ அருள்பெற்று இறவாக்கவிதை இயற்றுகிறார்கள் என்பது நமது நம்பிக்கை. பாடலைப் பாருங்கள்.

*செவிகொள் ஒரு பன்னிரண்டுங் கேட்கஅயனையும்*
*தேவர் பணியுங் குருவையும்*
*தேவர்கோனென்ற சதமகனையும் செந்தமிழ் சொல்*
*தென் பொதியமலை முனியையும்*
*புவியியல் நக்கீரனையும் அவ்வையையும் நீமுன்*
*புகழ்ந்த பொய்யா மொழியையும்*
*புகழ் கொண்ட அருணகிரிநாதரையும் வெகுசித்தர்*
*போற்று கருவூரரையும்*
*குவியும் மனமறாச் சிறுபுலவரையும் வருபுலவர்*
*கொண்டாடு நல் பகழிக்*
*கூத்தரையும் வளர்காசி வாழும் சிவானந்த*
*குமரகுரு பரமுனியையும்*
*கவிசொல்லென்றே யடியெடுத்துக்கொடுத்தவன்*
*கனிவாயின் முத்தமருளே*
*கந்தனே புள்ளூரில் வந்தமுத்துக்குமர*
*கனிவாயின் முத்த மருளே*

திருவள்ளுவருக்கு கவிஞர்களின் முதல்கவி பாடிய மதுரை சொக்கேசர் என்று கல்லாடம் கூறுகிறது.

*சமயக்கணக்கர் மதிவழி கூறாது*
*உலகியல் கூறி பொருள் இது என்ற*
*வள்ளுவன் தனக்கு வளர் கவிப்புலவர்முன்*
*முதற்கவி பாடிய முக்கட் பெருமான்*

இதுபோல் கவிஞர்கட்கெல்லாம் அடி எடுத்துக் கொடுத்த அருளாளன் குமரப் பெருமான் என்பது நம் ஆன்றோர் மரபு எனக் கூறுகிறார் சிதம்பரமுனிவர்.



# 14. தாதியின் அடியான்

திருக்குழுக்குன்றத்தில் ஒரு அதிசயம் நடைபெற்றது. திருக்கழுக்குன்ற மாலை பிரபந்தம் என்று ஒரு அற்புதப் பாடல் உள்ளது. அதைப் பாடியவன் ஒரு வைஷ்ணவன். அங்கு நாச்சி முத்து என்று ஒரு நாட்டியப் பெண் வாழ்ந்தாள். அவள் உருக்கமாக பாடக் கூடியவள். வைணவன் பாடிய அப்பதிகத்தை நாள் ஒன்றுக்கு ஒரு பாடலாக உருக்கமாகப் பாடுவாள். அதை சிவபெருமானின் முன்பு தினமும் மலைமேல் பாடுவாள். ஒருநாள் அவள் மலைமீதிருந்தாள். அப்போது அந்த வைணவனும் அங்கிருந்தான். பயங்கரமான சூறாவளி காற்றும் பெரும் மழையும் அடிக்கத் தொடங்கின. சண்டமாருதமென வீசிய அதனால் பொழிவு ஏற்பட்டது. அதிலிருந்து தப்புவதற்காக வழி தெரியவில்லை. அப்பெண் பெருமான் திருமுன்பு நின்று அப்பிரபந்தித்திலிருந்து ஒரு பாடலைப் பாடினாள். மனம் உருகிப் பாடினாள். அப்பாடலால் மகிழ்ந்த பெருமான் விடையின்மேல் தோன்றினார். நாச்சிமுத்துவோ ஓடிப் பெருமானின் விடையின் காலைப் பிடித்துக் கொண்டாள். அவ்வைணவன் ஓடி அப்பெண்ணின் காலைப் பிடித்துக் கொண்டான்.

விடையோடு பெருமான் கயிலை செல்ல, அப்பெண்ணும் கயிலை அடைந்தாள். அவளோடு வைணவனும் கயிலை அடைந்து அங்கு வாழ்த்தலைப்பட்டாள். இந்நிகழ்ச்சி நடைபெற்றது திருக்கழுக் குன்றத்தில். அதற்கு வேதகிரி என்று பெயர் உண்டு. அங்கு வாழ்கின்ற முருகனே என்று சிதம்பர முனிவர் பாடுகிறார்

*உருக்கமுள ஒரு தாதி நாச்சி முத்தென்னுமவள்*
*ஒரு வைணவன் பாடிய*
*உயர்கழுக்குன்றமாலைப் பிரபந்தத்தில் நா*
*ளொன்றினுக்குயர் கவிதையா*
*சருக்கரை கலந்த பாலமுதமென மலையின்மேல்*
*தம்பிரான் முன்பு பாடச்*
*சண்ட மாருத மழையினால் தப்ப ஒருதினம்*
*தாதிதான் பாட ஈசன்*
*அருக்கன் ஆயிரகோடி என விடையில்வர விடையின்*
*அடியைப் பிடிக்கும் அவளோடு*

அவளடி பிடிக்கும் அவ்வைணவனையுங் கொண்டு
போய்க்கயிலை வாழவைக்கும்
திருக்கழுக்குன்றமெனும் வேதகிரி வருமுருக
சிறுபறை முழக்கியருளே



அப்பர்

# 15. சொல்மாலை பயில்கின்ற குயிலினங்காள்

குயில்களையும் கிளிகளையும், அன்னங்களையும், நாரங்களையும் அழைத்து ஒரு பெண் சிவபெருமான் மீது தான் உற்ற காதலை தூது அனுப்புவதாக அமைந்துள்ளது அப்பர் பெருமானின் தேவாரத்தில் உள்ள ஒரு பாடல். திருப்பழனத் திருப்பதிகம், நான்காம் திருமுறை 12-ம் பதிகத்தில் மனத்தை நெகிழச் செய்யும் ஒருபாடல். இப்பாடல் நாட்டியத்துக்கு, பொருத்தமாக அமையும் அகத்துறைப் பாடலாகத் திகழ்கிறது ஜெர்மனி, ஸ்வீடன், லண்டன், கானடா அமெரிக்கா ஆகிய நாடுகளில் நான் அப்பர் பெருமானின் சரித்திரத்தை நாட்டிய நாடகமாக ஆடிக்காட்டியபோது அதற்குப் பெரும் வரவேற்பு இருந்தது. சிறப்பாக "சொல்மாலை பயில்கின்ற" என்ற பாடலை பெரிதும் ரசித்தனர். அந்தப் பாடலைத்தான் பாருங்கள்:-

*சொல்மாலை பயில்கின்ற குயில் இனங்காள்! சொல்லீரே*
*பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்*
*முன்மாலை நகுதிங்கள் முகிழ் விளங்கு முடிச்சென்னி*
*பொன்மாலை மார்பன் என் புதுநலம் உண்டு இகழ்வானோ!*

அற்புதமான பதிகம். இப்பதிகம் அகத்துறையில் அமைந்துள்ள காரணத்தால் கோயில்களில் பாடிஆட மிகவும் ஏற்றமாக அமைந்துள்ள பதிகம். அக்காலத்தில் ஆடல் மகளிர்கள் இப்பதிகத்தைப் பாடி கோயில்களில் ஆடியிருக்கவெண்டும் என்பதில் ஐயம் இல்லை. இப்பதிகத்தையே பாடி ஆடி ஒருநாட்டியப்பெண் உய்ந்திருக்கிறாள் என்ற வரலாறே கிடைத்துள்ளது. கையில் வீணையை ஏந்தி இப்பதிகத்தைப்பாடி ஓர் மங்கை அத்திருப்பழனத்து உறைகின்ற பரமனே தனது தலைவர் என்று பாடியிருக்கிறாள். உலகம் எல்லாம் அதிசயிக்க கையில் வீணையைக் கொண்டே அவள் கயிலைக்குச் சென்றிருக்கிறாள். அங்கு உமை அன்னையின் கணங்களில் ஒருத்தி ஆகி, வீடுபேறு பெற்றாள்.

இப்பதிகத்தைப் பாடிய ஐயன் திருநாவுக்கரசு, அவர் அருள் கையில் உழவாரப்படை கொண்டவர். அவருடன் அன்பே உருவான அவர் தமக்கையார் திலகவதியார் பணிந்த இடம் திருவதிகை வீரட்டானம்.

அங்குக்குடி கொண்டுள்ள முருகா என முருகனைப் போற்றியிருக்கிறார் காஞ்சி சிதம்பரமுனிவர். இருநூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர். சுப்பிரமணியர் பிள்ளைத்தமிழ் என்னும் பாடலில்தான் அவ்வாறு பாடியுள்ளார். அப்பாடலில் நூறு பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு பாட்டிலும் முருகனைப் பாடுகிறார். திருவதிகையை பாடும்போது தான் இவ்வாடல் மங்கையின் வரலாறு கூறுகிறார். அப்பர் பெருமானின் ஒவ்வொரு பாடலும் ஈடு இணையற்ற பதிகங்கள். அவற்றிலும் சொல்மாலை பயில்கின்ற என்னும் பதிகம் ஒப்பரும் பாடல். அப்பாடல் ஒரு வரலாற்றையே உருவாக்கி உள்ளது. சிதம்பரமுனிவரின் அப்பாடலைப் பாருங்கள்

*மெய்யன்பாகி ஒரு தாதி விழவார் பழனத்து உமாபதியே*
*விளங்குஎன்உயிர் நாயகன் என்றுவிழிநீர் பொழிய*
*தினம்பாடி*
*கையில் வீணைஉடன் உலகம் காணக் கயிலை மேவி உமை*
*கணம் ஆகச் **'சொல் மாலை'** என்றே கல்லும்*
*கரைய பதிகம்சொல்*
*ஐயன் திருநாவுக்கரசின் அருள்கை உழாவாரப் பணியும்*
*அம்மை எம்மை ஆள் திலகவதியார் தாம்பணியும் சிவன்*
*திருமுன்*
*செய்யும் அதிகைமாநகர் வாழ் சேயே சிற்றில் சிதையேலே!*
*சேவல்கொடியாய்! திருப்பதத்தால் சிறியேஞ் சிற்றில்*
*சிதையேலே!*

அப்பர்பெருமானின் 'சொல்மாலை பயில்கின்ற குயிலினங்காள்' என்னும் பாடலையே ஆடிக்கயிலையடைந்து உமை அன்னையின் கணமாக உய்ந்த தாதியைப் பாடி, அப்பாடல் பாடிய அப்பர் பெருமானைப் பாடி அவரது அன்பு தமக்கையாரைப் பாடிய சிறப்பைக் காண்கிறோம். இப்பாடலில் மற்றும் ஒரு சிறப்பும் காண்கிறோம் சிவனடியார்களின் பாதைகளில் கல்லும் முள்ளும் இருக்கக்கூடும். அவர்கள் அண்ணலின் கோயிலை அடைய அவை தடையாக இருக்கும். அவற்றை அகற்ற உதவுவதுதான் உழவாரப்படை, அவர் அளித்துள்ள பதிகமாம் அருள்சின்னம். அவரது பாடல்களும் நம்வழியில் உள்ள கல்முட்களாம் இடர்களை அகற்றி அந்த தாதியைப்போல் கயிலை அடைய நமக்கு உதவும் என்னும் அருமையான குறிப்பும் கொடுக்கிறார் சிதம்பரமுனிவர்.



# 16. சிவராஜதானி

சிவாலயங்களில் பூஜை செய்யும் முறையின் பின்னணியாக சிறந்த தத்துவங்கள் உள்ளன. கர்ப்பகிருஹத்தில் உள்ள சிவலிங்கம் பரம் ஜோதி. அது அரு உருவாக உள்ளது. அதிலிருந்து படிப்படியாக வளையம் வளையமாக தெய்வச்சக்தி வெளிப்படுகிறது. அவ்வளையங்களைச் சுற்று என்றும் ஆவரணம் என்றும் கூறுவர். நம் கோயில்களில் குறிப்பாக ஐந்து சுற்றுகள் - ஆவரணங்கள் சிறப்பிடம் பெறுகின்றன. இந்த ஐந்து ஆவரணங்களுக்கும் தான் தினமும் பூஜை நடைபெறுகிறது. இதைப் பஞ்சாவரணபூஜை என்று கூறுவார்கள். பரம்பொருளாக உள்ள தெய்வத்தை படிப்படியாக உருவகித்து நில உலகிற்கு வந்து அடியார்களைப் பாலிக்க வேண்டுவது தான் பூஜை என்பது. சிவலிங்கத்தின் அடியிலிருந்து மேல் வரை ஒவ்வொன்றாக பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், மஹேசன், சதாசிவன் என ஐந்து தத்துவங்களை உருவகிப்பர். இவை இயங்குவதை சக்தி என்று கூறுவர். இந்தச் சக்திகளை ஒன்பதாகப் பிரித்து நவசக்திகள் என்று கூறுவர். இவற்றை வாமா, ஜ்யேஷ்ட்டா, காளீ, கலவிகரணீ, பலவிகரிணீ, பலப்ரமதணீ சர்வபூததமணீ, மனோன்மணீ என்று அழைப்பார்கள். இவர்களை அடுத்து தோன்றுவது எட்டு வித்யேச்வரர்கள் என்னும் உருவங்கள். இவர்கள் சிவபரனின் புறத்தோற்றம் என்றும் கூறுவர். சிவலிங்க வழிபாட்டின் போது அடி, கால், இடுப்பு, உடல், கரங்கள், கழுத்து, முகம், தலை என ஒவ்வொரு அங்கமாக உருவகிப்பதும் உண்டு. வித்யேச்வரர்களுக்கெல்லாம் உருவம் உண்டு. தஞ்சை பெரியகோயிலில் இவர்கள் உருவங்களைப் பார்க்கலாம். இவர்களுக்கு அடுத்து வருவது மூன்றாவது சுற்று. இதில் எண்மரை வணங்குவர். நந்திகேச்சுரர், மஹாகாளர், பிருங்கி, கணபதி, முருகப்பெருமான், கௌரி, விருஷபம், சண்டி என்ற எண்மரையும், மூன்றாவது ஆவரணத்தில் வணங்குவர்.

கர்ப்பக் கிருஹவாயிலில் இருந்து வலமாக இவர்கள் பூஜிக்கப்படுவர். இதற்கு அடுத்துவரும் நான்காவதுசுற்றில் எட்டு திசைகளின் காவலர்களாம் திக்பாலகர்களும் வருவர். அடுத்து ஐந்தாவதுசுற்றில் இவ்வெண்மரின் ஆயுதங்களோடு, பிரும்மா விஷ்ணு ஆகிய இருவரின் ஆயுதங்களும் ஆக பத்து ஆயுதங்கள் சுற்றி நிற்கும். பிரும்மாவின்

ஆயுதமாக தாமரை மலரும் விஷ்ணுவின் ஆயுதமாக சக்கரமும் இடம்பெறும். பிரும்மா ஆகாயதிக்கையும், திருமால் அடிதிக்கையும் காத்துநிற்பர். எட்டும் இரண்டும் ஆக பத்து திக்குகளுக்கும் ஆயுதங்கள் நிற்கின்றன. ஒரு ராஜதானியின் கோட்டையைப்போல, தெய்வ ராஜதானியின் கோட்டையைப்போல இவை காணப்படும். ஐந்து சுற்றிலும் உள்ள அனைத்துதெய்வங்களுக்கும் உருவம் உண்டு. தியான சுலோகங்களும் உண்டு. இதுவரை கூறியவை தெய்வலோகத்து உருவங்கள். இதை அடுத்து பூவுலகிற்கு வருகிறோம்.

இவ்வுலக தெய்வங்களும் முனிவர்களும் பலவுண்டு. இவை அனைத்தையும் ஒவ்வொருவராக தியானித்து அழைத்து அடியார்களைக் காக்கவேண்டிக் கொள்வதுதான் நாள்தோறும் நடைபெறும்பூஜை. இவை சைவ தத்துவங்களைப் புலப்படுத்துபவை. தத்துவங்களின் புறத்தோற்றம்தான் சிலைகளும் பூஜையும் இவை தத்துவநூல்களில் காணப்படுபவை. பிற பாடல்களில் காணப்படமாட்டா. ஆனால் ஒரு பெரியவர் தனது பாடல் ஒன்றிலே அழகாக அமைத்துப் பாடியிருக்கிறார்.

காஞ்சிபுரம் சிதம்பரமுனி எனப்பெயர்பெற்ற இவர் திராவிட மாபாடியம் எழுதிய சிவஞானயோகிகளின் மாணவர். 200 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர். முருகப்பெருமானைப் பற்றி இவர் ஓர் அற்புத நூலை இயற்றியிருக்கிறார். முருகப்பெருமான் உறைகின்ற தலங்களை எல்லாம் தொகுத்து க்ஷேத்திரக்கோவை என்று எழுதி இருக்கிறார். இந்நூலையும் பிள்ளைத்தமிழ் மரபில் எழுதியுள்ளார். அதனால் இந்நூலுக்கு சுப்பிரமணியர் க்ஷேத்திரக்கோவை பிள்ளைத்தமிழ் என்றும் பெயர். அதில் ஒரு பாடலில்தான் மேல்கூறிய ஐந்து சுற்று தத்துவங்களை அவர் குறிக்கிறார். பாடலைப் பாருங்கள்:-

*தாணு, மால், அயனுடன் மயேச்சுரர், சதாசிவர், சச்சிதானந்த*
*சாந்தர், தந்த நவசக்தி அருள் போக - அங்க மூர்த்திகள், தரும்*
*அட்டவித்யேச்சுரர்.*
*பேணும் எழுகோடி மாமந்திரெச்சுரர், ஐந்துபேத மாமாகேச்சுரர்,*
*பேதம் ஒன்றில்லாத நந்தி, மாகாளர், சொல் பிருங்கியுடன்,*
*ஐங்கரத்தோன்,*
*பூண் இடபர், நீள் கௌரி, தண்டி, எண்திசைநாதர், போற்றும்*
*தசாயுதங்கள்,*
*பூமண்டலத்தில் உள்ள தெய்வங்கள், வேதங்கள், புகழ்*
*கொண்ட தேவர் முனிவர்,*
*காவரு சிவராஜதானி எனும் நாகைவரு கந்தசுவாமி வருகவே*
*கை கண்ட அடியார் பணிமெய் கண்ட வேலவன் கருணையங்*
*கடல் வருகவே.*

(குறிப்புரை : தாணு-சிவலிங்கம். இங்கு ருத்திரனை குறிக்கும். சச்சிதானந்த சாந்தர். சோமாஸ்கந்த மூர்த்தம்? போக-அங்க மூர்த்திகள்-லிங்கத்தில் உருவஹிக்கப்படும் கரணங்கள். அங்கங்கள்: எழுகோடி மாமந்திரேச்சுரர் மந்திரமூர்த்திகள் என்று ஆவஹிக்கப்படும் மூர்த்தங்கள்: ஐந்து பேத மாமாஹெச்சுரர் - பஞ்ச பிரும்மம் என அழைக்கப்படும் தத்புருஷன், அகோரன், சத்யோஜாதன், வாமதேவன், ஈசானன் என்னும் மூர்த்தங்கள். அடுத்து என்மர் யார் என்பது தெளிவு. சண்டிகேச்சுரரை தண்டி என்றார். மூன்றாவது சுற்று எண்மரில் முருகனை இங்குக் கூறவில்லை. இப்பாடலே முருகனைப்பற்றியது ஆதலாலும் இறுதியில் முருகப்பிரானைக் கூறியிருப்பதாலும் இங்குக் கூறவில்லை. அடுத்து கூறியுள்ளது பூவுலகு. இவை அனைத்தும் உடையது சிவராஜதானி.)

இந்தப் பாடலில்
*சதாசிவர் வரை முதல் சுற்று*
*அடுத்து வித்யேச்சுரர் இரண்டாம் சுற்று*
*நந்தி முதல் சண்டி வரை மூன்றாம் சுற்று*
*எட்டு திசைக்காவலர்கள் நான்காம் சுற்று*
*தசாயுதங்கள் ஐந்தாம் சுற்று*

இன்னும் பிற தெய்வங்களும் முனிகளும் பூவுலக தெய்வங்களாகக் கூறப்பட்டுள்ளன. இதை நாகப்பட்டினத்து கோயிலில் உள் முருகனைப் போற்றி நினைவு கூறுகிறார். நாகப்பட்டினத்தையே சிவராஜதானியாக உருவஹித்து இங்குப் பாடியுள்ள பாங்கு மிகச் சிறந்தது சிவராஜதானியில் உரைபவர்களும் அவர்களைச் சுற்றி நிற்கும் காவலர்களும் ஆயுதங்களுமென இங்கு ஒரு ஒப்பரும் தெய்வக்கற்பனையைக் காண்கிறோம். சிதம்பர முனிவரின் பாடல்களைப் பல புதிய செய்திகளை எடுத்தியம்பும் கருத்துக் கருவூலம் எனலாம்.



# 17. பறப்பை

பறப்பை என்று ஒரு தமிழ்ச்சொல் உண்டு அது தேவாரத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது. அப்பர் பெருமானின் கீழ்வரும் பாடல்களைப் பாருங்கள். ஸ்ரீவாஞ்சியப்பதிகம்.

*"பறப்பையும் பசுவும் படுத்துப் பல*
*திறத்தவும் உடையோர் திகழும்பதி*
*கறைப்பிறைச் சடைக் கண்ணுதல் சேர்தரு*
*சிறப்புடை திருவாஞ்சியம் சேர்மினே"*

இங்கு 'பறப்பைப்படுத்தல்' என்றால் என்ன பொருள்? தருமை ஆதீனப் பதிப்பில் சிங்காரவேலனார் அவர்களின் பொழிப்புரை பின்வருமாறு உள்ளது.

''பறவையின் வடிவாகிய யூபஸ்தம்பம் நட்டு ஓமம் செய்து பசுவினை வேட்டு வேள்விசெய்து மற்றும் பலதிறத்தை உடைய மறையவர்கள் வாழும் பதியாகியதும், களங்கமுடையபிறையைச் சடையின்கண் வைத்த நெற்றிக் கண்ணராகிய சிவபெருமான் சேரும் சிறப்புடையதுமாகிய திருவாஞ்சியம் சேர்வீராக" என்கிறார். இவர் கருத்துப்படி "பறவை வடிவாகிய யூபஸ்தம்பம் நட்டு ஓமம்" செய்தல் என்பது தான் "பறப்பை படுத்தல் என்பதின் பொருள்

குருசாமி தேசிகர் அவர்களின் உரைப்படி 'பறப்பைப் படுத்தல்' என்றால் "கருடன் முதலிய பறவை வடிவம் பொறித்த வேள்வித்தூண். நெய் வைக்கும் பாத்திரம் எனலுமாம்" என்கிறார். இவரும் யூபத்தூணை கருடன் போன்ற வடிவில் செய்தல் என்றே கூறுகிறார்.

பறப்பை - எனில் கருடன் என்பது சரியே. ஆனால் கருடன் வடிவில் யூபத்தம்பம் வைத்தல் அல்ல. யாககுண்டத்தை கருடன் வடிவில் அமைத்தல் தான் 'பறப்பை படுத்தல்' என்பதின் பொருள். "பறப்பைப் படுத்து பசுவேட்டு எரியோம்பும் சிறப்பர் வாழ்தில்லை" என்னும் சம்பந்தர் பாடலின் பொருளும் இதுவே.

சோழன் கரிகால் பெருவளத்தானை கருங்குழல் ஆதனார் என்பவர் பாடியதாக புறநானூற்றில் ஒருபாடல் உண்டு. கரிகாலன் வேதத்துக் கூறிய வேள்வியைச் செய்தான் என்பது கூறப்பட்டுள்ளது. அவ்விடத்து,

*"பருதி உருவில் பல்படைப் புரிசை*
*எருவை நுகர்ச்சி யூபநெடுந்தூண்*
*வேதவேள்வி தொழில் முடித்ததுவும்"*

என்று வந்துள்ளது. இந்த பாடலுக்கு பழைய உரை உள்ளது. அவ்வுரையில், "பருந்து விழுங்குவதாக செய்யப்பட்ட இடத்து நாட்டிய பூபமாகிய நெடிய கம்பத்து வேதத்தால் சொல்லப் பட்ட வேள்வியினை செய்துமுடித்தது" என்கிறார் உரையாசிரியர்.

உ.வே. சாமிநாதய்யர் அவர்கள் இதற்கு மேலும் குறிப்புக்கள் கொடுத்துள்ளார்கள்.

*"பொய்ப்பருந்து காலொடு பறந்துபோய்*
*மெய்பருந்துடன் விண்ணிலாடவோ"*

(தக்கயாகப்பரணி - 507) என்பதையும் பொய்ப்பருந்தாவது யாகத்துக்கு செய்த பருந்து என்னும் அதன் உரையையும் பார்க்க என்றும்.

"சுடுமனற் கலுழனாகச் சுருதியின் படியே கோட்டி" (வில்லிபாரதம் - இராசசூயம், 91) என்றும் குறித்துள்ளார்.

இக்குறிப்புக்களிலிருந்து 'பறப்பை படுத்தல்' என்றால "பருத்துவடிவில் அமர்த்தப்பட்ட யாககுண்டம்" என்பது தெளிவு.

தமிழ் லெக்சிகனும் "பறப்பை" என்பதற்கு கருடன்முதலிய வடிவாகச் செய்யப்பட்ட யாகவேதிகை" என்று குறித்துள்ளது காணலாம். ஆதலின் சம்பந்தப்பெருமானும் அப்பர் பெருமானும் கூறும் "பறப்பபை படுத்து" என்பது யாககுண்ட வடிவம் பருந்து வடிவில் அமைக்கப் பட்டதையே குறிக்கும். இதை கருடசிதி அல்லது ச்யேனசிதி என்றும் வடமொழியாளர் கூறுவர்.



# 18. பாலை ஆடுவர்

தேவாரப் பாடல்களைத் திரும்பத் திரும்ப படிக்கும்போது அவற்றில் பல கருத்துக்கள் ஆழமாகப் புதைந்துள்ளதைக் காணலாம். சில பாடல்களில் ஒன்றுக்கும் மேற்பட்ட கருத்துக்கள் உள்ளதைக் காணலாம். இவ்வாறு உள்ள பாடல்களை உத்தமப் பாடல்கள் என்பர் வல்லோர். அப்பர் பெருமானின் கீழ்வரும் பாடலைப் பாருங்கள். ஐந்தாம் திருமுறையில் திருவெண்காட்டு பதிகத்தில் உள்ளது இப்பாடல்.

*பாலை ஆடுவர் பன்மறை ஓதுவர்*
*சேலை ஆடிய கண் உமைப்பங்கனார்*
*வேலைஆர் விடமுண்ட வெண்காடர்க்கு*
*மாலைஆவது மாண்டவ ரங்கமே*

என்பது பாடல். அபிஷேகத்தில் பசுவின்பாலை ஆடுவர். பலமறைகளை ஓதுவார். மீன்போல் இமைக்கும் கண்களை உடைய உமையின் பாகம் உடையவர். அலைகள் ஆரவாரிக்கும் கடல்விடம் உண்டவர். திருவெண்காட்டில் உறைபவர். அவருக்கு மாலையாகத் திகழ்வது மாண்டவரங்கமே. இறந்தோரின் எலும்புகளே என்பது வெளிப்படைப்பொருள். இவ்வாறுதான் திரு குருசாமிதேசிகர் அவர்கள் தருமை ஆதீனப்பதிப்பில் பொருள் கொண்டுள்ளார்கள். பொழிப்புரை எழுதிய சிங்காரவேலனார் அவர்கள் "பாலை ஆடுவர்" என்பதற்கு பாலை நிலத்தில் ஆடுபவரும், என்று பொருள் கொண்டுள்ளார். மற்ற அடிகளுக்கு குருசாமி தேசிகர் குறித்த பொருளையே கொண்டுள்ளார்.

ஆயினும் "பாலை ஆடுவர்" என்பதற்கு "பாலை அபிடேகம் கொள்பவர்", "பாலை நிலத்தில் ஆடுபவர்" என்ற இரண்டு பொருளுமே உண்டு எனக் கொள்ளலாம். அத்துடன் மூன்றாவதாகக் கூட ஒரு கருத்தும் உண்டு எனக் கூறலாம். "பால் + ஐ" என்று பிரித்து பால், தயிர், நெய், சாணம், கோமூத்திரம் என்னும் ஆவின் ஐந்து - பஞ்ச கவ்யம் ஆடுவார் என்றும் கொள்ளலாம். ஐந்தையும் குறிக்கும் தொகுதி முதற் சொல் பால். ஒரு தொகுதியை அதன் முதற்சொல்லால் குறிப்பது பலபாடல்களிலும் வரும் மரபு. தேன் ஐந்து ஆடி" என்னும் அப்பர் வாக்கு காணலாம். "ஐ" என்பது ஐந்து என்பதைக் குறிக்கும்

*"ஐ இரண்டும் ஆறு ஒன்றும் ஆணார்போலும்"*

என்னும் அப்பர் வாக்கும் காண்க.

பாலை என்பதை, பால் + ஐ எனப் பிரிக்க அப்பர் பெருமானின் வாக்கே ஆதாரம் "பாலோடு ஐஞ்சு ஆடிணானை பவித்திரனை பசுபதியை பவளக்குன்றை" எனத் திருவாவடுதுறை பதிகத்தில் (6ம் திருமுறை) பாடியுள்ள அப்பர் பெருமானின் வாக்கு இதை உறுதி செய்கிறது.

அதே போல் இப்பாடலின் இறுதி அடியையும் விரித்துப் பிரித்துப் பொருள் கொள்ளலாம்.

*"மாலை ஆவது மாண்டவரங்கமே"*

என்பது வரி. அவருக்கு மாலையாக ஆவது மாண்டவர் இறந்தோர் அவர்களின் அங்கம் - எலும்புகள். அவர் எலும்பு மாலை பூண்டவர் என்பது பொருள்.

மாலையாவது என்றால் மாலைக்காலம் அந்தி நேரம், சந்தியாகாலம். மாலைநேரத்தில் சிவபெருமான் விரும்பி செய்வது ஆடல் அதை சந்தியா தாண்டவம் என்றே கூறுகிறோம். இதைக் கொண்டு பார்த்தால் "மாண்டவரங்கமே" என்பதை "மாண்ட + அரங்கமே" என்றும் பிரிக்கலாம். மாண்ட என்றால் மாட்சிமை பொருந்திய, மிகச்சிறந்த அரங்கம் - ஆடுகளம் காலத்தையும் தேசத்தையும் இணைப்பது சந்தி.

ஆதலின் இப்பாடலின் இறுதிவரி அந்தி நடத்தை குறிக்கிறது என்பதில் ஐயமில்லை. ஏராளமான பாடல்களில் அந்தியே நாட்டியமாக குறிக்கப்படும் மரபு உண்டு. ஆதலின் இவருக்கு மாலை நேரம் மாட்சிபொருந்திய அரங்கமே என்ற பொருளும் கொள்ளலாம்.



# 19. அங்க மொழி

திருஞானசம்பந்தப் பெருமானின் தேவாரப்பதிகம் ஒன்றில் "வங்கமொழி" என்ற ஒருசொல் வருகிறது. அச்சொல் திருக் கயிலாய மலையை பாடும்பதிகத்தில் வருகிறது. அப்பாடலைக் கீழே காணலாம்.

*சிங்கவரை மங்கையர்கள் தங்களன*
*செங்கைநிறை கொங்குமணி தூய்*
*எங்கள் வினை சங்கைஅவை இங்ககல*
*வங்கமொழி எங்கும் உளவாய்த்*
*திங்களிருள் நொங்கவொளி விங்கிமிளிர்*
*தொங்கலொடு தங்கலயலே*
*கங்கையொடு பொங்குசடை எங்களிறை*
*தங்கு கயிலாய மலையே*

என்று உள்ளது அப்பாடல். எல்லாப்பதிப்புகளிலும் பாடம் இவ்வாறுதான் உள்ளது. பாண்டிச்சேரி பதிப்பில் மட்டும் சொல் பிரித்து "வங்க மொழி" என்பதை 'அங்கமொழி' எனப் பதிப்பித்துள்ளனர். இதன் பொருள் என்ன என ஆயும்போது வேறு ஒரு சொல்லையும் இங்கு காணவேண்டும். சிங்கவரை என்பது தொடக்கச் சொல். இதற்கு தருமை ஆதீனப் பதிப்பில் கீழ்வரும் பொருள் கொடுக்கப்பட்டுள்ளது.

சிங்கம் - சிங்கங்களையுடைய வரை - மலையில் வாழும், மங்கையர்கள் - வித்யாதர மகளிர் முதலியோர் தங்களன தங்களுடைய செங்கை சிவந்தகைகளில், நிறை - நிறைந்த, கொங்கு மலர் - வாசனை பொருந்திய மலர்களை, தூய் - தூவி, எங்கள் - எங்கள் வினைகளும், சங்கையவை - துன்பங்களும், இங்கு அகல - இங்கு விலக்குவது ஆக என்ற அங்கம் - அங்கமாக, மொழி-மொழியும் தோத்திரங்கள், எங்கும் உளவாய் - எல்லாப் பக்கங்களிலும் உளவாகி, திங்கள் - சந்திரன், இருள் நொங்க இருள் கெட, ஒளி வீங்கி - ஒளி மிகுந்து, மிளிர் - விளங்குகின்ற, தொங்களொடு - மாலையொடு - கங்கா நதியொடு, பொங்கும் - மிகுந்த, சடை - சடையை உடைய, எங்கள் இறை - எங்கள் தலைவன் தங்கும் - தங்கும் கயிலாயமலை."

இவ்வுரையில் வாசனை நிறைந்த மலர்களை தங்கள் கையில் ஏந்தி சிங்கங்கள் உள்ள மலையில் வித்யாதா மகளிர்கள் எங்கள் வினைகள்

எல்லாம் தீரவேண்டும் என தோத்திரங்கள் எங்கும் ஒலிக்கின்ற மலை. கயிலாயமலை என முதல்பகுதிக்கு உரை உள்ளது. சிங்கவரை என்றால் சிங்கங்கள் வாழும் மலை என்றும் வங்கமொழி என்பதை அங்கமொழி எனப் பிரித்து அங்கமாக மொழியும் தோத்திரங்கள் என்றும் பொருள் தரப்பட்டுள்ளது. மங்கையர்கள் என்பதற்கு வித்யாதரப் பெண்கள் என்று உரை கொள்ளப்பட்டுள்ளது.

கயிலாயமலையிலே சிவகணிகைகள் என்னும் அப்ஸரப் பெண்கள் சிவபெருமானைப் போற்றுகின்றனர் என்பது புராண வரலாறு. அதனால் சிவபெருமானின் வழிபாடு கூறும் காமிகாகமத்தில் இவர்களது தோற்றத்தைக் கூறும் ஒரு அத்யாயமே உள்ளது. அதனால்தான் கோயில்களில் அவர்களது ஆடல்கள் இன்றியமையாத நிலை வகிக்கின்றன. ஆதலின் இங்கு மங்கையர்கள் என்பது ஆடல்புரி அப்ஸரப் பெண்களைக் குறிக்கும் என்பது பொருந்தும். பஞ்சின்மெல்லடி பாவைமார் என்றும், நுண்ணிடையார் என்றும், பலவாறாக இவர்களது எழில் தேவாரத்தில் வர்ணிக்கப் பட்டுள்ளதைக் காண்கிறோம். மெண்மையும் எழிலும் வாய்ந்த பெண்களைக் கூறும்போது சிங்கங்கள் நிறைந்த மலையில் உள்ள பெண்கள் என்று பொருள் கொள்வது இலக்கியச் சுவையுடையதாக இல்லை. அதனாலோ என்னவோ வே. கோபாலையர் அவர்கள், 'சிங்கவரை' என்ற சொல்லை சிங்க + அரை என்று பிரித்து "சிங்கத்தினது இடை போன்ற இடை" என்று பொருள் தந்துள்ளார். (Vol 3, page 610) பெண்களின் இடையை சிங்கத்தினது இடைக்கும் உவமித்தல் சிறப்பாகத் தெரியவில்லை. ஆக இவ்விரு பொருளையும் தவிர்த்து வேறு என்ன அர்த்தம் உண்டு என யோசிக்கலாம்.

சிங்கம் என்ற சொல் சிருங்கம் - சிகரம் என்பதன் வழக்குச்சொல். தமிழ் லெக்சிகனில் இப்பொருள் உள்ளதைக் காணலாம். சிங்க வரை என்றால் உயர்ந்த சிகரத்தை உடைய மலை என்பது பொருள். கயிலாயமலையைப் பற்றிய பாடல் ஆதலாலே உயர்ந்த சிகரத்தையுடைய மலை என்பது பொருந்தும். சிருங்ககிரி என்ற ஊர் இன்றும் சிங்ககிரியாகி சிங்கேரி என அழைக்கப்படுவது காணலாம். உயர்ந்த சிகரமுடைய மலையில் அப்ஸரஸ்ஸுகள் போற்றுகின்றனர் என்ற பொருள் சிறக்கிறது. வங்கமொழி என்பதை அங்கம் + மொழி என பிரித்து அங்கமான தோத்திரம் என்று பொருள் கொண்டுள்ளதை கண்டோம். எதற்கு அங்கம்? எனில் பதில் இல்லை. வே. கோபாலையர் அவர்களும் அங்கம் + மொழி என்றுதான் பிரித்துள்ளார். ஆனால் இதற்குப் பொருள் கூறவில்லை. வேறு ஒரு இடத்தில் அங்கம் என்பதற்கு ஆறங்கம் என்று கூறியுள்ளார். அந்தப் பொருள் இங்கு பொருந்தாது.

'வங்க மொழி' என்றே எடுத்துக்கொண்டால் வங்கதேசத்து மொழி என்றும் 18 மொழிகளில் ஒன்று என்றும் கொள்ளலாம். கயிலைமலையைப் பாடுவதால், கயிலைக்கு அருகில் அக்காலத்தே சிறந்து விளங்கிய மொழியாகிய வங்க மொழியில் அப்ஸரப் பெண்கள் துதித்தனர் என்று கொள்வதில் தவறில்லை. ஞானசம்பந்தர் காலத்தில் இவ்வாறு பாடியிருப்பாரா என்ற ஐயம் எழலாம்! திருஞானசம்பந்தர் சீர்காழிப் பதியில் கங்கை நாட்டிலிருந்து வந்த நியமம் தவறாத மறையவர் வாழ்ந்தனர் என்று கூறுகிறார். "சங்கை இன்றி நன்னியமம்தான் செய்து தகுதியின் மிக்க கங்கை நாடு உயர்கீர்த்தி மறையவர் காழி நன்னகரே" (2ம் திருமுறை - 96 பதிகம், பாண்டிச்சேரி பதிப்பு) இங்கு கங்கை நாடு என்பது வங்காளத்திலும், ஒட்டிய பீஹார் மாநிலத்திலும் உள்ள கங்கைச் கரையைக் குறிக்கும். இராஜேந்திர சோழன் கங்கை வரை வெற்றிகண்டு கங்கைகொண்ட சோழன்' என்று பெயர் கொண்டானல்லவா. அவன் வெற்றிகண்ட பகுதியாகிய கங்கைக்கரை - வங்காளத்தை ஒட்டிய பீஹார் மாநிலத்து ஓடும் கங்கைப் பகுதி என்பது கல்வெட்டால் தெளிவாகிறது. ஆதலின் வங்க நாடும் வங்கமொழியும் தமிழகத்தில் அக்காலத்தில் சிறந்த தொடர்பு கொண்டிருந்தன. இப்பகுதிக்கு "கௌடம்" என்றும் பெயர் உண்டு. கௌட மொழியில் பாடல்களும் தோத்திரங்களும், ஆடல்களும் நம்சிவாலயங்களில் புரிதல் வேண்டும் எனக் காமிகாமம் கூறுகிறது. ஆதலின் வங்கமொழி அக்காலத்தில் தமிழகத்தில் சிறந்த மொழியாக கருதப்பட்டது என்பதில் ஐயமில்லை. கயிலையங்கரிக்கு அருகில் இருந்தது ஆதலின் வங்கமொழியால் அப்ஸர பெண்கள் துதித்தனர் என்று இங்கு அர்த்தம் கொள்வதில் தவறில்லை.

ஆனால் இதைக்காட்டிலும் ஒரு சிறந்த பொருளும் இங்கு கூறலாம். அப்ஸரப்பெண்கள் ஆடல்மகளிர் என்று கண்டோம். அவர்கள் கைகளில் மலர் ஏந்தி பரமனை துதித்து அவர்முன் ஆடுவது என்பது இன்றுவரை வழங்கிவந்த மரபு. ஆதலின் அவர்களது பணிக்கு ஏற்ப இங்கு பொருள் காணலாம். நாட்டியத்தில் உடல் அங்கங்களை அசைத்து நாட்டிய மரபில் அபிநயத்தலுக்கு "அங்க அபிநயம்" (ஆங்கிக அபிநயம்) என்று பெயர். இதையே நாட்டிய மொழி என்றும் கூறுவது மரபு.

***ஆங்கிகம் புவனம் யஸ்ய வாசிகம் ஸர்வ வாங்மயம்***
***ஆகார்யம் சந்திர தாராதி தம் நும: சர்தவிகம் சிவம்***

சிவபெருமானுக்கு இவ்வுலகின் இயல்பே ஆங்கிகம் (அபிநயம்) என்பது இதன் பொருள். நாட்டிய கலைஞர்கள் அனைவருக்கும் இப்பாடல் தெரியும். அங்கமொழி என்றால் நாட்டியம் என்று பொருள் ஆதலின் இப்பாடலில் 'வங்கமொழி' என்று கொள்ளாமல். அதைக்

காட்டிலும், சிறப்பாக அங்கமொழி என்றுகொண்டு, தங்கள் செங்கைகளில் மலர் ஏந்தி தூவி, துதித்து அப்ஸரப் பெண்கள் நாட்டிய மொழியால் அபிநயித்தனர் எனக் கொள்ளலாம். பண்டைய இருவுரைகளைக் காட்டிலும், இவ்வுரை பொருத்தமாகப் படுகிறது.



தில்லைக் கோபுரத்தே உள்ள ஆடல் உரு

# 20. கோவாய இந்திரன்

நம் பெரியோர்கள் சிவபெருமானை பலவாறாக துதித்திருக்கிறார்கள். இந்த பாடல்களின் அடிப்படையில்தான் நம் கோயில்கள் உருவாகின்றன. தேவாரப் பதிகங்களில் உள்ள அரிய கருத்துக்கள் எவ்வாறு கோயில் வடிவில் உருவாகின்றன என்பைத பலபாடல்கள் வாயில்களால் காட்டலாம். கோயில் என்றாலே தெய்வம் இருக்கும் இடம் என்பது பொருள். தெய்வத்தின் இருக்கையை ஓர் அரசனின் மாளிகைக்கு ஒப்பாக கூறுவது உண்டு. அரசன் உறையும் இடம். அதைச்சுற்றி அணுக்கர்கள் இருக்கை, அதைச்சுற்றி மெய் காவல். சுற்றிலும் கோட்டை காத்து நிற்க்கும் வீரர்கள். அவர்களது படைக்கலன்கள் என பல சுற்றுகளாக அமைந்து விளங்கும் ஓர் அரண்மனை அல்லது கோவின் இருக்கை. அரசனின் மாளிகைக்கும் கோயில் என்றே தான் பெயர். தன் உறையுளில் இருக்கும் அரசனின் புறத்தோற்றங்கள் தாம் மற்ற அனைத்தும். அரசனும் கோதான். அரசனின் ஆணையை நிலைநிறுத்தும் வீரனும் கோதான். ஆதலின் அரசாட்சியை கோமுறை என்று தமிழ் மக்கள் கூறினர். கோயிலில் வழிபாடு செய்வதை "ராஜஉபசாரம்" என்று கூறுவர்.

சிவாலயங்களில் நாள்தோறும் நடைபெறும் வழிபாட்டில் ஐந்து சுற்று வழிபாடு என்று உண்டு. இதை "பஞ்ச ஆவரண பூஜை" என்று கூறுவர். இப்பூஜைப்படி கர்ப்க்ருஹத்தில் உள்ள பரமசிவனை ஸதாசிவமூர்த்தியாக முதலில் வணங்குவர். தத்புருஷன், அகோரன், ஸத்யோஜாதன், வாமதேவன், ஈசானன் என்ற ஐந்து மூர்த்திகள் முதல்சுற்றில் வணங்கப்படுவர். இரண்டாவது சுற்று எட்டு வித்யேச்வரர்கள் வணக்கம். மூன்றாவது நந்தி, மகாகாளன், பிருங்கி, கணபதி, முருகன், சண்டிகேச்சுரர், அம்பாள், விருஷபம் என்ற எட்டும் கண-ஆவரணங்கள் என்று அழைக்கப்படுவர். இதுபோல நான்காவது சுற்று எட்டுதிசைகளோடு ஆகாயமும், நிலவுலகமும் என பத்து திசைகள். அவற்றைக் காத்து நிற்கும் கடவுள்கள். அவை இந்திரன், அக்னி, யமன், நிருருதி, வருனன், வாயு, சோமன் (அல்லது குபேரன்), ஈசானன் என்ற எண்திசைக் காவலரடுே மேல்திசைக்கு (ஆகாயம்) பிரும்மாவும், கீழ்திசைக்கு (கீழ்உலகு) திருமாலும் தெய்வங்கள். இவற்றை 'திக்பால ஆவரணம்' என்று அழைப்பர். இவர்களின்

ஆயுதங்களான வஜ்ஜிரம் முதலிய இறுதி ஆவரணம் என அழைக்கப்படும். இந்த ஐந்து ஆவரணங்களுக்கும். தினமும் பூஜைகள் நடைபெறுகின்றன. இந்த ஆவரண தெய்வங்களைப் பரிவார தெய்வங்கள் என்றும் அழைப்பர்.

பரிவாரதெய்வங்களுக்கு பெருங்கோயில்களில் சிற்றாலயங்கள் உண்டு. சிலகோயில்களில் சிற்பங்கள் இருக்கின்றன. பெரும்பாலான கோயில்களில் இவை பலிபீடங்களாக விளங்குகின்றன. இவை எல்லாம் பரம்பொருளின் அம்சங்களாக, பரமனை போற்றுகின்றனவாக வணங்கப்படுகின்றன. இவ்வளவு சிறந்த தத்துவங்கள் எல்லாம் தேவாரப்பதிகங்களில் காணமுடியுமா என்பது தான் நமது கேள்வி.

இந்த தெய்வங்களைப் பொதுவாக பாடுவது என்பது ஒன்று. குறித்துப் பாடுவது என்பது மற்றொன்று. அப்பர்பெருமானின் கீழ்வரும் பாடல்களைப் பாருங்கள்.

*கோவாய இந்திரன் உள்ளிட்டாராகக் குமரனும் விக்னவிணாயகனும்*
*பூவாயபீடத்து மேல் அயனும் பூமியளந்தானும் போற்றிசைப்ப*

இவ்வடிகளால் நான்முகன் திருமால் இந்திரன் உள்ளிட்ட தெய்வங்களையும் குமரனையும் விநாயகனையும் இணைத்துப் பாடுவதிலிருது பரிவார தெய்வங்களைப் பாடுகிறார் என்று அறிகிறோம். (ஆறாம் திருமுறை திருப்புறம்பியம் பாடல்) கீழ்வரும் 5ம் திருமுறை திருப்பூவனூர் பாடலையும் பாருங்கள்.

*நாரணன் நான்முகன் இந்திரன் வாரணன் குமரன் வணங்கும் கழல்*
*பூரணன் திருப்பூவனூர் மேவிய காரணன் என்னை ஆளுடைய காளையே*

இங்கு இந்திரன் எட்டு திக்பாலர்களையும் குறிக்கும். நாரணன், நான்முகனோடு பத்து. வாரணன் கணபதி. கணபதியும் குமரனும் வணங்கினார்கள் என்று அப்பர் கூறுவதைக் காணுங்கள். பத்து திசைக்கும் சிவபெருமானே தலைவர் என

*எட்டாம் திசைக்கும் இருதிசைக்கும் இறைவா*

என்கிறார். அதேபோல 4ம் திருமுறைப்பாட்டில் இன்னம்பரில் சந்திரன் சூரியன், இந்திரன், நான்முகன், திருமால் ஆகிய எல்லோரும் "சய சய" என்று போற்றுகிறார்கள் என்கிறார் அப்பர். அத்துடன் சிவபெருமான் நிலவுலகத்திற்கும், விண்ணுலகத்திற்கும், பாதாளவுலகத்திற்கும் இஹபரமானவன் என்கிறார்.

*அயனொடு மால் இந்திரன் சந்திராதித்தரெல்லாம்*
*சயசயவென்று முப்போதும் பணிவன*

*வியனிலமுற்றுக்கும் விண்ணுக்கும் நாகர் வியல்நகருக்கும்*
*இயபரமானவன் இன்னம்பர் ஆன்ற இணையடியே*

என்று கூறுவதும் இதையே. அரசனுக்கு எவ்வாறு பரிவாரங்களாக நிற்பார்களோ அதுபோல இவர்களெல்லாம் நிற்கின்றனர் என்றே அப்பர் கூறுகிறார்.

*அரிஅயன் இந்திரன் சந்திராதித்தர் அமரரெல்லாம்*
*உரிய நின் கொற்றக் கடைத்தலையார் உணங்காக் கிடந்தார்*

என்பது அதையே முற்காலங்களில் கோயில்களில் ஒவ்வொரு தெய்வத்துக்கும் முன்பு பூஜை நடைபெறும்போது அந்தவந்த இடங்களுக்கு உரிய பாடல்களைப்பாடி அடியார் வணங்குவர். தேவாரப்பாடல்கள் மனப்பாடம். இப்பாடல்களை பாடும்போது உயிர் பெற்று தெய்வ அருட்சக்தி பெற்றுத் திகழும். பாடல்களே லயங்களாக நம்முன் திகழும். அந்த நாளும் வந்திடாதோ!



# 21. கரியன்

தேவாரப்பதிகங்களைப் படிக்கப்படிக்க ஆழமான பல கருத்துக்கள் வெளிப்படும். கீழ்வரும் பாடல்களைப் பாருங்கள்.

*கொள்ளி வெந்தழல் வீசிநின்றாடுவார்*
*ஒள்ளிய கனஞ்சூழ் உமை பங்கனார்*
*வெள்ளியன் கரியன் பசு ஏறிய*
*தெள்ளியன் திருவெண்காடடை நெஞ்சே*

அப்பர் பெருமானின் இப்பாடல் ஐந்தாம் திருமுறையில் திருவெண்காட்டுப் பதிகத்தில் உள்ளது. இதற்கு தருமை யாதீனப் பதிப்பில் கீழ்வரும் பொழிப்புரை கொடுக்கப்பட்டுள்ளது.

"நெஞ்சே: கொள்ளியாகிய வெவ்வியதழலை வீசி நின்று ஆடுபவரும் ஒள்ளிய பூதகணங்கள் சூழ்பவரும், உமைபங்கரும், வெள்ளிய திருநீற்றினரும் அயிராவணம் என்னும் ஆனைக்குரிய வரும், விடை ஏறிய தெளிவுடையவரும், ஆகிய பெருமானுக்குரிய திருவெண்காட்டை அடைந்து வழிபாடு செய்வாயாக"

இவ்வுரையில் கரியன் என்றால் யானையை உடையவன் என்று சிங்காரவேலனார் கொண்டுள்ளார். குறிப்புரை எழுதிய குருசாமி தேசிகர், பின்வருமாறு கூறுகிறார்.

"கொள்ளி வெந்தழல் கொள்ளிக்கட்டையில் பற்றிய வெவ்விய் நெருப்பு வீசி சுழற்றி ஆடுவார். அனலேந்தி ஆடுவார் என்பதாம்; ஒளி பொருந்திய கணம் - பூதகணங்கள்; வெள்ளியன் திருநீற்றுப்பூச்சால் வெண்மை நிறமுடையவன்; கரியன் அகோரமுகத்தை உடையவன்; பசு இங்கு எருது; தெள்ளியன் தெளிந்த அறிவினன்."

கொள்ளி வெந்தழல் என்பதற்கு வேலனார் கொள்ளியாகிய தழல் என்றும், தேசிகர் கொள்ளிக் கட்டைபற்றிய தழல் என்றும் கூறுவார்

வெள்ளியர் என்பதற்கு இருவரும் திருவெண்ணீற்றால் வெண்மையானவர் என்று கொண்டுள்ளனர். கரியர் என்பதை ஒருவர் யானை உடையவர் என்றும், மற்றவர் அகோரமுகம் என்றும் கொண்டுள்ளனர். சிவபெருமானின் ஐந்து முகங்களில் அகோரமூர்த்தியின் உருவம் கருமை - காளாமுகம் என்பர்.

சிவபெருமானது ஐந்து மூர்த்தங்களில் ஈசானமூர்த்தியின் நிறம் வெள்ளை. வெள்ளி மலையில் உறையும் பெருமானை வெள்ளை நிறத்தோன் என்று கூறும் மரபு உண்டு. திருவெண்ணீற்றினால் வெள்ளையானவன் என்பதைக் காட்டிலும் சிவபெருமானின் நிறமே வெள்ளை நிறம் என்று கொள்ளலாம். இங்கு கரியன் என்பது கிருஷ்ணன் ஆகிய திருமாலைக் குறிக்கும். உமைபங்கள் என அர்த்த நாரீச்வரர் உருவைக் குறிப்பிட்டு தொடர்ந்து இங்கு வெள்ளியன் கரியன் என்பதால் சிவனும் மாலும் இணைந்த அரியரன் உருவைக் குறிக்கும் என்று கொள்ளவேண்டும்.

*செய்யானை வெளியானை கரியான் தன்னை*
*திசை முகனை, திசை எட்டும் செறித்தான் தன்னை*

(கற்குடி திருத்தாண்டகம் - 6ம் திருமுறை என்னும் அப்பர் பாடலில் சிவபெருமான் சிவந்தவர் வெண்மையானவர், (கரியான்) திருமால் (திசைமுகனை) நான்முகன் ஆய அனைவரும் அவரே என்பது கருத்து. திருமாலை கரியான் என்று அப்பரே குறித்துள்ளது காண்கிறோம்.

"பசு ஏறி" என்பது எருது ஏறி என்று கூறுவது பொருத்தமே. ஆயினும் மற்றுமொறு பொருளும் கொள்ளலாம். அனைத்து உயிர்களும் அறியாமையில் உழலும் பசுக்களே. உயிர்களாகிய ஆன்மாவில் இடம் கொண்டு தெள்ளிய அறிவை (பாசத்தை போக்கும் ஞானத்தை) அளிப்பவன். பசுத்தன்மையை எறிந்த போக்கிய, பதி ஞானம் என்றும் கொள்ளலாம். ஆழ்ந்த சித்தாந்த ஞானமும் இதில் தொனிக்கிறது எனலாம்.



# 22. ஏச்சுறும் மாதரை

அப்பர் பெருமானின் கீழ்வரும் பாடலைக் காணுங்கள்

*கண்ட பேச்சினில் காளையர் தங்கள்பால்*
*மண்டி ஏச்சுணும் மாதரைச் சேராதே*
*சண்டி ஈச்சுரர்க்கு அருள் செய்தஅக்*
*கொண்டி ஈச்சுரனவன் கழல் கூறுமே*

இப்பாடலுக்கு தருமை ஆதீனப் பதிப்பில் சிங்கார வேலனார் கீழ்வருமாறு பொழிப்புரை கூறுகிறார்.

"காளை போன்ற ஆடவரிடத்துப் பொருந்திக் கண்டவாறு பேசும் பேச்சாகிய ஏச்சுணும் மாதர்களைச் சேராது சண்டீச்சுரருக்கு அருள்செய்த கொண்டீச்சரத்து இறைவன் திருவடியைக் கூறுவராக" இவுரையில் ஏச்சுண்பவர்கள் பெண்கள் என்பது சிங்கார வேலனார் கருத்து

குறிப்புரை எழுதிய குருசாமி தேசிகர் அவர்கள் பின்வருமாறு குறிக்கிறார். கண்டபேச்சினில் பயனற்ற பேச்சுக்களில் ஈடுபட்டு; காளையர் தங்கள் பால் - இளைஞர்களிடத்து; மண்டி - நெருங்கி; ஏச்சுணும் - பின் அவரால் எசும்மொழிகளைப் பெறும்" என்கிறார். தேசிகரும் மாதர்கள் இளைஞரிடத்து ஏச்சு பெறுகிறார்கள் என்று கூறுகிறார்.

இங்கு அப்பர் பெருமான் கூறும் மாதர் விலைமாதர் தாம். கற்புடைப் பெண்டிர் அல்ல என்பது தெளிவு. விலைமாதர் பேச்சுக்கள் கண்டதும் காமுறுமாறு கூறும் பேச்சுக்கள். உண்மைக்கு புறம்பான ஆசை வார்த்தைகள், விலைமாதர் காளையர்களைத் தங்கள் பால் இழுக்கின்றனர். தங்களை மண்டச் செய்கின்றனர். அவர்கள் வலையில் வீழ்வதால் மற்றவர்களால் ஏசப்படுபவர்கள் விலைமாதரல்ல. அவர் பேச்சில் மயங்கி அவர்பின் செல்லும் காளையர்களே ஆதலின் தங்களுடைய பேச்சினில் மயங்கி தங்களை மண்டி காளையர்களை ஏச்சுப் பேச்சுக்கு ஆளாக்கும் மாதரை சேராதே சிவபெருமான் திருவடியைச் சேரும் என்ற பொருள் கொண்டால் சிறக்கும் எனத் தோன்றுகிறது.

# 23. பிரமர் நொந்தினர்

அப்பர் பெருமாள் தமது "ஆதிபுராணத் திருக்குறுந்தொகை" என்னும் பதிகத்தில் நூறுகோடி பிரமர்கள் நொந்தினார் என்று கூறுகிறார். அப்பாடலைப் பாருங்கள்

*"நூறுகோடி பிரமர்கள் நொந்தினார்*
*ஆறுகோடி நாராயணர் அங்கனே*
*ஏறு கங்கை மணல் எண்ணில் இந்திரர்*
*ஈறிலாதவன் ஈசன் ஒருவனே!"*

என்று பாடுகிறார். அப்பர் பெருமான் நம்மால் தெய்வமாக வணங்கப் படுபவர். அவர் பிரமனையும், நாராயணனையும், இந்திரனையும் இவ்வாறு கூறியிருக்கிறாரே எனத் தோன்றும். இதைக் குதர்க்கவாதிகள் சமயக் காய்ப்பு என்று கூடக் கூறலாம். ஆனால் தத்துவ வாதிகளுக்கு இதன் உண்மை புரியும்.

பதினெட்டு மகாபுராணங்களில் கூர்ம புராணம் என்பதும் ஒன்று அதில் கீழ்வரும் சுலோகம் உள்ளது.

***பிரும்மணோ பஹவஹ ருத்ரா:***
***அன்யே நாராயணாதயஹ***
***ஏகோ ஹி பகவான் ஈசஹ***
***கால: கவி: இதி சுருதிஹி***

இதன்பொருள் 'பிரமர்கள் ஏராளம். ருத்ரர்களும், பிற நாராயணர் போன்றவர்களும் அவ்வாறே எண்ணிலர். ஆனால் பகவன் ஆகிய ஈசன் மட்டும் ஒருவனே. அவனே காலம் கவியும் அவனே" என்பதாம். எண்ணில்லா பிரமன், நாராயணர், ருத்ரன் ஆகியோர் தோன்றுவர். இவற்றைக் கடந்த ஈசன் ஒருவனே என்பதே இதன் பொருள். இக் கூர்ம புராண செய்யுளின் கருத்தை அப்படியே பிரதிபலிக்கிறது அப்பர் பெருமானின் பாடல் அல்லவா! இச்செய்யுளின் மொழி பெயர்ப்பே அப்பாடல் என்கிற அளவுக்கு ஒற்றுமை காண்கிறோம். அப்படி என்றால் கூர்மபுராணமும் சமயக்காய்ப்புடைய நூல் என்று கூறி விடலாமல்லவா? அவ்வாறு யாராலும் கூற இயலாது. நாராயணன் கூர்மாவதாரம் எடுத்தபோது, அவரே கூறுவதாக உள்ளது இந்நூல். ஆதலின் இந்நூலை எடுத்துரைத்தவர் விஷ்ணு. அவரே இந்நூலில் பல

இடங்களில் "நாராயணனாகிய யானும், ஈசனாகிய சிவனும் ஒருவரே நான் வேறு அவர் வேறு அல்ல. யார் ஒருவன் நான் வேறு அவர் வேறு என்ற வேறுபாட்டோடு பார்க்கிறானோ அவனுக்கு வீடு பேறே கிடையாது? என்று கூறுகிறார். மகாபுராணங்கள் பதினெட்டிலும், சிவபெருமானும் நாராயணனும் ஒன்றே என்ற கருத்து தான் மீண்டும் மீண்டும் வலியுறுத்தப் பெறுகின்றன. இதையேதான் அப்பர் பெருமானும் தமது பாடலில் "ஒருபால், அரியுருவம் திகழ்ந்த செல்வர்" என்று கூறுகிறார். அவ்வாறிருக்க எவ்வாறு கூர்மபுராணமும் அப்பர் பெருமானும், 'நூறு கோடி பிரமர் நொந்தினர், ஆறு கோடி நாராயணர் அங்கனே. இந்திரனும் பல கோடியே! ஈசன்தான் பரமனாகிய ஒருவன்" எனக் கூறலாம் என்பது கேள்வி.

உலக சிருஷ்டியைப் பற்றி கூறும்போது இந்த புராணங்கள் பரம் பொருள் என்பது ஒன்றுதான் அது அனைத்துக்கும் அப்பாற்பட்டது அதில் ஒரு அம்சம் தான் இவ்வுலகைத் தோற்றுவிக்கிறது. மற்றொரு அம்சம் உலகைக் காக்கிறது. மற்றொரு அம்சம் உலகை ஒடுக்குறது தோற்றல் தொழில் செய்யும் போது அதை பிரமன் என்றும் காக்கும் போது நாராயணன் என்றும் ஒடுக்கும் போது ருத்திரன் என்றும் கூறுவோம். உண்மையில் இவை மூன்றும் ஒன்றே. பரமானது இவற்றிற்கும் அப்பால் எல்லையில்லாப்பொருள். உலகு என்பது தோன்றி மறைவது. மறையும் காலத்தை "பிரளயம்" என்கிறோம். இதுபோல எவ்வளவோ பிரளயங்கள். தோன்றி மறைந்துள்ளன. இவற்றை கணக்கிட இயாது. ஒவ்வொரு முறை தோன்றும் போது தோற்றச்சக்தியும், காக்கும்போது காக்கும் சக்தியும், மறையும் போது ஒடுக்கும் சக்தியும் தோன்றுகின்றன. இவற்றிற்கெல்லாம் அப்பால், எப்பொழுதும், நித்யமாய், நிர்மலமாய், நிச்சலமாய், நிராகராமய், நிற்கும் பரம்பொருளை ஈசன் என்போம். இந்த தத்துவத்தைக் குறிக்கவந்ததே. "பிரமன் நூறு கோடி, நாராயணன் நூறு கோடி, இந்திரர் எண்ணிலர், ஈசன் ஒருவனே" என்ற பாடல்.

ஆதலின் சமயக் காய்ப்பை சமய வேறுபாட்டை கூறவந்தவவை அல்ல அப்பர் பிரானின் பாடலும் கர்ம புராணப்பாடலும். அதற்கு மாறாக சமய ஒற்றுமையை வெளிப்படக் கூற ஒரு ஒப்பற்ற தத்துவத்தை கூற வந்தவை இப்பாடல்கள் என சிவம்.



# 24. ஈசன் ஒருவனே

*"வேதம் நான்கும் பதினெட்டோடு ஆறும்
விரித்தார்" (2-250)*

என்று சிவபெருமானை ஞானசம்பந்தப் பெருமான் தமது தேவாரப்பதிகத்தில் பாடுகின்றார். மற்றொரு பதிகத்திலும் "பங்கமில் பதினெட்டோடு நான்குக்கு உணர்வுமாகி அங்கமாறும் சொன்னான்" (2.142) என்று கூறியுள்ளார். இங்கு, வேதங்கள் ஆறு அங்கங்களோடு கூறும் பதினெட்டு என்பது புராணங்களைக் குறிக்கும் மஹா புராணங்கள் பதினெட்டு என்பது அனைத்துப் புராணங்களிலும் உள்ள செய்தி. ஆதலின் ஞானசம்பந்தர் காலத்திற்கும் முன்னரே (அதாவது கி.பி. 600க்கும் முன்பே) தமிழ்நாட்டில் 18 புராணங்களும் நன்கு அறியப்பட்டிருந்தன என்பது தெளிவாகிறது. அப்பர் சம்பந்தர் போன்ற சைவப்பெரியார்களும் காலத்தால் முந்திய ஆழ்வார்களும் தமது பாடல்களில் புராணங்களில் வரும் கதைகளின் அடிப்படையில்தான் பரமனின் பல்வேறு அம்சங்களையும் அவதாரங்களையும் பாடியுள்ளனர். பிக்ஷடனர், கஜசம்ஹாரமூர்த்தி, லிங்கோத்பவர் முதலிய கதைகள் எல்லாம், புராணங்களில் உள்ளன. அதுபோன்று தான் கண்ணனது லீலைகளும் திருமாலின் அவதாரங்களும் புராணங்களில் உள்ளன. நமது நாயன்மார்களும் ஆழ்வார்களும் எவ்வாறு ஆழ்ந்து புராணங்களில் திளைத்தார்களோ அது போல மக்களும் புராணங்களை நன்கு அறிந்திருந்ததால் தான் பெரியார்கள் அவற்றைப் பரவலாகப் பாடியுள்ளனர்.

இந்தப் பின்னணியில் தான் அவர்களின் பாடல்களில் உள்ள கருத்துகளை முழுவதும் அறிய முடியும். அப்பர் பெருமான் 'லிங்க புராணம்' என்ற புராணத்தை தமது தேவாரத்தில் குறிக்கிறார். லிங்கபுராணத்துள்ளார் என்பது அவர் வாக்கு. அதுபோல அவரது ஒரு பதிகத்துக்கு லிங்கபுராணக் குறுந்தொகை என்று பெயர். நம்மாழ்வாரும் தமது பாசுரத்தில் இலிங்கத்திட்ட புராணத்தீரும்" என்று சைவர்களை கூறுவர். ஆதலின் தமிழ்நாட்டில், அப்பர் காலத்துக்கும் முன்பிருந்தே 'லிங்கபுராணம்' புகழ் பெற்றிருந்தது என்பதும் தெளிவு.

இதை மனத்தே கொண்டு அப்பரின் ஒருபாடலைக் காணலாம்.

*"நூறு கோடி பிரமர் நொந்தினார்*
*ஆறு கோடி நாராயணர் அங்கனே*
*ஏரு கங்கை மணலை எண்ணிடில் இந்திரர்*
*ஈரிலாதவன் ஈசன் ஒருவனே"*

என்பது பாடல். இதன் பொருள் எண்ணற்ற பிரமர்கள் வந்து மறைந்து போயினர். அதுபோல் நாராயணரும், இந்திரரும் எண்ணற்றவர்கள் ஈசன் மட்டும் ஒருவரே என்று உள்ளது. புராணங்களை சரிவர அறியாதோர் இப்பாடலை மெலெழுந்த வாரியாகப் படித்து பொருள் கூறுவர். அதுமட்டுமல்ல. இது சைவர்களைத்தவிர பிற சமயிகளைத் தூற்றுவது. சமயச்சண்டையைக் கூறுவது. அப்பர் சமயவெறி பிடித்தவர் என்று கூட கூறுவர். ஆனால் உண்மையை பார்க்கும் போது இப்பாடல் சமய ஒற்றுமையை கூற வந்த பாடல்.

லிங்க புராணத்தின் ஒரு பாடல் உள்ளது. அப்பருக்கும் காலத்தால் முந்தியது. அதில்

*அசங்க்யாதா: கல்பாத்யாஹ*
*அஸங்க்யாதாஹ பிதாமஹாஹ*
*ஹரயஸ்ச அஸங்க்யாதாஹ*
*ஏக ஏவ மஹேச்வர:*

இதன் பொருள். எண்ணற்ற கல்பங்கள் தோன்றியுள்ளன. அதுபோல பிரமர்கள் எண்ணற்றவர்கள். ஹரியாகிய நாராயணர்களும் எண்ணற்றவர்கள். மகேசன் மட்டும் ஒருவரே என்று உள்ளது. இதே போல் கூர்ம புராணத்திலும் ஒரு செய்யுளும் உள்ளது.

*'பிரும்மனோ பஹவா ருத்ரா*
*அன்யே நாராயணாதயஹ*
*ஏகோ ஹி பகவாண் ஈசஹ*
*கால கவி இதி சுருதி ஹி*

இப்பாடலிலும் பிரமன், நாராயணருடன் ருத்ரனும் எண்ணற்றவர் வந்து மறைந்துள்ளனர் ஈசன் மட்டும் ஒருவனே என்ற பொருள் உள்ளது. இவற்றைத்தான் அப்பர் தமது பாடலில் அப்படியே மொழி பெயர்த்துள்ளார்.

இதைக்காணும் போது நமது புராணங்களே சமயச்சண்டைகளைக் கூறியுள்ளன என்று தோன்றும்; அப்படித்தான் பல ஆய்வாளர்கள் கூறியிருக்கிறார்கள். ஆனால் இவை சமய வேறு பாட்டைக் கூற வந்தவை அல்ல. ஒற்றுமையைக் கூறவந்தவை என திட்ட வட்டமாகக் கூறலாம். புராணங்களில் இவை குறிக்கப்பட்டுள்ள இடம், உலகத் தோற்றத்தைக் குறிக்கும் இடம்.

நமது புராணங்கள் ஒரு பேருண்மையை திரும்பதிரும்ப வலியுறுத்திச் செல்கின்றன. பரம்பொருள் ஒன்று உண்டு. ஆனால் அது சொல்லுக்கும் பொருளுக்கும் அப்பாற்பட்டது. அதை எப்பெயராலும் அழைக்கலாம். ஆனால் அந்தப் பெயருக்குள் மட்டும் அதை அடக்கிவிட முடியாது. அப்பெயரைக் கடந்து, செயலைக் கடந்து நம் மனத்தின் கற்பனைகளை எல்லாம் கடந்து நிற்பதுதான் அது அதனால் அதை தமிழ்மக்கள் கடவுள் என்றனர்.

'ஒன்றே கடவுளும் ஒருவனே தேவனும்' என்பது அக்கருத்தையே. நம்மால் எண்ணிக் கூடப் பார்க்க முடியாத அந்த மாபெரும் சக்திதான் இவ்வுலகை இயக்குகிறது. சக்திதான் தோற்றதுக்கும் காரணம். உலகம் நிலைத்து இயங்குவதற்கும் காரணம் அதுவே மறைவதற்கும் காரணம் அதே சக்திதான் மூன்று தொழிலுக்கும் காரணம். தோற்றுவிக்கும்போது அச்சக்தியை பிரமன் என்கிறோம். காக்கும் போது அதே சக்தியை நாராயணன் என்கிறோம். மறைக்கும்போது ருத்ரன் என்கிறோம். சக்தி ஒன்றேதான் அதன் தொழிலால் வேறு பெயரிட்டு அழைக்கிறோம். ஒவ்வொரு தோற்றம் அச்சக்தியின் ஒரு வெளிப்பாடு ஆதலின் எவ்வளவு தோற்றங்கள் இவ்வுலகில் உண்டோ அவ்வளவும் சக்தியின் தோற்றங்கள். ஆதலின் அவ்வளவும் எண்ணில்லாத பிரமர்கள். அதுபோல் காத்தல் சக்திகளும் அழித்தல் சக்திகளும் எண்ணில்லாதவை.

ஆதலின் நாராயணர் எண்ணிலார் ருத்ரன் எண்ணிலர். இவையனைத்தையும் திரட்டி ஒன்றாகக் கூறப்படுவதும், இவையனைத்தையும் கடந்து நிற்பதும் தான் கடவுள். அதையே ஈசன் என்போம். அது ஒன்றே. வேறாக நினைத்து விடாதீர்கள். ஒன்றையேதான் பல பெயரால் அழைக்கிறோம். விஷ்ணு எனினும் சிவன் எனினும் ஒன்றே என்பதைக் கூறும் இடத்தில்தான் புராணங்கள் இந்த பாடல்களை கூறுகின்றன. இதைத்தான் பாரதி "எங்கெங்கெங்கு காணினும் சக்தியடா" என்றான்.

நமது புராணங்கள் - மற்றும் ஒரு உண்மையையும் மிகவும் வலியுறுத்திக் கூறுகின்றன. சிவன் வேறு விஷ்ணு வேறு என எவன் எண்ணுகிறானோ அவன் அறிவற்றவன் அவனுக்கு வீடுபேறு கிடையாது என்று திரும்ப திரும்பக் கூறுகின்றன. இதன் உண்மை தத்துவம், எந்த தெய்வமாயினும் ஒன்றே தான். உலக தோற்றத்தில் எங்கிருப்பினும், எப்பெயரால் அழைக்கினும் கடவுள் ஒன்றே. வேறுபாடு கூறுவர் அறியாதார். அறிவாளிகள் வேறுபாடு பாராட்டமாட்டார்கள் என்பதைத்தான் இந்து சமயப் புராணங்கள் மீண்டும் மீண்டும் அடிக்கோடிட்டு வலியுறுத்துகின்றன.

# 25. அத்தா

பரமன் சுந்தரமூர்த்தியைத் திருவெண்ணெய் நல்லூரில் தடுத்தாட் கொண்டபோது அவர் பாடிய முதல்பாடல் "பித்தா பிறை சூடி" என்பது யாவரும் அறிந்ததே, இப்பாடலின் இறுதியில் "அத்தா உனக்காளாயினி அல்லேன் எனலாமே" என முடிக்கிறார். "அத்தா" எனப் பரமனை அழைக்கிறார் அல்லவா! அத்தா எனில், என்ன பொருள்! அத்தா எனில், "தந்தையே" "பெரியோனே" "வணக்கத்துக்குரியோனே" என்று எளிமையாகப் பொருள் கொள்ளலாம்.

இருப்பினும், சுந்தரர் "அத்தா உனக்காளாயினி" என்று பாடியதாகவே பெரும்பாலும் கொள்வர். ஆதலின் அத்தா எனில் என்ன பொருள் எனக்காண்போம். அத்தா எனில் மூத்தோன் எனத் திவாகரமும், சிவன், விஷ்ணு, அருகன் எனச்சூடாமணியும் தகப்பன், மூத்தோன், பெரியோன் எனத் தமிழ் லெக்சிகனும் கூறுகின்றன.

'அத்தா' என்ற சொல்லைப் பற்றி இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சொல்லாராய்ச்சி நடந்துள்ளது. உபநிஷத்துக்களில் உள்ள வாக்யங்களுக்கு எது சரியான பொருள் என ஆராய எழுதப்பட்டது தான் "பிரும்ம சூத்திரம்" என்னும் நூல். இதை வியாசமகரிஷி எழுதினார். இது 2000 ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட நூல். இதில் உள்ள ஒரு சூத்திரம் "அத்தா" என்ற சொல் யாரைக் குறிக்கும் என்ற ஆய்கிறது.

"அத்தா சராசரக் க்ருஹணாத்" என்பது இச்சூத்திரம். இந்த பிரும்ம சூத்திரத்துக்கு சங்கரர், இராமானுஜர் ஸ்ரீகண்டர் போன்ற பெரியோர்கள் எல்லாம் பாஷ்யம் எழுதியுள்ளனர். இவை அனைத்திலும் சங்கரர் எழுதிய பாஷ்யம்தான் மிகவும் தொன்மையானது.

கடோபநிஷத்தில் ஒரு வாக்யம் வருகிறது. அதில் "இவ்வுலகில் உள்ள சராசரங்கள் எல்லாம் யாருக்கு உணவாக ஆகின்றனவோ, யாருக்குக் கூற்றுவன் பக்க உணவாக ஆகின்றானோ அவரை அறிபவனே அனைத்தையும் அறிந்தவனாவான்" எனக் கவிதை வடிவில் கூறப்பட்டுள்ளது. இவ்வுலகம் முழுவதையும் உணவாக உட்கொள்பவன் யார் என்பது ஐயம்! அங்குதான் 'அத்தா' என்னும் இச்சொல் வருகிறது. "அத்" என்பது இதன் வேர்ச்சொல்; உண்ணுதல்

என்பது பொருள். அத்தா என்றால் உண்பவன், (அத்தி எனில் உண்கிறான்) என்று பொருள். இந்த பிரும்ம சூத்திரத்துக்கு உரை எழுதிய சங்கரர், இங்கு "அத்தா" என்று உபநிஷத் கூறுவது பரம்பொருளையே என்று விரித்துள்ளார்.

**"அத்தா அத்ர பரமாத்மா பவிதும் அர்ஹதி"** இவ்வுலகை இறுதியில் பரமாத்மா சம்ஹாரம் செய்வதால் "பரமாத்மா உண்கிறார்" என உபநிஷத் கவிதை நயமாகக் கூறுகிறது என்று சங்கரர் கூறுகிறார்.

**"சர்வ வேதாந்தேஷு ஸ்ருஷ்டி ஸ்திதி சம்ஹார காரணத்வேன பிரும்மண: பிரசித்தத்வாத்"** என்று சங்கரர் எழுதுகிறார். அனைத்துலகையும் இறுதியில் அழித்தலால் பரப்ரும்மத்துக்கு அத்தா (உண்போன்) என்பது பொருள். இதுதான் இந்த பிரும்ம சூத்திரத்தின் பொருள்.

இராமானுஜரும் ஸ்ரீகண்டரும் இந்த சூத்திரத்துக்கு இதே பொருளைத்தான கூறுகின்றனர். **"அத்தா பரமாத்மா ஏவ"** என்கிறார் இராமானுஜர், ஸ்ரீகண்டர் எல்லாவற்றையும் ஒடுக்குவதால் பரப்பிரும்மமே அத்தன் என்கிறார். ஸ்ரீகண்டர் சிவாத்வைத மதத்தை நிலை நிறுத்தியவர். எல்லா வேதாந்தங்களும், உபநிஷத்துக்களும் சிவபெருமானே பரம்பொருள் எனக் கூறுகின்றன என்பது இவரது துனிபு. **சித்தாந்தே: து பிரும்மைவ சர்வ சம்ஹ்ருதத்வேன ச்ரூயதே"** என்று கூறுகிறார்.

அதுமட்டுமல்ல "அனைத்துலகையும் ஒடுக்கும் சிவபெருமான் தான் பரப்பிரும்ஹம் என்றழைக்கப் படுகிறது" என்கிறார்.

**சர்வ சம்ஹர்த்தா சிவ: ஏவ பிரும்ம சப்த அபிதேய:** என்று கூறுகிறார். இதுதான் வேதாந்தங்களின் உட்பொருள். நமது சைவசித்தாந்த கருத்தும் கூட இதுதான். "அந்தம் ஆதி என்மனார் புலவர்" என்பது சிவஞானபோதம். சம்ஸ்கிருத சிவஞானபோதமும் இதையே சம்ஹாரகாரண: **கர்த்தா ஸ: ஹர:** என்று விரிக்கிறது. இதிலிருந்து வேதாந்தமும் சித்தாந்தமும் இந்த இடத்தில் ஒரே கருத்தைக் கொண்டுள்ளன என்பது தெளிவு.

சம்ஹார காரணன் ஆன கடவுளைத்தான் "அத்தா" என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் அழைத்தனர். ஆதலின் சுந்தரர் "அத்தா உனக்காளாயினி" என்பது சம்ஹார காரணனாகிய பரம்பொருளை என்பதையும் குறிக்கும். அப்பர் பெருமானும், "அம்பலத்தே ஆடுகின்ற அத்தா உண் ஆடல் காண்பான் அடியனேன் வந்த வாறே" என்று பாடுகிறார். தில்லை நடராஜப் பெருமானை "திரிபுரசம்ஹார மூர்த்தியாக உருவகப்படுத்தி வணங்குவது தான் நமது

மரபு. அத்தா என்ற சொல்லுக்கு சம்ஹாரக் கடவுள், சிவபெருமான் என்ற பொருள் தமிழ்லெக்சிகனில் சேர்த்துக் கொள்ளப்படவேண்டும். இப்பொழுது இப்பொருள் இல்லை. சூடாமணியில் 'சிவன்' என்று கூறப்பட்டுள்ளது பொருத்தமே.



# 26. என் கையே தெய்வம்

சைவ சமயத்தைப் பற்றி தவறான பல கருத்துக்களை ஆராய்ச்சியாளர், குறிப்பாக மேலை நாட்டினர் சிலர் எழுதி வந்துள்ளனர். நம் நாட்டினர் பலரும் கிளிப்பிள்ளை போல் அவற்றையே திரும்பத் திரும்பச் சொல்லி வருகிறோம். இவை திருத்தப்பட வேண்டும் என்பது எனது கருத்து. ஒன்றிரண்டு காண்போம்.

'வேதகாலத்தில் சிவனைப் பற்றிய கருத்து இல்லை. ருத்ரனைப் பற்றித் தான் உள்ளது' என்று குறிக்கிறார்கள். யஜுர் வேதம் என்பது முக்கியமான வேதம் என்று அனைவரும் ஒப்புக் கொள்கிறார்கள். அதில் மத்தியில் உள்ளது ஸ்ரீருத்ரம் என்பது. அதை எப்பொழுதும் ஓதி பரமன் திருவடி அடைந்தார் உருத்திர பசுபதிநாயனார். அந்த ருத்திரத்தின் நடுவில் உள்ளது 'நமசிவாய' என்ற பஞ்சாக்ஷர மந்திரம். வேதத்தில் சிவன் குறிக்கப்பட்டுள்ளார் என்பதற்கு இதைக் காட்டிலும் வேறு என்ன வேண்டும்? வேதத்தில் சிவனே இல்லை என்றால் என்ன சொல்வது?

சைவ வழிபாட்டில் படிப்படியாகச் செய்ய வேண்டிய விதிமுறைகள் பல உண்டு. சிவ தீக்ஷை செய்து கொண்டு சிவபூஜை செய்பவர்களுக்கு இது நன்கு தெரியும். 'பஞ்சசுத்தி, செய்தல் என்பது அடிப்படையான ஒரு சடங்கு, அதில் பூஜைசெய்யும் இடத்தை, பொருளை, பூஜை செய்பவரின் உடலை, பிம்பத்தை, மந்திரத்தை தூய்மையாக்குவது என ஐந்து வகை சுத்தி செய்து, பின்னர்தான் சிவபூஜை செய்வது மரபு. தமது சாதாரண உடலைக் கொண்டு தெய்வத்தை பூஜை செய்யாமல், தம் உடலை, அதன் ஒவ்வொரு அங்கத்தையும் சுத்தி செய்து கொள்வார்கள். அதாவது, மனத்தால் மந்திரத்தால் தூய்மையாக்கிக் கொள்வதாக பாவித்துக் கொள்வார்கள். இதனால் நமது அங்கங்கள் தெய்வ மயமாக மாறிவிடுகின்றன. அப்பொழுது தான் தெய்வத்தைத்தொட்டு பூஜிக்கமுடியும் என்பது கருத்து, ஆதலால்தான், "முப்போதும் திருமேனி தீண்டுவார்க் கடியேன்" என்று பாடினார் சுந்தரர். தெய்வத்தைத் தீண்டி பூஜிக்கும் கை, தெய்வக்கை, இது நமது பூஜை மரபு இதை சிவஹஸ்தம் என்று நம் ஆகமங்கள் கூறுகின்றன. நாம் பூஜை செய்யும் போது நமது அங்கங்கள் ஒவ்வொன்றிலும் ஒரு தெய்வத்தை இருக்கச் செய்ய வேண்டும்.

வேதகாலத்திலேயே சிவபெருமானைத் தொட்டுப் பூஜிக்கும் கையை தெய்வக் கை என வேதமே கூறியுள்ளது. எந்த ஸ்ரீ ருத்ரம் நமசிவாய என்ற பஞ்சாக்ஷர மந்திரத்தைக் கூறுகிறதோ அதே ருத்ரம் சிவபெருமானைப் பூஜிக்கும் கரத்தையும் கூறுகிறது. "இந்த என்னுடைய கையே தெய்வம். இல்லை இல்லை! பகவானைக் காட்டிலும் சிறந்தது. ஏன் தெரியுமா? இது தானே சிவபெருமானைத் தொட்டு பூஜை செய்கிறது. ஆதலால் இதுவே எல்லாப் பிணிகளுக்கும் மருந்து" என்று கூறுகிறது. கீழே பாருங்கள்.

*அயம் மே ஹஸ்தோபகவான் அயம் மே பகவத்தர:*
*அயம் மே விஸ்வ பேஷஜ: அயம் சிவ அபிமர்சன:*

(அயம் - இந்த; மே - எனது; ஹஸ்த; - கரம்; பகவான் - தெய்வம்; பகவத்தர ; - தெய்வத்தைக் காட்டிலும் சிறந்தது; விஸ்வ அனைத்திற்கும் பேஷஜ - மருந்து; (ஏனெனில்) அயம் - இது; சிவஅபிமர்சன; - சிவனைத் தொட்டு பூஜிக்கிறது.)

சிவனைத் தொட்டு பூஜிப்பதால் எனது கையே தெய்வம் என்கிறது இந்த வேதமந்திரம்.

இதிலிருந்து பல உண்மைகள் வெளிப்படுகின்றன. வேதகாலத்தில் சிவபூஜை இருந்தது என்பதில் சந்தேகமே இருக்க முடியாது. '**சிவ அபிமர்சன**' என்னும் தொடர் இதைத் தெளிவாக்குகிறது. இதிலிருந்து ஆத்மசுத்தி செய்து கொண்டு பூஜை செய்தார்கள். என ஊகிக்க முடிகிறது. ஆதலின் அக்காலத்திலேயே முறையான சிவவழிபாடு இருந்தது என்பதில் ஐயமிருக்க முடியாது.



# 27. கங்கை நாடு

*மங்கைகூறு அமர்கையான், மான்மறி ஏந்திய கையான்*
*எங்கள் ஈசன் என்று எழுவார் இடர்வினை கெடுப்பவர்க்கு ஊர்*
*சங்கை இன்றி நன்நியமம் தான்செய்து தகுதியின் மிக்க*
*கங்கைநாடு உயர் கீர்த்தி மறையவர் காழி நன்னகரே 2.96.5*

துயில் எழும்போதே யார் எல்லாம் சிவபெருமானை நினைந்து "ஈசா, கையிலே மான் ஏந்திய பெருமானே! உடலில் உமையை பாதியாக உடையவனே", என்று தொழுது எழுகிறார்களோ அவர்களது இடர் தரும் தீவினைகளை அகற்றும் பெருமானது ஊர் சீர்காழி. சிவபெருமானே நம்மை உய்விக்க வல்லவர் என்ற கொள்கையில் ஐயப்பாடில்லாதவர்களும், நல்ல நியமங்களை கடைப்பிடிப்பவர்களும், அனைத்து தகுதி உடையவர்களும், புகழ் மிக்கவர்களும் கங்கை நாட்டிலிருந்து வந்தவர்களும் ஆன அந்தணர்கள் அச்சீர்காழியில் விளங்குகிறார்கள் என்று ஞான சம்பந்தர் பாடுகிறார். கங்கை நதியை புனிதமான நதியாக நாம் தொன்று தொட்டே கருதி வந்துள்ளோம். கங்கை நாடு என்பது கங்கைக் கரையில் உள்ள நாடு எனப் பொருள்படும். ஞான சம்பந்தப் பெருமான் கி.பி. 630-650 க்குள் வாழ்ந்தவர் என்பது வரலாறு. இப்பாடலிலிருந்து அக்காலத்திலேயே சைவ வழிபாட்டில் சிறந்த அந்தணர்கள், புகழ் மிக்கவர்கள் தமிழ்நாடு வந்து தங்கியிருக்கிறார்கள் என அறிய முடிகிறது. சீர்காழிக்கு அருகில் உள்ள தில்லையம்பதி பற்றிய தலவரலாறு கங்கைக் கரையில் அந்தர்வேதி என்னும் பகுதியிலிருந்து வந்தவர்கள்தாம் தில்லை மூவாயிரவர் என்று கூறுகிறது. இதை கோயில் புராணத்தில் உமாபதி சிவம் பின்வருமாறு கூறுகிறார்.

*..............................இரணியவன்மன் ஏகி*
*மன்னுசீர் அந்தர்வேதி மாதவர்தம்மைச் சார்ந்தான்.*

*மும்மை ஆயிரவர் நீங்கள் முதுபதி பொதுவிலாடும்*
*தம்மை ஆளுடையான் பாதம் நாள்தொறும் நயந்து போற்றற்கு*
*எம்மை நீர் பிரியாது எய்தற்கு எழில் முனி இசைத்தான் என்று*
*செம்மை ஆர்இரவி போலத் தேர்பல சேர வைத்தான்*

*அங்கவர் தங்கள் துங்க அங்கிகள் ஆதரித்து*
*மங்கையர், மகளிர், மைந்தர், வான்கலை, அரணி மற்றும்*
*எங்கனும் நிறைய ஏற்றி இரதம் முன் புரவி பூட்டி*
*பொங்கிய ஓமதேனு போதுவ தொடர்ந்து போத*

என்று கூறுகிறார். கௌடதேசத்து (இன்றைய வங்காளம்) அரசன் இரணியவர்மன் என்பவன் தன் நோய்தீர தில்லைப்பதிக்கு வந்து நடராஜப் பெருமானைத் தொழ அவனது நோய் தீர்ந்தது. அங்கிருந்த வியாக்கிரபாத முனிவர் அவனை கங்கைக்கரைக்குச் சென்று அங்கு அந்தர்வேதி என்னும் பகுதியில் வாழும் மூவாயிரவவரையும் அழைத்து வரச் சொன்னார் என்றும் அதன்படி அழைத்து வந்தவர்களே தில்லை தீக்ஷிதர்கள் என்றும் உமாபதி சிவம் கூறுகிறார். கங்கைக் கரையில் இருந்தது அந்தர்வேதி.

திரிலோசன சிவாசாரியார் என்பவர் சைவக்கோயில் வழிபாடுகளைப் பற்றி ஒரு நூல் எழுதியிருக்கிறார். அந்நூலில் ராஜேந்திரசோழன் கங்கைக்கரைக்குச் சென்றான் என்றும் அங்கிருந்து சைவாசாரியர்களை அழைத்து வந்து தன் நாட்டில் குடியேற்றினான் என்றும் குறிக்கிறார். முதலாம் ராஜேந்திர சோழன் கங்கை வரை வெற்றி கண்டான் என்பது வரலாற்று உண்மை. அங்கிருந்து சைவசாரியார்களை அழைத்து வந்து குடியேற்றியிருக்கிறான் என்று இந்நூலால் அறிகிறோம்.

கும்பகோணத்துக்கு அருகில் தாராசுரத்தில் கோயில் கட்டிய இரண்டாம் ராஜராஜசோழன் காலத்தில் வாழ்ந்தவர் அகோர சிவாசாரியார் என்பவர். அவர் கோயில் வழிபாடு பற்றி ஒரு நூல் எழுதி இருக்கிறார். **அகோர சிவாசாரியார்** பத்ததி என்னும் அந்நூலில் பல சைவாசாரியார்கள் ஆரிய தேசத்திருந்தும், கௌடதேசத்திருந்தும், லாடதேசத்திருந்தும் தமிழ்நாட்டுக்கு வந்தார்கள் என்று குறிக்கிறார். ஆரியதேசம் என்பது பெரும்பாலும் அந்தர்வேதி என்னும் கங்கை கரையைக் குறிக்கும் அவ்வாறு வந்தவர்கள் பலர் சோழ அரசர்களுக்கு ராஜ குருக்களாக திகழ்ந்தார்கள் என்றும் கூறுகிறார். தஞ்சைப் பெரிய கோயிலில் சைவாசாரியர்களாக ஆரிய தேசத்தும், கௌடதேசத்தும் மத்திய தேசத்து இருந்து வந்தவர்கள் இருக்கவேண்டும் என இராஜேந்திர சோழன் ஆணை இட்டுள்ளான். இவற்றிலிருந்து கங்கைக்கரையிலிருந்து பல சைவப் பெரியார்களை தமிழகம் வரவேற்றுள்ளது என்பது தெளிவு. இப்பண்பு சம்பந்தர் காலத்துக்கும் முன்பிருந்தே வழக்கத்தில் இருந்திருக்கிறது என்ற வரலாற்று உண்மையை சம்பந்தர் பாடலில் இருந்து அறிகிறோம்.



# 28. உடம்பு விட்ட யோகி

சம்ஸ்கிருத கவிகளில் ஈடு இணை இல்லாத கவியாகத் திகழ்ந்தவன் காளிதாஸ மகாகவி. இவனது பாடல்கள் படிக்கப் படிக்கத் தேன் என இனிப்பவை. ஆழ்ந்த கருத்துக்களை மிகவும் எளிமையாகவும் நயமாகவும் எடுத்துரைப்பதில் வல்லவன். சுமார் 1600 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவன். தலையாய சிவபக்தன். தன்னுடைய காப்பிய படைப்புகள் அனைத்திலும் சிவபெருமானை வாழ்த்தி வணங்கியவன். தனது பாடல் ஒன்றில் சிவபெருமான் தன் காதலுக்கு உகந்த உமையை தன் உடலிலேயே வைத்திருந்த போதிலும் மனதை அடக்கிய யோகிகளில் எல்லாம் யோகியாகத் திகழ்கிறார் என்று பாடுகிறான்.

*காந்தா சம்மிஸ்ர தேஹோபி அவிஷய மனஸாம்*
*யஹ பரஸ்தாத் யதீனாம்*

என்பது காளிதாஸன் வாக்கு. யோகிகள் என்பவர் இச்சைகளை அடக்கியவர்கள். மனிதர்க்கு ஏற்படும் இச்சைகளில் எல்லாம் பேரிச்சை பெண்கள் பால் ஏற்படுவது. அதை வெல்பவர்கள் யோகிகள், யதிகள். காந்தா என்ற சொல் காந்தம் போல் இழுக்கக் கூடிய சக்தி நிறைந்த தனது காதலியைக் குறிப்பது. அவளைத் தன் உடலியே வைத்து மகிழ்கிறார் சிவபெருமான். இருப்பினும் அனைத்து இச்சைகளையும் அறுத்த யோகிகளுக்கெல்லாம் யோகியாகத் திகழ்கிறார் என்பது இதன் கருத்து. இது சைவத்தின் உன்னதக் கருத்து. சைவம் பெண்மையை ஒதுக்கித் தள்ளியது அல்ல. மிகமிக உயர்நிலைக்கு எடுத்துச் சென்ற சமயம். ஒரு பெண்ணைத் தன் உடலிலேயே கொண்ட போதிலும் யோகியாகத் திகழ இயலும் என்பதற்கு எடுத்துக் காட்டு சிவபெருமான்.

இதே கருத்தை ஞானசம்பந்தப் பெருமான் தனது திருத்துருத்தி பதிகத்தில் கூறுகிறார். பரமனே நீ புரிவது அனைத்துமே மாயம்தான். எண்ணிப்பார்த்தால் உனக்கு என ஒரு காணி நிலம் கூட இல்லை. உனக்கு என ஒரு தொழில் இல்லை. உன்னிடத்தில் என்ன பொருள் இருக்கும்! இருப்பினும் உன் அடியார் தொடர்ந்து உன்னை வேண்டிக் கொண்டே இருக்கிறார்கள். இந்த தொல்லையைக் கூறிக்கொண்டே நீ பிச்சை வேண்டிச் செல்கிறாய். உன் உடலில்கூட நீ ஒரு பகுதியை

பெண் ஒருத்திக்குக் கொடுத்துவிட்டாய். யோகியாக நீ திருத்துருத்தியில் வாழ்கிறாய், இது மாயமல்லவா என்கிறார் சம்பந்தர்.

*கருத்தினால் ஓர் காணி இல்; விருத்தி இல்லை; தொண்டர்தம்*
*அருத்தியால் தம் அல்லல் சொல்லி ஐயம் ஏற்பது அன்றியும்*
*ஒருத்திபால் பொருத்திவைத்து உடம்புவிட்டு யோகியாய்*
*இருத்தி நீ துருத்திபுக்கு இதென்ன மாயம் என்பதே!*

இதை வியப்பைத் தெரிவிக்கும் பாடல் எனவும் கொள்ளலாம். நிந்தாஸ்துதி எனவும் சொல்லலாம். இதையே அப்பர் பெருமான் மங்கையைத் தழுவிய யோகியர் எனக் கூறுகிறார்.

காளிதாஸனுக்கு 300 - 400 ஆண்டுகளுக்குப் பின் வாழ்ந்தவர் சம்பந்தர். அவரும் இதே கருத்தை கூறியிருப்பது சைவ சமயத்தில் பெண்ணொரு பாகனே யாகிலும் மஹாயோகி என்னும் கருத்து தொடர்ந்து கூறப்பட்டு வந்துள்ளது என்பது தெளிவு.



பெண் ஒரு பாகர் (அர்த்த நாரீச்வரர் திருவெண்காடு

# 29. அதிரர்

அப்பர் பெருமானின் தேவாரப் பதிகத்தில் ஐந்தாம் திருமுறையில் திருப்பூந்துருத்தி தேவாரத்தில் கீழ்வரும் பாடல் வருகிறது.

*அதிரர் தேவர் இயக்கர் விச்சாதரர்*
*கருத நின்றவர் காண்பு அரிது ஆயினான்*
*பொருத நீர்வரு பூந்துருத்தி நகர்த்*
*சதுரன் சேவடிக்கீழ் நாம் இருப்பதே.*

இப்பாடல் எல்லாப் பதிப்புகளிலும் இவ்வாறே காணப்படுகிறது. இப்பாடலில் தேவர்கள், இயக்கர்கள், விச்சாதரர்கள் போற்ற நிற்பவர் சிவபெருமான் என்றுள்ளது. இங்கு அதிரர் என்றால் என்ன பொருள்? தருமை ஆதீனப் பதிப்பில் வி.சா. குருசாமிதேசிகர் அவர்கள், குறிப்புரை அளித்துள்ளார். அவர்கள் அதிரர் என்ற சொல்லை தேவர் என்ற சொல்லோடு இணைத்து - அதிரர் தேவர். உரத்த குரலினராகிய தேவர் என்று பொருள் கொண்டுள்ளார். பொழிப்புரை எழுதிய சிங்காரவேலனார் அவர்கள் அதிரர், தேவர், இயக்கர், விச்சாதரர் முதலியவர்கள் கருதுமாறு நின்ற அனைவரும் காண்டலரிய காட்சியானும்" சிவபெருமான் என்று எழுதியுள்ளார். தேவர், இயக்கர், விச்சாதரர் போல அதிரரும் ஒரு குழுவினர் என்பது இவர் கருத்து. அதிரர் என்போரை நாம் எவ்வாயிலாகவும் அறிந்தோமில்லை! ஆதலின் இங்கு ஏதோ ஒரு இடர்பாடு புலப்படுகிறது. தேவரை உரத்த குரலினர் என்று குருசாமிதேசிகர் கூறக் காரணம் ஏதெனத் தெரியவில்லை.

ஏடுகளிலிருந்து நூல்களை அச்சிடும் போது சில எழுத்துப்பிழைகள் புகுவதுண்டு. ஏடுபடுத்துவோர் பிழையாலும், ஏட்டில் உள்ள பிழையாலும் அச்சுப்பிழையாலும், சில சொற்கள் மாறிவருவதுண்டு. ஒருமுறை அச்சேறிவிட்டால் பெரும்பாலும் அச்சான நூலின் வாசகத்தை பின்னர் வரும் பதிப்புகளில் கொள்கின்றனர். மீண்டும் ஏட்டோடு ஒப்பிட்டுப்பார்ப்பதோ, பார்க்கும் வாய்ப்போ இல்லை. ஆதலின் ஒருமுறை புகுந்த பிழை மீண்டும் மீண்டும் தொடர்ந்து வருவதைக் காண்கிறோம். இப்பின்னணியில் பார்க்கும் போது "அதிரர்" என்ற சொல் தவறாக வந்துள்ளது என எண்ணலாம். அதிரர் என்பதற்கு பதிலாக 'அசுரர்' என்றிருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது. ஏட்டில்

எழுதப்படும் "சு" என்ற எழுத்தை "தி" என்று தவறாக வாசித்திருக்க வேண்டும். தொடர்ந்து எழுதும்போது இரு எழுத்துக்களும் ஒன்றாகவே தோன்றும்.

அவ்வாறெனில் தேவர், இயக்கர், விச்சாதரர் போல் அசுரர்களும் ஒரு கூட்டம்தான். அப்பர் பெருமான் அசுரர்களை சிவனைப் போற்றுவாராக கூறுவாறா என்ற ஐயம் எழலாம்? அசுரர்களும் ஒரு காலத்தே சிவபெருமானைப் போற்றியவர்கள் தாம். திரிபுராசுரர்கள் முதலில் சைவர்களாகத் தான் இருந்தார்கள். பின்னர்தான் சைவத்தை விட்டுச்சென்றதோடு சைவத்தை துன்புறுத்தினர். பின்னர் மீண்டும் சைவராயினர்.

தேவாரப் பதிகங்களில் பல இடங்களில் அசுரர்களும் அடியார்களாக் சித்தரிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். அப்பர் பெருமானின் கீழ்வரும் பாடல் சித்தத்தொகை குறுந்தொகை என்ற பதிகத்தில் உள்ளது. அதில் இயக்கர், கின்னரர், இந்திரன், தானவர் எல்லாம் சிவனைப் போற்றுகின்றனர் என்று பாடுகிறார். தானவர் என்றால் அசுரர் கூட்டம் என்பது பொருள்.

*இயக்கர், கின்னரர், இந்திரன், தானவர்,*
*நயக்க நின்றவன்; நான்முகன் ஆழியான்*
*மயக்கம் எய்தவல் மால் எரி ஆயினான்*
*வியக்கும் தன்மையினான் என் விகிர்தனே*

என்பதில் தானவர் நயக்க நின்றவன் என்பது காணலாம். ஆதலின் 'அதிரர்' என்றுள்ள பாடல் "அசுரர்" என்றிருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது.



# 30. கயிலாய நாதனையே காணலாமே!

அப்பர் பெருமான் ஒரு பதிகத்தில், பதினொரு பாடல்களிலும் கயிலாய நாதனையே காணலாமே என்று கூறுகிறார். இப்பதிகத்தை க்ஷேத்திரக்கோவை திருத்தாண்டகம் என்று அழைப்பர். அதாவது பல சிவக்ஷேத்திரங்களைத் தொகுத்து இவ்வாறு இறுதியில் முடிக்கிறார். இருநூற்றுக்கும் மேற்பட்ட சிவ க்ஷேத்திரங்கள் இவ்வாறு குறிக்கப்படுகின்றன. இறுதியில் கூறும்போது எத்தானத்து நிலவும் பெருங்கோயிலானாலும் சரி, அங்கு சென்றால் கயிலாய நாதனைக் காணலாகும் என்று பாடுகிறார். "கடல் நாகைக் காரோணத்தும் கயிலாய நாதனையே காணலாமே" என்பதிலிருந்து இப்பாட்டில் குறிக்கப்பட்டிருக்கும் எந்த ஊருக்குச் சென்று அங்குள்ள சிவன் கோயிலுக்குச் சென்றாலும் அங்கு கயிலாய நாதனைக் காணலாம் என்பது பொருள்.

இந்தியாவின் வடஎல்லையாக, மிக உயர்ந்த மலையாகத் திகழ்வது கயிலைமலை. அதன் உச்சியில் பரமன் உறையும் இடம் கயிலாயம். இது நாம் அனைவரும் அறிந்ததே. ஆதலின்தான் அங்கு மலை உச்சி செல்வதை "கயிலை யாத்திரை" என்கிறோம். தமிழ் நாட்டில் எங்கோ ஒரு சிற்றூரில் உள்ள கோயிலுக்குப் போனால் அங்கு கயிலாய நாதனை எவ்வாறு காணமுடியும்? என்று ஐயம் எழலாம். என்ன அப்பர் பெருமான் இவ்வாறு சொல்லிவிட்டாரே? என்றுகூட எண்ணத் தோன்றும்!.

நமது இந்து சமயத்தில் தெய்வ உருவங்களை இரண்டு வகையாக மூர்த்தங்களாக உருவகிப்பது மரபு. ஒன்று பிம்ப மூர்த்தி என்பது. சிலையாலோ, உலோகத்தாலோ, மரத்தாலோ சிற்பமாக வடித்து அமைப்பது பிம்பமூர்த்தி. இவற்றைத்தான் கோயில்களில் ஸ்தாபிக்கிறோம். இவை சிற்ப வல்லுநர்களாலே வடித்து அமைக்கப் படுபவை. மந்திரங்களாலே உருவகித்து வணங்கப் படுவது இரண்டாவது. இதை மந்திரமூர்த்தி என்பர். இவற்றை குருக்கள் மந்திரங்கள் கூறி பிரதிஷ்டை செய்து பூசிப்பர். சிற்பங்களைக் கருப்பகிருஹத்தில் பீடத்தில் பொருத்தி நிறுத்துவதை ஸ்தாபனம் என்றும், சிற்பங்களுக்கு மந்திரங்களால், தெய்வ உரு வடித்து உருவகிப்பதை 'பிரதிஷ்டை செய்தல்' என்றும் கூறுவர்.

கும்பாபிஷேகத்தின்போது குருக்கள் பிரதிஷ்டை செய்கிறார்கள். இவ்வாறு செய்யும் பிரதிஷ்டையில், சைவசித்தாந்த தத்துவங்கள் அனைத்துமே உருவக வடிவம் பெறுகின்றன. சிவலிங்கத்தை பிரதிஷ்டை செய்யும்போது அத்தனை தத்துவங்களும் மந்திரத்தால் ஆவாஹனம் செய்யப்படுகின்றன. இவற்றை ஆகம நூல்களும் பத்ததி நூல்களும் கூறுகின்றன. 36 தத்துவங்கள் இவ்வாறு மந்திர உருவமாக அமைக்கப்படுகின்றன. இதற்கு **மந்திரந்யாஸம்** என்றும் பெயர். பல தத்துவங்களும் சிவலிங்கத்தில் இருப்பதாக தியானத்தினால் பாவித்தல்.

அகோரசிவாசாரியார் என்ற பெரியவர், இரண்டாவது இராஜராஜசோழன் காலத்தில் கி.பி.1158-ல் வாழ்ந்தவர். அவர் ஒரு பத்ததி எழுதியிருக்கிறார். அதுதான் பெரும்பாலான சிவாலயங்களில் இன்றும் கும்பாபிஷேகத்துக்குப் பயன்படுத்தப்படுகிறது. அதில் சிவலிங்கத்தை எவ்வாறு பிரதிஷ்டை செய்யவேண்டும் என்று கூறியுள்ளார். அது மிகவும் விரிவான பகுதி. அதில் ஆகாசதத்துவத்தில் கோகர்ணம், மஹாபலம், அவிமுக்தம் (காசி) ருத்ரகோடி முதலிய இடங்களை தியானிக்க வேண்டும். வாயு தத்துவத்தில் பீமேச்சுரம், மாஹேந்திரம், விமலேச்சுரம், நகுளேச்சுரம், குருக்ஷேத்திரம், கயை ஆகிய தலங்களை தியானிக்க வேண்டும். தீயாகிய தத்துவத்தில் கேதாரம், மகாகாளம், மத்யமேச்சுரம், ஜல்பேச்சரம் ஆகியவற்றையும் பிற அரிச்சந்திரம், லகுளீச்சுரம் முதலிய தலங்களையும் ஆவஹிக்க வேண்டும் என்று கூறுகிறார். ஆவாஹனம் என்றால் தியானத்தால்; இங்கு எழுந்தருள் என வேண்டுதல். சுருங்கச் சொன்னால், நம் ஊரில் சிவலிங்கத்தைப் பிரதிட்டை செய்யும் போது, எத்தனை புண்ணிய சிவக்ஷேத்திரங்கள் உண்டோ அவை அனைத்தையும் இங்கேயே இருப்பதாக தியானித்தல்தான் பிரதிஷ்டையின் தத்துவம்.

இந்த தத்துவங்கள் எல்லாம் அப்பர் காலத்தில் இருந்தனவா? அப்பர் இந்த கோயில்களை எல்லாம் கூறியிருக்கிறாரா? என்று ஐயம் தோன்றலாம்.

தத்துவங்களைப் பற்றி அப்பர் பெருமான் பல இடங்களில் பாடியுள்ளார். அதேபோல் கயிலாயமலை, காரோணம், கந்தமாதனம், மாகாளம் முதலிய தலங்களையும் பல இடத்தில் பாடுகிறார். கீழ்வரும் அவரது பாடல்களைப் பாருங்கள்.

*உஞ்சேனை மாகாளம் ஊறல் ஒத்தூர்*
*உருத்திரகோடி மறைக்காட்டுள்ளும்*
*மஞ்சார் பொதியன்மலை தஞ்சை வழுவூர்*
*வீரட்டம் மாதானத்துங் கேதாரத்தும்*

*வெஞ்சமாக்கூடல் மீயச்சூர் வைகா*
*வேதீச்சுரம் விவீச்சுரம் ஒற்றியூரும்*
*கஞ்சனூர் கஞ்சாறு பஞ்சாக்கையும்*
*கயிலாய நாதனையே காணலாமே!*

*கந்தமாதனம் கயிலைமலை கேதாரம்*
*காளத்தி கழுக்குன்றம் கண்ணார்அண்ணா*
*மந்தமாம் பொழில்சாரல் வடபர்ப்பதம்*
*மகேந்திரமாமலை நீலம் ஏமகூடம்*
*விந்தமாமாலை வேதம் சையம்மிக்க*
*வியன்பொதியன்மலை மேருஉதயம் அத்தம்*
*இந்துசேகரன் உறையும் மலைக்கண் மற்றும்*
*ஏத்துவோர் இடர்கெட நின்று ஏத்துவோமே*

*நாடகம் ஆடிட நந்திகேசுரம் மாகாளேச்சுரம்*
*நாகேச்சுரம் நாகனேச்சுரம் நன்கான*
*கோடீச்சுரம் கொண்டீச்சுரம் திண்டீச்சுரம்*
*குக்குடேச்சுரம் அக்கீச்சுரம் கூறுங்கால்*
*ஆடகேச்சுரம் அகத்தீச்சுரம், அயனீச்சுரம்,*
*அத்தீச்சுரம் சித்திச்சுரம் அந்தண்கானல்*
*ஈடுதிரை இராமேச்சுரம் என்றென்று ஏத்தி*
*இறைவனுறை சுரம் பலவும் ஏத்துவோமே.*

என்று பாடுகிறார். எங்கு சிவபெருமான் உறைகிறாரோ அதுதான் கயிலாயம். எல்லாத் தலங்களும் அதுவே. ஆதலின் உங்கள் ஊரிலேயே, சிற்றூராயினும் சரி, பேரூராயினும் சரி, சிவாலயம் இருக்குமானால் அங்கு கயிலாய நாதன் திகழ்கிறார் என்னும் மகத்தான சிவநெறியைக் கூறுகிறார் அப்பர் பெருமான். எவ்வூராயினும் அங்கு க்ஷேத்திரக் கோவையைப் படியுங்கள். அத்தனை புண்ணியச் க்ஷேத்திரமும் இங்கேயே உள்ளன. கயிலாய நாதனைக் காணலாம் என்பதுதான் நமது சிறப்பு.



# 31. ஆடினாய்

தில்லைச் சிற்றம்பலக்கூத்தனை ஞானக்குழந்தை

*"கற்றாங்கு எரிஓம்பி கலியைவாறாமே*
*செற்றார் வாழ்தில்லை"*

என்ற பதிகத்தால் பாடிப்பரவி திருவேட்களம் சென்று தொழுது மீண்டும் தில்லைப் பதியை அடைந்து

"ஆடினாய் நறுநெய்யோடு பால்தயிர்" என்ற அத்புதப் பதிகம் பாடினார். இப்பதிகத்தில் ஒருசிறப்பும் உண்டு எனச் சேக்கிழார் பெருமான் கூறுகிறார். தில்லை நான்மறையோர்களைக் கண்ட போது அவர்கள் சிவகணங்களாகவே அவருக்கு கண்ணில் பட்டனர். அந்நிலை எல்லாம் கூடுமாறு கோத்து அவர் தொழுகின்ற சிற்றம்பலம் என இப்பதிகப்பாடல் ஒன்றில் சம்பந்தர் பாடினார் என சேக்கிழார் கூறுகிறார்

"ஆடினாய் நறுநெய்யோடு பால்தயிர் என்று
எடுத்து ஆர்வத்தால்
பாடினார். பின்னும் அப்பதிகத்தினில் பரவிய
பாட்டொன்றில்
நீடுவாழ் தில்லை நான்மறையோர் தமை
கண்டஅந் நிலையெல்லாம்
கூடுமாறுகோத்து அவர் தொழுதேத்து
சிற்றம்பலம் எனக்கூறி"

என்பது சேக்கிழார் வாக்கு

அப்பாடல் எது?

சிவக்கவிமணி ஊ.ம. சுப்ரமணிய முதலியார் அவர்கள்.

ஆடினாய் என்று தொடங்கும் பதிகத்தில் "நீலத்தார் கரிய மிடற்றார் நல்ல நெற்றிமேல் உற்ற கண்ணினார்"

என்னும் பாடலே அது என்பதை சுட்டிக்காட்டியுள்ளார்.

*சீலத்தார்தொழும் சிற்றம்பலம் சேர்தலால்*
*கழல் சேவடி கைதொழ*

எனவருவதால் இதுவே அப்பாடல் என்பார். இது பொருத்தமாகவும் உள்ளது.

இப்பதிகப் பாடல்கள் பெரும்பாலானவற்றில் தில்லை அந்தணர்களை, சம்பந்தர் பாடுகிறார். அந்தணர் பிரியாத சிற்றம்பலம் (1), மறையோர் தில்லை நல்லவர் பிரியாச் சிற்றம்பலம் (2) சீலத்தார் தொழுதேத்தும் சிற்றம்பலம் (3) காளையர் காதலால் கழல் சேவடி தொழ அம்பலத்துறைவன் (4) தில்லையார் தொழுதேத்தும் சிற்றம்பலம் (5) என்று பாடிச் செல்பவர் ஒவ்வொரு பாடலிலும் தில்லையைப்பாடி, உயர் தமிழால் உயர்ந்தான் தில்லை என்று கூறுகிறார். ஆதலின் இப்பதிகம் முழுவதும் தில்லையின் சிறப்பையும் தில்லைவாழந்தனர்தம் சிறப்பையும் தொகுத்துப்பாடியுள்ளார்.

தேவாரப் பதிகங்களின் ஒவ்வொரு பதிகத்திற்கும் ஒரு கட்டுக்கோப்பு உண்டு. அக்கட்டுக்கோப்பு பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலுமே காணலாம். எடுத்துக்காட்டாக சம்பந்தப்பெருமான், மயேந்திரப் பள்ளி பதிகத்தில் ஒவ்வொரு பதிகத்திலும் 'பணிமினே' 'பணிமினே; பணிந்து உய்மினே என்று முடிப்பார். இது பதிக மரபுவழி. ஒவ்வொரு பதிகத்தும் ஒரு தனித்தன்மை உண்டு. அதன்படி பார்க்கும்போது ஆடினாய் என்னும் பதிகத்தில் சம்பந்தப்பெருமான் ஒவ்வொரு பாடலிலும் சிவபெருமானை முன்னிலைப்படுத்திப் பாடுவதைக் காணலாம். ஆடினாய், நாடினாய், நயந்தவனே, பாடினாய், சூடினாய் என்று முதல் பாடலில் கூறுகிறார். எருதேறினாய், பட்டமே புனைவாய், உறைவாய் என இரண்டாம் பாடலில் கூறுவார். அணிகொன்றையாய், அங்கையாய், பகவா, பண்டரங்கா, என அடுத்தபாட்டிலும் குழையாய், வேதியா, விகிர்தா ஆதியாய் என்று அடுத்தபாடலிலும் இவ்வாறு பரமனை முன்னிலையாக வைத்தே பாடுகிறா . ஆதலின் இப்பதிகத்தில் பாட்டுக்கள் அனைத்திலும் சிவபெருமானை சம்பந்தர் முன்னிலையாகவே பாடியுள்ளார் எனலாம்.

இப்பின்னணியில் நீலத்தார் கரியமிடற்றாய் என்னும் பாடலைப் பார்ப்போம்.

*நீலத்தார் கரியமிடற்றார் நெற்றிமேலுற்ற*
*கண்ணினார் பற்று சூலத்தார்*
*சுடலைப்பொடி நீறணிவார், சடையார்*
*சீலத்தார் தொழுதேத்தும் சிற்றம்பலம் சேர்தலால்*
*கழல் சேவடி கைதொழ*
*கோலத்தாய் அருளாய் உன் காரணம் கூறுதுமே*

இப்பாடலில் முதலிரண்டு அடிகளும் சிவபெருமானையே குறிக்கின்றன என்பதில் ஐயமில்லை.

சிவக்கவிமணி அவர்கள் முதலிரண்டு அடிகளும், தில்லை வாழந்தணர்கள் சிவகணங்களாகத் தோன்றியதைக் குறிக்கும் எனப் பொருள் கொள்கிறார்.

நீலத்தார் கரியமிடற்றார் எனத்தொடங்கி உயர்ந்தார் என்றவரை பதிகத்தில் பல பாட்டினுள்ளும் கூறியவை எல்லாம் கூடுமாறு பொருந்தி ஒரு சேரஅறியும்படி கோத்து தொடுத்து, கோவை செய்து அவர் தொழுது ஏத்து சிற்றம்பலம், அடியவர்களால் ஆண்டவர் பெருமை கூறி விளக்கியபடி"

என்று பொருள் குறித்துள்ளார். (திருஞானசம்பந்தர், புராணம் பக்கம் 205)

ஆனால் ... கருத்தமிடறு, நெற்றிமேல் கண், கரத்தில் சூலம், சுடலைப்பொடி, இவையுடையவர் சிவபெருமானன்றோ ஆதலில் இப்பாடலின் முதலிரு அடிகளும் சிவபிரானையே குறிக்கின்றன என்பதில் ஐயமில்லை இவ்விரு அடிகளிலும் சிவபெருமானை முன்னிலைப் படுத்தியே சம்பந்தர் பாடியுள்ளார் எனக் கொண்டால் பதிகத்தின் தனித்தன்மை தெளிவுறும். ஆதலின் இவ்விருஅடிகளையும் "நீலத்தாய் கரிய மிடற்றாய், நெற்றிமேல் உற்ற கண்ணினாய் பற்று சூலத்தாய் சுடலைப்பொடி நீறணிவாய் சடையாய்"

என்று மூலப்பிரதியில் இருந்திருக்குமோ என்று ஐயம் எழுகிறது. சம்பந்தர் பாடியபோது இவ்வாறு இருந்து பின்னர் மாற்றம் அடைந்திருக்கலாம் எனக்கருத இடமுண்டு.

அதேபோன்று அடுத்தபாடலிலும், இரண்டாவது அடியில் "சடையான்" என்பது சடையாய் என்றும் நான்காம் வரியில் 'அம்பலத்துறைவார்' என்பது "அம்பலத்துறைவாய்" என்றும் இருத்தல் வேண்டும் என்று தோன்றுகிறது. இவ்விரு தேவாரப் பாடல்களை திருத்தி பாடினால் மரபும் பொருளும் சிறக்கும் எனத் தோன்றுகிறது.



# 32. ஸேநாபதிகள்

பெருமாள் கோயில்களில் விஷ்வக்சேனர் என்று ஒரு தெய்வம் உண்டு. விஷ்ணுவுக்கு எந்தெந்த அம்சங்கள் உண்டோ அவை எல்லாம் இவருக்கும் உண்டு. சங்கம் சக்கரம், கதை, அபய ஹஸ்தங்களுடன் அமர்ந்த நிலையில் காணப் படும். இவர் எல்லா திருமால் கோயில்களிலும் இருப்பார். இவருக்கு ஸேநாபதி, ஸேனை முதலி என்ற பெயர்கள் உண்டு. விஷ்ணுவின் அம்சமாக இவரை வணங்குகின்றோம். பெருமாள்கோயிலின் அதிகாரி இவரே. பண்டைய காலங்களில் பெருமாள்கோயிலுக்குக் கொடுக்கப்படும் கொடைகள் எல்லாம் இவர் பெயராலேயே வழங்கப்படும். பெருமாள் கோயில்களுக்கு வாங்கப்படும் நிலங்கள், பிற சொத்துக்கள் எல்லாம் ஸோநாபதி பெருவிலை என்ற பெயரில் வாங்கப்பட்டன என்று கல்வெட்டுகளில் காண்கிறோம். சுருங்கச்சொன்னால் சிவாலயங்களில் சண்டிகேச்வரர் எவ்வாறு விளங்குகிறாரோ அதேபோன்ற நிலையை பெருமாள் கோயில்களில் வகிப்பவர் ஸேநாபதி என்னும் விஷ்வக்சேனர்.



சண்டீச்வர பிரசாதம்

சேய்ஞலூ பிள்ளையான ஸ்ரீ சண்டிகேச்வரரின் வரலாறு நமக்குத் தெரியும்.

*'வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினால்*
*எறிந்த அம்மையான் அடிச்சண்டிப்*
*பெருமானுக்கு அடியேன்"*

என்பார் சுந்தமூர்த்தி சுவாமிகள். அவரது தீவிரபக்தியை மெச்சி அவருக்கு சிவபெருமாள் சண்டீசபதம் அளித்ததாக சைவ வரலாறு கூறும். இதை தமது திருத்தொண்டர் புராணத்தில் சேக்கிழார் பின்வருமாறு கூறுகிறார்.

*"அண்டர் பிரானும் தொண்டர்தமக்கு அதிபனாக்கி அனைத்துநாம்*
*உண்டகலமும் உடுப்பனவும் சூடுவனவும் உனக்காக*
*சண்டீசனுமாம் பதம் தந்தோம் என்றவர் பொற்றடமுடிக்கு*
*துண்டமதிசேர் சடைக்கொன்றைமாலை வாங்கிச்சூட்டினார்"*

உப மன்யு பக்தவிலாசம் என்னும் சம்ஸ்கிருத நூலும் பெரிய புராணச் செய்யுளை அப்படியே மொழிபெயர்த்துத் தருகிறது.

***ததோ தயாநிதி:தோர்ப்யாம்***
***ஆக்லிஷ்ய அங்கானி பாணினா***
***பராம்ருச்ய சிரஸ் தஸ்ய***
***பபந்த ஆத்மனஸ்ரஜம்***
***மஹ்யம் நிவேதிதம் யத்யத்***
***தத்தத் துப்யம் ததாமி அஹம்***
***வஸன அசன தாம்பூல***
***கந்தாதி இத்யுவாச தம்***

என்ற செய்யுட்கள் சேக்கிழார் பெரியபுராணத்தின் நேர்மொழி பெயர்ப்பு.

இவ்விரண்டிலும் சண்டேச்வரர் சிவபெருமானின் சேனைத் தலைவர் என்ற கருத்து கூறப்பெறவில்லை. இருப்பினும் சிவாலயங்களில் சண்டேச்வரருக்கும் ஸேநாபதி என்ற பெயா சோழர் காலத்தில் வழங்கியது என்று கல்வெட்டுமூலம் அறிகிறோம். தஞ்சை மாவட்டம் கும்பகோணம் வட்டம திருவிசலூர் கிராமத்தில் உள்ள சிவயோகநாதசுவாமி கோயில் இருக்கிறது. இக்கோயிலில் உளள ஒரு கல்வெட்டில்தான அப்பெயா காணப்படுகிறது. அககலவெட்டு வேறுயாருடைய கல்வெட்டும் அல்ல! சோழப்பேரரசன முதலாம் ராஜராஜனுடையதுதான். இராஜராஜனே இந்தக் கோயிலுக்கு வந்து இந்தத் தெய்வத்தின் முன்னே துலாபாரம் செய்தான். அப்பொழுது

அவன் தேவி லோகமஹாதேவி இங்கு 'ஹிரண்யகர்ப்பம்' என்னும் யஜும் புரிந்து 458 பொற்காசுகள் இக்கோயிலுக்குக் கொடுத்தாள்.

இக்காசுகளை இவ்வூர் சபையினர் பெற்றுக்கொண்டு தினந்தோறும் அக்கார அடிசில் அமுது நைவேத்யம் செய்ய ஒப்புக்கொண்டனர். இதைக் குறிக்கும் "நாங்கள் இக்கோயிலில் இருந்து இந்தப்பணத்தை வட்டிக்கு பெற்றுக்கொண்டு, இவ்வமுது நாள்தொறும் செய்விக்கிறோம்" என்று சபையினர் எழுதிக்கொடுத்தனர். இதைக் கல்வெட்டில் "இத்திருவிசலூர் மகாதேவர் ஸேநாபதிகள் மூலபிருத்யரான சண்டேச்வரதேவர் பக்கல் மஹாசபையோம் கொண்டகாசு" என்று குறித்துள்ளனர். இதிலிருந்து சண்டிகேச்வரரை சேநாபதி என்று அழைக்கும் மரபு சோழர்காலத்தில் இருந்தது என்று அறிகிறோம்.

பெருமாள் கோயிலில் விஷ்வக்சேனர் சேநாபதி. சிவாலயத்தில் சண்டிகேச்வரர் சேநாபதி.



# 33. கசம்

'கசம்' என்று தமிழில் ஒரு சொல் உண்டு. நீர், நீர்நிலை, ஆழம், தாமரை என்று பல பொருள்களில் வரும் இச்சொல்லுக்கு ஒன்றுக்கு ஒன்று நேர் முரணான பொருளும் உண்டு. "பெருமை" "கீழ்மை" என்ற இருபொருளும் இச்சொல்லுக்கு உண்டு. இதுவன்றி "மென்மை" "இளமை" "கேடு" "குறைபாடு" "யானை" "தேய்வு" என்ற பொருள்கள் எல்லாம் உண்டு. "கசம்" எனில் "நீர்" என்ற பொருளைப் பிங்கலந்தை கூறுகிறது. இந்தப் பொருளில் 'கசம்' என்ற சொல் பயன்படுத்தப் பட்டிருக்கிறதா என்று பார்த்தேன். 12-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டில் இவ்வாறு பயன் பட்டுள்ளதைக் கண்டேன்.

**கல்வெட்டில்**

"இந்நிலத்துக்கு பாயக்கடவ கசம் பண்டோடு பழநடை நீர் பாயப் பெறுவதாகவும்" என்று உள்ளதைக் கண்டேன். வடஆர்க்காடு மாவட்டம், குடியாத்தம் வட்டம், திருவல்லம் கிராமத்தில் ஓர் இடிந்த கோயிலில் இக்கல்வெட்டு உள்ளது. விக்கிரம சோழன் காலத்துக் கல்வெட்டு இது. இக் கல்வெட்டிலிருந்துதான் எவ்வளவு செய்திகளை அறிய முடிகிறது!

திருவல்லத்தின் ஒரு பகுதியாக இருந்த அப்பகுதிக்குத் திருச்சிற்றம்பலபுரம் என்று பெயர். கல்வெட்டு காணப் பெறும் கோயிலிலுறையும் பரமனுக்கு அகத்தீச்வரர் என்று பெயர். அக்கோயிலுக்கு ஊர்ச்சபையார். ஒரு நிலத்தை விற்றுக் கொடுத்தனர். வரிகள் எல்லாம் நீக்கி நிலத்தை விற்றுக் கொடுத்தனர். இதைக் குறிப்பது தான் இந்தக் கல்வெட்டு. இதைக் கூறுமிடத்தில் "திருவகத்தீஸ்வரம் உடைய மகாதேவர் கோயிலில் ஆதிதாஸன் சண்டேச்வரதேவற்கு நாங்கள் இறை இழிச்சி விற்றுக் கொடுத்த நிலமாவது" என்று உள்ளது.

சிவாலயங்களுக்கு நிலம் விற்றாலும் வாங்கினாலும், பரம்பொருளான பரமனின் பெயரால் செய்வதில்லை. இதுஒரு தத்துவம், எங்கும் நிறைந்து எல்லாமாகி விளங்கும் பரமன் எதை வாங்குவது எதை விற்பது? ஆதலின் அனைத்துக் காரியங்களும் அடியானாகிய சண்டேசனின் பெயரால்தான் செய்யப்படும், சண்டேச்வரரை

'ஆதிதாஸர்" எனக் கல்வெட்டு கூறுகிறது. சிவபெருமானின் "அடியார்க்கும் அடியேன்" என்று நம்மைக் கூறிக்கொள்வது நமது மரபு. சிவனடியார்களில் எல்லாம் தலையாய அடியான் சண்டிகேச்வரர், அதனால்தான் அவர்க்குச் சிவாலயங்களில் சிறு ஆலயம் இன்றியமையாததாய்க் காணப்படுகிறது. பஞ்ச மூர்த்திகளில் ஒருவராக அவர் இடம் பெறுகிறார். ஆதலின் அவர் ஆதிதாஸன் அதாவது "முதல் அடியான்" என்று அழைக்கப்பெற்றார். அவர் பெயரால் கோயிலுக்கு நிலம் விற்றுக் கொடுக்கப்பட்டது.

இந்நிலத்துக்கு எல்லைகளைக் குறிக்கும் போது, "நிலத்தில் தரணிவிச்சாதரி கசம் சாலா போகத்துக்கும் மடுக்குழிக்கும் தன் கிடையே பண்டோடி பழநடை நீர்பாயப் பெறுவதாகவும்" என்று ஒரு சொற்றொடர் உள்ளது. இதில் கசம் என்ற சொல் நீர்நிலை என்ற பொருளில் வந்துள்ளது. "தரணி விச்சாதரி கசம்" என்பது அதன் பெயர். அதிலிருந்து நீர் முன்னர் எப்படிப் பாய்ந்து இந்நிலத்துக்கு வந்ததோ, அப்படியே நிலத்தை விற்றபின்னரும் பாயவேண்டும் என்பது பொருள்.

அக்காலங்களில் நிலங்கள் மீது பல வரிகள் உண்டு. இந்நிலத்தை வரிகளைநீக்கிக் கோயிலுக்கு விற்றனர். ஆதலின் எந்தவரியும் வசூலிக்கக் கூடாது என்று இக்கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது. அதைக் கீழ் வருமாறு கூறுகிறது.

"இந்நிலத்துக்கு நீர்விலை அந்தராயக்காசு என்றும் அவாந்திரம், உப்புக்காசு என்றும் வெட்டி, அமஞ்சி, எச்சோறு, கூற்றுநெல் என்றும் எப்பேர்பட்டன கடவனல்லானாகவும்". இவை எல்லாம் பல்வேறு வரிவகைகள். இவை கழிக்கப் பட்டன.

"இந்நிலத்தில் வேண்டின பயிர் செய்து கொள்ளப் பெறுவானாகவும் குழிப்பின் குழித்தும் உசர்த்தின் உசர்த்தியும் கொள்ளப் பெறுவானாகவும். இந்நிலத்துக்கு வந்த இறையெல்லாம் நாங்களே இறுக்கக் கடவோமாகவும்" என்றும் எழுதப் பட்டுள்ளது. கல்வெட்டுக்கள் எல்லாம் இக்காலத்தில் "பதிவு பத்திரம்" (Registered document) என்கிறோமல்லவா? அவைதாம். ஆதலின் அப்பத்திரங்களில் காணப்படும் வாசகங்கள் இவை. இவை சட்டப்படி செல்லுபடியாகும் செய்திகள். இதில் தான் -

"இந்நிலத்துக்கு பாயக்கடவ கசம் பண்டோடு பழநடைநீர் பாயப் பெறுவதாகவும்" என்று நீர் என்ற பொருளிலும் கசம் என்ற சொல் பயன்பட்டுள்ளதைக் கண்டோம். இக் கல்வெட்டிலேயே கசம் என்றால் நீர்நிலை என்ற பொருளிலும் நீர் என்ற பொருளிலுமாக இரண்டு பொருள்களில் பயன்பட்டுள்ளதைக் காண்கிறோம்.

இக் கல்வெட்டில் மற்றும் ஒரு சிறப்பும் உண்டு. ஆவணங்கள் எழுதும் போது சில பிழைகள் ஏற்படலாம். சில எழுத்துக்கள் விட்டுப்போகலாம். கருத்துக்களை சொல்லும் தெளிவில்லாமல் எழுதி விடலாம். சட்டத்தின் போர்வையில் புகுந்து கொண்டு வழக்குகள் வந்தால் இது செல்லுபடியாகாது என்று யாராவது வாதாடலாமல்லவா? அது முடியாது என்று கல்வெட்டு 'ஓலைக்குற்றம் எழுத்துக்குற்றம், சொல் பிழையென்று சொல்லப் பெறாதோமாகவும்" என்று கூறுகிறது.

இவற்றிலிருந்து 'கசம்' போன்ற சொற்களை எப்படிப் பயன் படுத்தியிருக்கிறார்கள் என்பதும், சட்டப்படி செல்லுபடியாகும் வண்ணம் ஆவணங்களைக் கவனத்துடன் எழுதியிருக்கிறார்கள் என்பதும், தெரியாது ஏற்பட்ட பிழைகளைக்காட்டி சட்டத்தை ஏமாற்ற இயலாது என்பதும் தெளிவாகின்றன. அந்த அளவுக்குச் சமுதாயம் முன்னேறி இருந்தது என அறிகிறோம்.



# 34. புவனம் யாவினுக்கும் கண் ஆவான்

அண்மைக்காலம் வரையில், சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளாக, தமிழகக்கோயில்களில், குறிப்பாக சிவாலயங்களில், மகாபாரதம் வாசிக்கப்பட்டு வந்தது. ஊர்களில் மகாபாரதம் வாசிக்கத் தனிமான்யங்களே நிறைந்து இருந்தன. மாபாரதத்தின் தலைவர்களாகத் தோன்றும். கண்ணனும், அர்ச்சுனனும், பசுபதியைப் போற்றி பெரும்பேறு அடைந்ததாக மகாபாரதம் கூறும். பசுபதியை வணங்குவோர் பாசுபதர்கள். கண்ணனும் அர்ச்சுனனும் பாசுபதர்களிலே மிகச் சிறந்தோர்களாக மகாபாரதமும் புராணங்களும் கூறுகின்றன.

தமிழில் மகாபாரதத்தை வடித்தவர்களில் வில்லிபுத்தூரார் சிறந்தவர், அவரது வில்லிபாரதத்தில் அர்ச்சுனன் தவம்புரிந்து பாசுபதாஸ்திரம், பெற்றது ஒரு சருக்கத்தில் இடம் பெறுகிறது. அங்கு அர்ச்சுனன் பாசுபத விரதம் மேற்கொண்டு கடும் தவம் மேற்கொண்டதும் சிவபெருமான் கிராதனாகத் தோன்றிப் போரிட்டு, இறுதியில் அவனுக்குப் பாசுபதாஸ்திரம் கொடுத்ததும் இடம் பெறுகின்றன.

அவ்விடத்தில் இரண்டு பாடல்களைப் பார்ப்போம். அர்ச்சுனன் அகோரத் தவம் புரிகிறான். அவனை அசையாத கல் எனக் கருதி யானைகள் தங்கள் உடலை அவன்மீது தேய்த்துக் கொள்கின்றவாம். அவனைச் சுற்றிக்கரையான் புற்றுக்கள் தோன்றுகின்றன. அவற்றில் பாம்புகள் ஊர்கின்றன. இது ஒருமரம் என இவனைச் சுற்றி கொடிகள் வளர்கின்றனவாம். வெயில், மழை, பனி எனக் கருதாது இவன் புரியும் தவத்திற்கு ஈடாக, வேறு யாருடைய தவத்தைக் கூற முடியும் என்கிறார் வில்லிபுத்தூரார்.

*"கருந்துருகல் எனக்கருதிபிடியும் கன்றும்*
*களிற்றினமும் உடன் உரிஞ்ச கறையான்ஏறி*
*பொருந்துமுழை புற்றது எனப் புயங்கம் ஊர*
*பூங்கொடிகள் மரன் என்றுபாங்கே சுற்ற*
*பரிந்து வெயில்நாள், மழைநாள், பனிநாள், என்று*
*பாராமல் நெடுங்காலம் பயின்றான் மண்ணில்*
*அருந்தவம் முன்புரிந்தோரில் இவனைப்போல் மற்று*
*ஆர்புரிந்தார் சிவசிவ என்றறியவாறே"*

சிவனை நோக்கிப்புரிந்த தவமல்லவா பாடலை "சிவசிவ" என்று முடித்துள்ள பாங்கே அழகு.

அரச்சனனின் கடுந்தவத்தைக் கண்ட சூரியன், கோடையிலும் நிலவென குளிர்ந்து விளங்கினானாம். ஏன் தெரியுமா. சூரியன் உலகு முழுவதற்கும் கண்போன்றவன் அவனது "கண் நோக்கம்" என்றால் அது கருணை அன்றோ! என்கிறார் வில்லி.

*"பண்ணுக்கு வம்பரித்தேர் ஆதபனும்,*
*பணித்து பசுபதியை நோக்கி*
*மண்ணுக்குத் தவம் செய்யும் தனஞ்சயற்கு*
*கோடையினும் மதியம் போன்றான்*
*எண்ணுக்கு வரும் புவனம் யாவினுக்கும்*
*கண்ஆவான் இவனே அன்றே!*
*கண்ணுக்குப் புனைமணிப் பூண் கண்ணோட்டம்*
*என்பதெல்லாம் கருணை அன்றோ"*

இங்கு இரண்டு கருத்துகள் காணுதல் வேண்டும். சூரியன் உலகங்களுக்கெல்லாம் கண்போன்றவன் என்பது ஒன்று. இரண்டாவது அவன் கருணையே வடிவானவன் என்பது. சூரியனை ஸவிதா என்றும் வணங்குகிறோம். அவன் தேவர்களையும் மனிதர்களையும் விழிப்புறச் செய்கிறான். பல் தொழில்களிலும் ஈடுபடச் செய்கிறான். அவனே இவ்வுலகு முழுவதும் கண்ணோக்கால் அருள் பாவிப்பவன்" என்பது வேதம்.

***"ஆஸத்யேன ரஜஸா வர்த்தமானோ நிவேஸயன்***
***அம்ருதம் மர்த்யம்ச ஹிரண்மயேன ஸவிதா ரதேன***
***ஆதேவோ யாதி புவனானி பஸ்யன்"***

புவனங்களைப் பார்த்துக்கொண்டு பொன் மயமான தேரில் ஸவிதா வருகிறான் என்கிறது வேதம். புவனானி பஸ்யன் என்ற வேதத் தொடரை வில்லிபுத்தூராரும் புவனம் யாவினுக்கும் கண் ஆவான்" என்று கொடுத்துள்ளதைக் காண்கிறோம். சூரியபகவானுடைய பார்வை கருணையே வடிவானது என்பது இரண்டாவது கருத்தல்லவா. வேதங்களிலும் மகா பாரதத்திலும், புராணங்களிலும், 'கருணைவடிவு' என்பது சிவபெருமானே எனக் காணலாம். ஆதலின் இங்கு சூரியன் சிவபெருமானே என்பது கருத்து.

சைவமரபுக்கு இன்றியமையாத வேதப்பகுதி ஸ்ரீ ருத்ரம் என்பதாம். ருத்ரம் சிவபெருமானைப் போற்றுகிறது. அதில் ஏழாவது, எட்டாவது மந்திரங்கள் சூரியனைப் போற்றும் முகத்தால் சிவபெருமானைப் போற்றுகின்றன.

*"அஸௌ ய: தாம்ர: அருண உத பப்ரு: சுமங்கல:"*

என்று அது சூரியனைப் போற்றுகிறது ஸ்ரீ ருத்ரத்துக்கு உரை எழுதிய பட்ட பாஸ்கரர், "அகிலகர்ம சாக்ஷி பகவான்" எல்லாச் செயல்களையும் காண்பவனாகிய சூரியனே பகவானாகிய சிவபெருமான். அவர் குறித்தது இத் தோத்திரம். என்று கூறுகிறார். அனைத்துலகுக்கும் கண்ணாக விளங்குபவன் சூரியன். அவனே கருணைவடிவானவன். அவனே சிவபெருமான், என்ற வேதக்கருத்தையே வில்லிப்புத்தூராரும் தமது பாடலில் கொடுத்துள்ளார். அதுவும் பாசுபதவிரதம் மேற்கொண்ட அர்ச்சுனனுக்குக் கருணை வடிவாகிய சிவபெருமான் அருள்பாலிக்கத் தோன்றுமிடத்தில் இப்பாடல் உள்ளது சிறப்பாம்.

இங்கு மற்றொன்றும் குறிக்கலாம். திருவள்ளுவர் தமது திருக்குறளில் "கண்ணோட்டம்" என ஓர் அத்தியாயமே வைத்துள்ளார். கண்ணோட்டம் என்பதற்கு உரை எழுதிய மணக்குடவரும் பரிப்பெருமாளும் "கண்ணோட்டமாவது கண்ணால் காணப்பட்டாரை அருள் செய்தல்" என்று குறிப்பர். பரிதியார் தமது உரையில் "கண்ணோட்டமாவது அரசர்க்கு கிருபையாகிய பார்வை வேண்டும் என்றது" என்பார். அருள்கிருபை என்னும் பொருளில் கண்ணோட்டம் என்ற சொல் குறளில் வந்துள்ளதைக் காண்கிறோம்.

அதுமட்டுமா கீழ்வரும் குறளைக் காணுங்கள்.

*"கண்ணிற்கு அணிகலன் கண்ணோட்டம் அஃதின்றேல்*
*புண் என்று உணரப் படும்"*

என்பது அக்குறள், கண்ணுக்கு அணிகலன் கண்ணோட்டம் என்கிறதல்லவா குறள்? இதையே தான் வில்லிபுத்தூரார் சூரியனைப் பாடிய செய்யுளில் "கண்ணுக்கு புனை மணிப் பூண் கண்ணோட்டம்" என்று கூறியுள்ளார். குறளுக்கு விளக்கம் கூறுவார் போல அது "கருணை அன்றோ" என்றும் கூறுகிறார்.

சூரியன் புவனங்கட்கு எல்லாம் கண் ஆவான். அவன் புவனங்களை "கண்ணோட்டம்" புரிகிறான். அவன் சிவனே அன்றி வேறில்லை. அதுவே அவன் அருளும் கருணை எனக் கூறுகிறார். வேதமாகிய நான்மறையும் குறளாகிய தமிழ் மறையும் எதைக் கூறினவோ, அதே கருத்துக்களைத் தமது பாரதத்துக்கு கருப்பொருளாக கொள்கிறார் வில்லிபுத்தூரார்.



# 35. வறுமையிலும் தெய்வத்தை மறவா 'தேசிகக் குருக்கள்'

நம் கிராமப்புறங்களுக்குச் சென்று 'குருக்கள் ஐயா எங்கிருக்கிறார்?' என்று கேட்டால் அவ்வூரில் பூஜை செய்கிற சிவாச்சாரியாரை காட்டுவார்கள். குருக்கள் என்றால் பொதுவாக சிவாச்சாரியாரைக் குறிக்கும். அவர்களுக்கு ஏன் குருக்கள் என்று பெயர் வந்தது? என்று பார்ப்பதற்கு முன்பு ஒரு செய்தி...

ஒரு காலத்தில் இவர்கள் இந்நாட்டையே ஆண்டவர்களாகத் திகழ்ந்திருக்கின்றனர். அதுவும் சோழப் பேரரசர்கள் ஆண்டபோது, இவர்கள் ஆணைப்படி ஆட்சியே நடந்து இருக்கிறது. ஒரு வியப்பு தரும் நிகழ்ச்சி கி.பி. 1172ல் இரண்டாம் ராஜாதிராஜன் என்பவன் ஆண்டபோது நடந்தது.

இலங்கை அரசன் தமிழகத்தின் மீது படையெடுத்தான். அவனது படைத்தலைவன் ஜயத்ரத தண்ட நாயகன். அவன் தமிழகத்தில் வந்து இறங்கி மதுரைப் பாண்டிய மன்னன் குலசேகர பாண்டியனைத் தோற்கடித்து சோழநாட்டில் நுழைந்தான். சோழநாட்டு மக்கள் பீதியுற்று கலங்கினர்.

போர் கடுமையாக இருந்ததால் சோழர் படை தோற்றுவிடுமோ என்ற பயம் கவ்விக் கொண்டது.

அப்பொழுது, காஞ்சிபுரத்துக்கருகில் சோழனுக்கு கீழ்ப்படிந்த, எதிரிலி சோழச்சம்புவராயன் என்பவன் அங்கிருந்த ராஜகுருவான சுவாமித்தேவர் என்பவரை அணுகி சோழநாட்டுக்கு ஏற்பட்டுள்ள அபாயத்தைக் கூறினான்.

சுவாமித்தேவர் ஏதாவது ஜபம், ஹோமம், அர்ச்சனை செய்து சோழநாட்டைக் காக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டான். அவரும், "நானும் இலங்கை படையெடுப்பைப் பற்றிக் கேள்விப் பட்டுள்ளேன். அவர்கள் ராமேஸ்வரத்துக்குள் புகுந்து கோயில் சொத்தையெல்லாம் சூறையாடி பூஜைகளையும் நிறுத்தி, சிவத்துரோஹம் செய்தனர். நான் அவர்கள் அழிய 28 நாட்கள் அகோர

பூஜை இப்பொழுதே மேற்கொள்கிறேன்" என்று கூறி அகோர பூஜை ஒரு மண்டலம் மேற்கொண்டார்.

அப்பூஜை முடிவதற்குள் சோழ சேனாபதி பல்லவரையரிடமிருந்து செய்தி வந்தது. இலங்கைப் படை முறியடிக்கப்பட்டுவிட்டது. ஜயத்ரத தண்டநாயகனும் மற்ற சேனைத் தலைவர்கள் எல்லாரும் போரில் அழிக்கப்பட்டனர். இலங்கைப் படை தமிழகத்தை விட்டு சிதறி ஓடிவிட்டது என்று வந்த செய்திகளோடு சம்புவராயர் சுவாமி தேவரிடம் ஓடிவந்தார். அவருக்கு ஆர்ப்பக்கம் என்ற ஊரை நன்றிப் பெருக்கோடு கொடுத்தார். அதை அவர் அவ்வூர்க்கோயில் வழிபாட்டுக்காக வைத்தார் என்று அவ்வூரில் உள்ள கல்வெட்டுக் கூறுகிறது. இது உண்மையில் நடைபெற்ற நிகழ்ச்சி.

இந்த சுவாமித் தேவர் என்பவர் வங்காள சேதத்திலிருந்து வந்தவர். காங்கூலி என்ற மரபைச் சேர்ந்தவர். சிவாச்சாரியர் உமாபதி சிவம் என்பது இவர் பெயர். இவர் தமிழகத்தில் தங்கி ராஜகுருவாகி சோழநாட்டையே பெரும் ஆபத்திலிருந்து காப்பாற்றியிருக்கிறார். இவர்கள் போன்ற சிவாச்சாரியார்களைப் பற்றி பல செய்திகள் வரலாற்றில் கிடைக்கின்றன. சிவாச்சாரியர்களின் தோற்றத்தைப் பற்றி பல ஆகமங்கள் விளக்குகின்றன.

பரமனாகிய சிவபெருமானே தோற்றுவித்ததுதான் சைவம். சைவ மார்க்கத்தில் ஒருவர் தாமே சிவ பூஜை செய்வதை 'ஆத்மார்த்த பூஜை' என்று சொல்வார்கள். கோயில்களில் செய்யப்படும் பூஜை பிறருக்காக செய்யப்படுவது. இதை 'பரார்த்த பூஜை' என்று சொல்வார்கள். எந்த பூஜையாக இருந்தாலும் தீட்சை பெற்றவர்கள் தாம் சிவபூஜை செய்ய முடியும்.

'சிவதீட்சை' என்பது குறிப்பிட்ட ஒழுக்கங்கள் கட்டுப்பாடுகள், கல்வி, தகுதி முதலிய பெற்று சிவபூஜை மரபுகளை அறிந்து, அதன்படி பூஜை செய்ய அதிகாரம் பெறுவதாகும். தெய்வத்தை வழிபடும்போது தெய்வநிலைக்கு பரிசுத்தமான நிலைக்குத் தம்மை உயர்த்திக் கொண்டுதான் செய்ய வேண்டும். அப்போதுதான் தெய்வம் வெளிப்படும் என்பது நம்பிக்கை.

தாய் வயிற்றில் பிறப்பது ஒரு பிறப்பு. தெய்வ நிலைக்கு தம்மை மாற்றிக் கொள்வது இரண்டாவது பிறப்பு. இந்த இரண்டாவது பிறப்புத்தான் தீட்சை. இவ்வாறு தீட்சை பெற்றவன் தான் கோயில்களில் வழிபாடு செய்யத் தகுந்தவனாகிறான்.

சிவபெருமான் சைவத்தை தோற்றுவித்தார். அவர் சில முனிவர்களுக்கு சிவதீட்சை செய்து வைத்தார். காச்யபர், கவுசிகர்,

பாரத்வாஜர், கவுதமர் என்ற அந்த நான்கு முனிவர்களும் சிவபெருமானிடத்திலேயே சிவதீட்சை பெற்றதால் சிவபெருமான் அவர்களிடத்தில் உறைகிறார் என்பது கருத்து.

அம்முனிவர்கள் வழியில் பிறந்தவர்கள்தான் சிவாச்சார்யார்கள் என்பது, ஆகமங்கள் கூறும் மரபு. அதனால் சிவாச்சாரியார்களை 'ஆதிசைவர்' என்று கூறுவர். இவர்கள் தான் கோயில்களில் வழிபாடு செய்யும் யோக்கியதை பெற்றவர்கள்.

இவர்கள் சாதி வேறுபாடின்றி அனைத்து சாதியினாக்கும் சிவதீட்சை செய்து வைக்கும் தகுதி பெற்றிருந்தனர். செய்தும் வைத்துள்ளனர்.

இவர்கள் நான்கு வேதங்களையும், படித்தவர்களாகவும் பிறரிடத்தில் தயை உள்ளவர்களாகவும் திகழ்ந்தனர் என்றும், தவவலிமை மிக்கவர்களாகவும் விளங்கினர் என்றும் வரலாற்றில் இருந்து அறிகிறோம். ஆதலால் மக்கள் இவர்களிடத்தில் மரியாதையுடனும், அன்புடனும் பழகினர். அக்காலத்து மன்னர்கள் எல்லாம் இவர்களைத் தங்களது ராஜகுருவாக ஏற்றுப் போற்றினர்.

முதலாம் ராஜராஜ சோழனுக்கு முன்னர் சோழநாட்டில் வித்யாந்தசிவர் என்ற ஒரு சிவாச்சாரியர் இருந்தார். அவரது சிறப்புகளைக் கேட்டு காசி தேசத்து மன்னன் அவரைத் தமது குருவாக ஏற்றுக் கொண்டு, அங்கு வரவழைத்துச் சிறப்பு செய்திருக்கிறான். அவர் சொற்படி கேட்டு நாட்டை ஆண்டிருக்கிறான் என வரலாற்றில் இருந்து அறிகிறோம்.

இராஜராஜசோழனும், இராஜேந்திர சோழனும் கோதாவரிக் கரையிலிருந்த சில சிவாச்சாரியார்களின் சிறப்பைக் கேட்டு அவர்களை வரவழைத்து தங்கள் குருவாக ஏற்று அவர்கள் ஆணைப்படி நடந்து இருக்கின்றனர். இந்திய நாடு முழுவதும் ஏன் ஆப்கானிஸ்தானத்தி லிருந்து கடல் கடந்த நாடுகளிலும் இவர்களது சிறப்புப் போற்றப்பட்டது.

திண்டிவனத்துக்கு அருகில் ஏசாலம் என்ற இடத்தில் அண்மைக் காலத்தில் கிடைத்த ஒரு செப்பேடு ராஜேந்திர சோழனின் ராஜகுருவைப் பற்றி பல செய்திகளை நமக்கு தருகிறது. சர்வசிவர் என்று பெயர் பெற்ற இவர் அனைத்து ஆகமங்களையும் கரைகண்டவர். உலகம் முழுவதும் ஆள்கின்ற ராஜேந்திரனுக்கே குருவென்றால் இவர் பெருமையை சொல்லவும் வேண்டுமோ?

மாற்றரசர்கள் அனைவரும் இவரை தலையால் வணங்குகின்றனர். அவர்களது கிரீடங்களெல்லாம் இவரது காலுக்கு மாலையாக விளங்கின. இவர் அறிஞர்களுக்கெல்லாம் அறிஞர். ஏழைகளுக்கு ஏராளமாக அள்ளி வழங்கியவர். இவரை சிவபெருமானே என்று ஆன்றோர் போற்றுகின்றனர்.

சோழநாட்டு மக்கள் எல்லாம் இவரை, 'இந்நாட்டை காக்கும் சக்தியே இவர்தான் என்று கருதுகின்றனர்,' என்று ராஜேந்திர சோழனே கூறியுள்ளான். இவர்தான் ஏசாலம் கோயிலை கட்டி வைத்தவர். தஞ்சை பெரிய கோயிலில் ஆச்சாரியராக இருந்தவரும் இவரே. ராஜேந்திரன் இவரைத் தன் ஞானத்தந்தையாக ஏற்றுக் கொண்டிருக்கிறான்.

அக்காலத்தில் ராஜகுருக்கள் அரசனுக்கு மந்திரித்து காப்பு அணிவிப்பார்கள். ராஜரட்சை, ராஜநீராஜனம், ராஜ்யாபிஷேகம் என்று ஆண்டுதோறும் வழிபாடு செய்து அரசனுக்கு சிறப்புச் செய்வார்கள். இவை எல்லாம் நாட்டுக்கு நலிவு ஏற்படும்போது, குழப்பம் ஏற்படும்போது, கலகம் ஏற்படும்போது காப்பாற்றுவதற்காக செய்யப்படுபவை. அரசனை எப்படிப்பட்ட ஆபத்துக்களிலிருந்தும் காப்பாற்றும் என்று நம்பினர். சோழச் சக்கரவர்த்திகளின் ஆணைகளுக்கும் மேற்பட்டதாக சிவாச்சாரியார்கள் இட்ட ஆணை இருந்ததும் விளங்கும்.

இதன் பின்னணியில் மற்றுமொரு வரலாற்றுச் செய்தியை பார்க்கலாம். கோயில்களில் வழிபாடு செய்யும் முறையைப் பற்றி நல்ல நூல் ஒன்றை அகோரசிவாச்சாரியார் என்பவர் எழுதியுள்ளார். அந்நூல் கி.பி.1158ல் இரண்டாம் ராஜராஜசோழ மன்னன் காலத்தில் எழுதப்பட்டது. கடந்த 800 ஆண்டுகளுக்கும் மேலாக அந்நூலைத்தான் இன்றும் பெரும்பாலான தமிழ் கோயில்களில் பின்பற்றுகிறார்கள்.

அந்நூலில் பல ராஜகுருக்களைப் பற்றி வரலாற்றுச் செய்திகள் உள்ளன. இருவரைப் பற்றி அவர் குறிப்பிட்டுள்ள செய்திகள் சிறப்பாக உள்ளன.

கவுடதேசத்திலிருந்து (இன்றைய வங்காளம்) சிரீகண்ட சிவர் என்ற சிவாச்சாரியர் ஒருவர் சிதம்பரத்துக்கு நடராஜப் பெருமானை வழிபட வந்தார். அவரது கல்வி கேள்விகளைக் கேட்ட விக்கிரம சோழன் அவரைத் தனது ராஜகுருவாக அமர்த்திக்கொண்டு அவர் சொற்படி நடந்து வந்தான். மேலும் ராஜகுருவானவர் ஆணைப்படி அரசன் நடந்தான் என்றும் கூறப்படுகிறது. தன் நாட்டையே அவருக்கு அர்ப்பணிப்பது மரபு. இதை 'காப்பு மறம்' என சங்க நூல்கள் கூறுகின்றன.

பெருஞ்சேரல் இரும்பொறை என்ற சேரப் பெருமன்னன் அரிசில் கிழாருக்கு தனது அரசு கட்டிலையே கொடுக்க அவர், 'யான் இரப்ப, இதனை நீ ஆள்க' வெனத் திருப்பிக் கொடுத்தார் என்றும் அவனுக்கு அமைச்சராக இருந்தார் என்றும் பதிற்றுப் பத்து கூறுகிறது.

ஊர்ப்புறங்கள் தோறும் சிவாச்சாரியார்கள் அனைத்துச் சாதியினருக்கும் சிவதீட்சை கொடுத்து தவ வாழ்வு மேற்கொண்டு கோயில்களில்

வழிபாடு செய்து வந்ததால் தான் அவர்களை மக்கள் அன்போடு 'குருக்கள்' என்று அழைத்துப் போற்றினர்.

அரசர்களுக்கும், நாட்டிற்கும் குருக்களாக திகழ்ந்தனர். ஆதலின் எந்தக் கிராமத்துக்கும் சென்று 'குருக்கள் ஐயா' எங்கே? என்றால் சிவாச்சாரியாரை காண்பிக்கிறார்கள். இவர்கள் 95 சதவிகிதம் இன்று வறுமைக்கோட்டுக்கு கீழ் இருந்தபோதிலும் தங்கள் தெய்வத் தொண்டை விட்டுவிடவில்லை.

தஞ்சையில் அண்மையில் கும்பாபிஷேகம் நடைபெற்றபோது இவர்கள் ஆற்றிய தொண்டை தமிழகம் மறந்துவிடாது. யாகசாலையில் எதிர்பாராது பெரும் தீவிபத்து நேர்ந்தபோது தீ எங்கும் சூழ்ந்தது. அனைவரும் விழுந்தடித்து தமது உயிரைக் காப்பாற்ற ஓடினர். வீழ்ந்தனர் சிலர். செய்வது என்னவென்று தெரியாது திகைத்தனர் சிலர்.

யாகசாலையில் இருநூறுக்கும் மேற்பட்ட சிவாச்சாரியார்கள் இருந்தனர். அத்துணை பேரும் தாங்கள் ஆவஹித்து வைத்திருந்த தெய்வக் கலசங்களை எடுத்துக் கொண்டு மார்போடு மார்பாக அணைத்துக் கொண்டு கோயிலுக்குள் ஓடி அவற்றைக் காப்பாற்றினர்.

தங்கள் உயிரைப் பற்றி அவர்கள் நினைக்கவில்லை. தாங்கள் வழிபடும் மூர்த்தங்களைக் காப்பாற்றினர். கிராமம் கிராமமாக இருக்கும் இவர்களது குடும்பங்கள் சிறந்தால் நாடு சிறப்பாக இருக்கும் என்பது வரலாறு கூறும் நம்பிக்கை ஆகும்.



தெய்வம் மறவா தேசிகர்

# 36. புண்ணிய கயாவில் கிருஷ்ணதேவராயர் பெற்ற முக்தி

நமது நாட்டை ஆண்ட அரசர்களில் ஈடு இணையற்ற மன்னர்களாக ஆண்டவர் பலர் உண்டு. அவர்களில் கி.பி. 1509ல் இருந்து 1529வரை தமிழ்நாட்டையும், ஆந்திர தேசத்தையும், கர்நாடக தேசத்தையும் ஆண்ட மாபெரும் சக்ரவர்த்தி விஜயநகர சாம்ராஜ்ய பேரரசர் கிருஷ்ணதேவராயர் ஆவார். அவர் எங்கும் வெற்றி, எதிலும் வெற்றி என்று வெற்றிமேல் வெற்றியைக் குவித்தவர். இலக்கியத் துறையிலும், இசைத்துறையிலும், நாட்டியத்துறையிலும் கலைத்துறையிலும், கட்டடத்துறையிலும் இமயச் சிகரம்போல் நிற்பவர். ஹம்பி, காளத்தி, காஞ்சியில் வரதராஜர் கோயில், ஏகாம்பரநாதர் கோயில், திருவண்ணாமலைக் கோயில், சிதம்பரம் நடராஜர் கோயில் ஆகிய கோயில்களில் வானளாவி நிற்கும் கோபுரங்களைக் கட்டியவர். இவரால் தான் கோபுரங்கள் மிக மிக உயரமாகக் கட்டப்பட்டன. உயரத்தில் இவரது கோபுரங்களை விஞ்சும் கோபுரங்கள் ஏதுமில்லை. இவர் கிருஷ்ணதேவராயர் என்பதால் இவர் எடுத்த கோபுரங்கள் எல்லாம் 'ராயகோபுரம்' என்றே அழைக்கப்பட்டன. இவர் பக்திப்பெருக்கினால் பல கோயில்களுக்கும் செய்திருக்கும் பணி நம்மை வியப்பில் ஆழ்த்தும். இந்து சமயத்தின் ஒவ்வொரு தர்மத்தையும் பின்பற்றிய இம் மாமன்னர் ஓர் அற்புதச் செயல் புரிந்திருக்கிறார்.

இந்துக்கள் எப் பகுதியை சார்ந்தவர்களாயிருப்பினும், காசி, கயை ஆகிய புண்ணியத் தீர்த்தங்களுக்குச் சென்று வரும் மரபு உண்டு. கயைக்கு செல்பவர்கள், குறிப்பாக மகாளய அமாவாசையின்போது தமது இறந்து பட்ட முன்னோர்களுக்கு 'சிரார்த்தம்' செய்வதைப் பெரும் புண்ணியமாகக் கருதுவர். அந்நாளில் மட்டும் மல்ல. கயைக்கு எந்தநாளில் சென்றாலும் அங்கு சிரார்த்தம் செய்யலாம். இதனால் தம் குலமே மோக்ஷம் பெறும் என இந்துக்களின் அசையாத நம்பிக்கை. தாங்கள் செல்லாவிட்டாலும் செல்பவர்கள் மூலமாக இதைச் செய்யச் சொல்லும் மரபும் உண்டு.

மாமன்னராகிய கிருஷ்ணதேவராயர் கயாவுக்குத் தீர்த்தயாத்திரை மேற்கொண்டு சென்று வந்திருக்கிறார். அதன் நினைவாக அங்கு ஒரு

கல்வெட்டை எழுதிவைத்து வந்திருக்கிறார். அந்தக் கல்வெட்டு இன்றும் கயாவில் இருக்கிறது. பில்கு நதிக்கு செல்லும் வழியில் கேதார கட்டத்தில் (துறையில்) விஷ்ணுபாதக் கோயிலின் பிராகாரச் சுவரில் புதைத்து வைக்கப் பட்டுள்ளது. தெலுங்கு மொழியில் - தெலுங்கு லிபியில் இந்தக் கல்வெட்டு எழுதப்பட்டுள்ளது. சக வருடம் 1444-க்கு சமமான விஷு வருஷம், ஆஷாட மாதம் (ஆடி) பஹுளதிரயோதசியும் செவ்வாய்க்கிழமையும் ஆன அன்று அதாவது, கி.பி. 1521 ஆம் வருஷம் ஜூலை மாதம் 2 ஆம் தேதி இது நிறுவப்பட்டிருக்கிறது. இதை 'விஜய சாஸனம்' என்று கல்வெட்டு கூறுகிறது.

கல்வெட்டு அவரை "ராஜாதிராஜ ராஜபரமேச்வர, வீரபிரதாப வீர கிருஷ்ணதேவ மஹாராயர்" என்று கூறுகிறது. இவர் ஈஸ்வர நரச நாயக்கரின் புதல்வர் என்றும், திருமலா தேவியின் கணவர் என்றும் கூறுகிறது. இக்கல்வெட்டில் இதைக் கூறும் சுலோகம், கிருஷ்ண தேவராயரின் அரச அவையை அலங்கரித்த சிறந்த கவி, நந்தி திம்மண்ணா என்பவரால் எழுதப்பட்டது. அந்தக் கவி 'பாரி ஜாதாபஹரணம்' என்ற நூலை இயற்றியுள்ளார். அந்த நூலில் இந்த் சுலோகம் காணப்படுகிறது. அதே சுலோகம் இந்தக் கல்வெட்டிலும் காணப்படுவது சிறப்பு. அதுமட்டுமா! இந்தக் கல்வெட்டையே அந்த நந்தி திம்மண்ணாதான் இயற்றினார் என்று கல்வெட்டின் இறுதியில் காணப்படுகிறது. இந்தக் கல்வெட்டின் கீழே எட்டுக் கரங்களை உடைய மகிஷாசுரமர்த்தினியின் சிற்பமும் இருக்கிறது. இந்தக் கல்வெட்டு வாசகத்தைக் கீழே அப்படியே பார்க்கலாம்.

"சுவஸ்தி ஸ்ரீவி ஜயாப்யுதைய சாலிவாகன சக வருஷம் 1444 அகு நெண்டி, விஷு ஸம்வத்ஸர, ஆஷாட பகுள 13 ம, ஸ்ரீமன் மஹாராராஜாதிராஜ, ராஜபரமேஸ்வர, வீரப்ரதாப, வீரகிருஷ்ண தேவ மஹாராயலு, வேம்சின விஜயசாஸனமு. திருமலாதேவி வல்லப கருணாமய ஹிருதய ராஜகண்டீரவ ஈஸ்வர நரஸ பூபுரந்தர வர நந்தன. பாஷ தப்புவர கண்டாம்க; ஈ சாஸனமு முக்கு திம்மய்ய வ ராஸேனு" - என்று உள்ளது. (நந்தி திம்மண்ணாவுக்கு, முக்கு திம்மய்ய என்று மறுபெயரும் உண்டு.

கிருஷ்ணதேவராயர் கயாவுக்கு சென்று வந்திருக்கிறார் என்று எண்ணும்போதே எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறது? ஆந்திராவைத் தாண்டி, ஒரிஸாவைத் தாண்டி, உத்திரபிரதேசம், பீஹார் வரை சென்று வந்திருக்கிறார். அங்கெல்லாம் இவர் ஆட்சியில்லை. இருந்தாலும் இந்துவாக, தான் விளங்கிய சமயதர்மத்துக்கு ஏற்ப சென்று வந்திருக்கிறார்.

கிருஷ்ணதேவராயர் மட்டுமல்ல; கிருஷ்ண தேவராயருக்குப் பின் விஜயநகர சாம்ராஜ்யத்துக்கு அவர் தம்பி அச்சுதராயர், அரசரானார். கிருஷ்ணதேவராயர் கயாவுக்குச் சென்று திரும்பிய பத்து ஆண்டுகள் கழித்து கி.பி. 1531ல் கயாவில் அச்சுதராயர் பித்ரு காரியங்கள் செய்ய விரும்பினார். ஆனால் அவர் செல்லவில்லை.

தமக்குப் பதிலாக திம்மண்ணா என்பவரை அனுப்பி தமது மூதாதையருக்கு சிரார்த்தங்கள் செய்திருக்கிறார். இதைக் கயாவில் ஒரு கல்வெட்டில் எழுதியும் வைத்திருக்கிறார். கல்வெட்டில் துர்க்கையின் உருவமும் செதுக்கப்பட்டிருக்கிறது. விஷ்ணுபாதம் கோயிலுக்கு அருகில் உள்ள மகாதேவர் கோயிலின் பிராகாரச்சுவரில் தெலுங்கு மொழியிலும் லிபியிலும் எழுதப்பட்டுள்ள இந்தக் கல்வெட்டு இன்றும் இருக்கிறது.

அச்சுதராயரின் இந்த சாசனத்தில் சில சிறப்பான அம்சங்கள் உள்ளன. இந்த சாசனம் அச்சுதராயரை 'யதுகுல திலகன்' என்றும், 'ஹிந்து ராஜ்ய ஸ்தாபனாசார்யன்' என்றும் கூறுகிறது. கிருஷ்ண தேவராயரும், அச்சுதராயரும் யதுகுலத்தை சேர்ந்தவர்கள். அக்காலத்தில் இஸ்லாமியர் படையெடுப்பால் இந்துசமயமே அழிந்துவிடும் நிலையில் இருந்தது. பல கோயில்கள் இடிக்கப்பட்டன. சிற்பங்கள் சிதைக்கப்பட்டன. இந்த அழிவைத் தடுத்து நிறுத்தத்தான் விஜயநகர சாம்ராஜ்யமே நிறுவப்பட்டது. அதனால்தான் அச்சுதராயர் 'ஹிந்து ராஜ்ய ஸ்தாபனாசார்யர்' என்று இந்தக் கல்வெட்டில் அழைக்கப்பட்டார். இந்த சாசனம் 'தர்ம சாசனம்' என்று அழைக்கப்படுகிறது. நமது சுருதிகளிலும், ஸ்மிருதிகளிலும் கூறியுள்ள முறைப்படி நடப்பது 'தர்மம்' எனப்படும். கயாவில் தமது 'முன்னோர் கடன்' இறுத்தலையே இங்கு 'தர்ம சாசனம்' என்ற சொல்லால் இது கூறுகிறது. அச்சுதராயரின் சார்பில் அவரின் முன்னோருக்காக திம்மண்ணன் இங்கு சிரார்த்தம் செய்திருக்கிறார். அதனால் முன்னோர் முக்தியடைந்தனர் என்றும் இக்கல்வெட்டு 'கயா முக்தி அடைந்தனர்' எனக் காட்டுகிறது.

இந்த சாசனத்தை சற்று உன்னிப்பாகக் கவனித்தால் ஒரு உண்மை புலப்படுகிறது. இதன் இறுதியில், 'விஜயநகரம் ஸிம்ஹாஸன கர்த்த கயா முக்தம் சேஸேனு' என்று உள்ளது. "விஜயநகர சிம்ஹாசன கர்த்தாவுககு கயா முக்தி' என்று கூறுகிறது. கிருஷ்ணதேவராயர் 1529-30 இல் இறந்தார். அவருக்குப் பிறகு அவர் தம்பி அச்சுதர் விஜயநகர சிம்ஹாஸனம் ஏறினார். கிருஷ்ணதேவராயர் இறந்து ஒரு வருஷம் முடிந்ததும் இந்த 'கயாமுக்தி' செய்யப்பட்டு உள்ளது. இதிலிருந்து இது கிருஷ்ணதேவராயருக்காகவே செய்யப்பட்டது என்று தோன்றுகிறது. ஒரு ஒப்பற்ற மன்னர், இந்துசமயத்துக்கே ஈடில்லா தொண்டாற்றிய மன்னருக்கு 'கயாவில் முக்தி' கிட்ட அவர் தம்பி

அச்சுதராயர் செயல் புரிந்திருக்கிறார். அதைக் கல்லிலும் வெட்டி வைத்திருக்கிறார். அந்த சாசனம் 460 வருஷங்களாக இன்றும் கயாவில் இருக்கிறது என்று அறியும் போது, அன்று திகழ்ந்த மன்னர்கள் 'கயா'வின் புனிதத் தன்மையை எவ்வாறு பேணி உய்ந்தனர் என்று தெரிகிறதல்லவா? கயாவுக்கு சென்றால் காணத் தவறாதீர்கள்.



கயையில் கிருஷ்ணதேவராயர் எடுத்த துர்க்கையும் கல்வெட்டு

# 37. இராமலிங்க விலாசம்

சேதுபதி காவலர் சேதுபதி மன்னர்கள் ஆண்ட இராமநாதபுரத்தில் இராமலிங்க விலாசம் என்னும் மாளிகை இருக்கிறது. இம்மாளிகை கி.பீ. 17ஆம் நூற்றாண்டில் எடுக்கப்பட்டது என்பர். சேதுபதி அரசர்கள் ராமேஸ்வரம் தீவைக் காக்கின்ற பொறுப்பை வகித்தவர்கள். அவர்களுக்குச் 'சேதுபதி காவலர்' என்றும் 'சேதுபதி காத்த தேவர்' என்றும் பட்டங்கள் உண்டு.

### இராமலிங்க விலாசம்

இராமேஸ்வரத்துச் சிவபெருமானிடத்து அவர்கள் சிறந்த பக்தி பூண்டவர்கள். அவர்களது குலதெய்வம் போல அக்கோயில் விளங்குகிறது. ஆதலின் அவர்கள் வசித்த இராமநாதபுரம் அரண்மனைக்கு 'இராமலிங்க விலாசம்' என்று பெயர் அளித்து மகிழ்ந்தனர். அந்த இராமலிங்க விலாசத்தில் ஓவியங்கள் தீட்டப்பட்டு இன்றும் எஞ்சியுள்ளன. இங்குள்ள ஓவியங்களைத் தீட்டியவர் யார்



இராமலிங்க விலாசம்

என்பது அண்மைக் காலம் வரையில் தெளிவில்லாமல் இருந்தது. இவை 19ஆம் நூற்றாண்டில் தீட்டப்பட்ட ஓவியங்களாய் இருக்கக் கூடும் என்று சிலர் கருதினர். ஆனால், அண்மையில் தமிழ்நாடு தொல் பொருள் ஆய்வுத் துறை இயக்குநராக இருந்தபோது இந்த ஓவியங்கள் 18ஆம் நூற்றாண்டிலேயே தீட்டப்பட்டவை என்று கண்டுபிடித்தேன்.

## விஜயரகுநாத சேதுபதி

இந்த மாளிகை முழுவதும் முன்னர் ஓவியங்களோடு திகழ்ந்தது. இப்பொழுது உள்ள ஓவியங்கள் மாளிகையின் உட்புறத்தில் உள்ளன. இந்த ஓவியங்களை நான்கு பகுதிகளாகப் பிரித்து அறிந்து கொள்ளலாம். முன்னே இருக்கக் கூடிய பெரிய மண்டபம் போன்ற அறை. அதற்குப் பின் புறத்தே ஓர் இடைக்கட்டு, அதையும் கடந்து உள்ளே சென்றால் அரசர்கள் வாழ்ந்த மாளிகைப் பகுதி அங்கிருந்து மேலே மாடிக்குச் செல்லப்படிகள் இருக்கின்றன. மாடியிலும் ஒரு பெரிய அறை இருக்கிறது. இந்த நான்கு இடங்களிலும் ஓவியங்கள் இப்பொழுதும் எஞ்சியுள்ளன.

இராமநாதபுரத்திலுள்ள இராமலிங்க விலாசத்தில் உள்ள ஓவியங்கள் மிகவும் அதிக அளவில் வரலாற்றுச் சிறப்புமிக்கவையாய் வண்ணங்கள் அழிந்துவிடாமல் பல அரிய செய்திகளை எடுத்துரைப்பவையாய் இன்றும் காணப்படுகின்றன. தமிழகத்தில் இவ்வளவு பெரிய அளவிலே இந்த ஓவியங்கள் இருந்து அவற்றின் பெரும் பகுதி இதுகாறும் சரிவர அறியப்படவில்லை. இப்பொழுது சேதுபதி அரசர் அவர்கள் இந்த அரண்மனை ஓவியங்களை அரசே எடுத்துப் பாதுகாக்கக் கொடுக்க அன்போடு முன்வந்தார்.



முத்து விஜயரகுநாத சேதுபதி இராஜராஜேச் வரியிடம் செங்கோல் பெறுதல்

## ஓவியத்தில் மன்னர்-மக்கள் வாழ்க்கை முறை

சேதுபதி ஓவியங்கள், அன்று ஆண்ட சேதுபதி மன்னரையும் அவருடன் வாழ்ந்த பல வரலாற்று வீரர்களையும், தேவியர்களையும் அவர்களுடைய தனிப்பட்ட வாழ்க்கையின் சில நிகழ்ச்சிகளையும் எடுத்துக்கூறும் வரலாற்று ஓவியங்களாகத் திகழ்கின்றன. ஆதலின் இவை வரலாற்றுக்கு மிக மிக இன்றியமையாதவை. தமிழக ஓவியக்கலையில் தனி இடம் பெறுபவை. நாம் பிறவற்றால் அறிய இயலாத, அன்று வாழ்ந்த மக்களையும் அவர்களது ஆடை அணிகளன்களையும் பிறவற்றையும் அறிந்து கொள்ளப் பேருதவி புரிபவை.

## ஓவியங்கள் கூறும் வரலாற்று செய்தி

இந்த ஓவியங்களில் ஒரு சேதுபதி அரசருடைய உருவம் தொடக்கத்திலிருந்து இறுதிவரை திரும்பத் திரும்ப வரையப் பட்டிருப்பதோடு அவர் பெயரும் எழுதப்பட்டிருக்கிறது. முத்து விஜய ரகுநாத சேதுபதி என்பது அவரது பெயர். சேதுபதி அரசர்களில் பலர் விஜயரகுநாத சேதுபதி என்று பட்டம் பெற்றிருந்தார்கள். ஆகவே, இவர் எந்த விஜயரகுநாத சேதுபதி என்பதில் ஐயம் வரக்கூடும். அந்த ஐயம் உள்ளதால்தான் இந்த ஓவியங்கள் 19 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை என்று முன்னர் கூறினர். ஆனால் இரண்டு வரலாற்று



சேதுபதி வேட்டை ஆடுதல்

நிகழ்ச்சிகள் இந்த ஓவியங்களில் இடம் பெற்றுள்ளன. ஒன்று தஞ்சை மராட்டிய மன்னர் சரபோஜிக்கும், சேதுபதி அரசர் முத்துவிஜயரகுநாத சேதுபதிக்கும் ஒரு போர் நடந்தது. அந்தப்போர்க் காட்சி முழுவதும் ஓவியத்தில் இடம் பெற்றுள்ளது.

இது ஏறககுறைய 1700லிருந்து 1710க்குள் நடைபெற்ற போர் என அறியலாம். அதேபோல உட்பகுதியில் ஓர் ஓவியத்தில் முத்து விஜயரகுநாத சேதுபதி அமர்ந்திருக்கிறார். அவருக்கு மதுரை நாயக்க அரசன் விஜயரங்க சொக்கநாத நாயக்கர் இரத்தினங்களை எடுத்து அவர் தலைமீது தூவி 'இரத்தின பட்டாபிஷேகம்' செய்து வைக்கிறார். இக்காட்சியின் மேல் 'முத்துவிஜய ரகுநாத சேதுபதிக்கு விஜயரங்க சொக்கநாத நாயக்கர் அய்யன் இரத்தின பட்டாபிஷேகம் செய்கிறது என்று எழுதப்பட்டிருக்கிறது. விஜயரங்க சொக்கநாத நாயக்கர் ராணி மங்கம்மாளுக்குப் பிறகு 1706 லிருந்து 1730 வரையில் ஆண்டவர் ஆதலின் அந்தக் காலத்தில் இருந்த விஜயரகுநாத சேதுபதியே இவ்வோவியங்களைத் தீட்டியவர் என்பது தெளிவாகிறது. 1725-ல் இந்த ஓவியங்கள் தீட்டப்பட்டிருக்கக் கூடும்.

இங்கே முன் உள்ள பெரிய மண்டபத்தில் உளளே நுழைந்ததும் இடது புறமுள்ள சுவரில் முதலில் மராட்டிய அரசர் சரபோஜிக்கும் முத்து விஜயரகுநாத சேதுபதிக்கும், நடைபெற்ற போர் இடம் பெற்றுள்ளது. பெரிய யானையின் மீது அமர்ந்து இருவரும் ஒருவரை ஒருவர் எதிர்த்துப் போரிடுகின்றனர் இந்தக் காட்சியில் பீரங்கிகள் ஒவ்வொன்றிற்கும் தனித் தனிப் பெயர் இருந்தது என்பதும் அதன் மேலுள்ள எழுத்துக்களால் விளங்குகிறது.

இதுபோல அடுத்த காட்சியும் இவ்வாறு நடந்த போரையே குறிக்கிறது. இந்தக் காட்சியில் வீரர்கள் நீண்ட குழல் துப்பாக்கிகளைப் பயன்படுத்துகிறார்கள். அவர்கள் அணி வகுத்து வரிசையாக நின்றுகொண்டு துப்பாக்கியால் குறி நோக்குகின்றனர். கீழே ஆங்கிலேயர் ஒருவர் கவுன் போட்டுக்கொண்டு தலையில் தொப்பி வைத்துக்கொண்டு ஒரு பீரங்கியின் முன்னே நின்றுகொணடு பீரங்கியை இயக்குவதைக் காணகிறோம். ஆங்கிலேயர் நம் நாட்டைக் கைப்பற்றுவதற்கு முன்னரே இந்து அரசர்களுடைய படைகளில் அவர்கள கூலி வீரர்களாக ஆயுதம் தாங்கிப் போரிட்டனர் என்று இது உறுதிப் படுத்தும். போர்ச்சுகீசிய வீரர்கள இவவாறு நாயக்கர் படைகளிலே இடம்பெற்றிருநதார்கள் என்று 17ஆம் நூறறாண்டுச சிற்பங்களிலிருந்தே அறிகிறோம். இந்தப் போர்க் காட்சி நிச்சயமாகக் காணத்தகுந்தது.

## சேதுபதி- ஐரோப்பியர் தொடர்பு

அடுத்து, சிறப்பாக அலங்கரிக்கப்பட்ட குதிரையில், விஜயரகுநாத சேதுபதி கையிலே வேல்தரித்துக் கொண்டு வேகமாக வருகின்ற ஒரு காட்சி காணப்படுகிறது. அடுத்த பகுதியில் விஜயரகுநாத சேதுபதியும் அவரது துணைவியும் சிம்மாசனத்தில் அமர்ந்துள்ளனர். அவர்களுக்கு எதிரில் மூன்று ஆங்கிலேயர்கள் அமர்ந்திருக்கின்றனர். அவர்களுடைய தலையிலுள்ள தொப்பியும் அவர்கள் அமர்ந்துள்ள இருக்கைகளும் மேலைநாட்டு நாற்காலிகளாகத் திகழ்கின்றன. அவர்கள் போட்டுள்ள சட்டையும் தொப்பியும் பூட்சும் அவர்கள் ஐரோப்பியர்கள் என்பதைத் தெளிவாகத் தெரிவிக்கின்றன. அரசின் முன்னிலையில் இவர்கள் ஏதோ பேச்சுவார்த்தைகள் நடத்துகிறார்கள் என்பது தெளிவாகத் தெரிகிறது. இந்த உருவங்களைப் பார்த்துவிட்டுத்தான் சிலர் கி.பி. 1805ல் இங்குக் கும்பினியாரின் ஏஜண்டாக வந்த கர்னல் மார்ட்டின்ஸ் என்று இதுகாறும் சுட்டிக்காட்டி வந்தார்கள். ஆனால், இந்த ஓவியங்கள் மார்ட்டின்ஸ் காலத்தை விட முந்தியவை. ஆதலால், இவை 19 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை அல்ல.

## சேதுபதி மன்னர்தம் பக்தி

இதையும் தாண்டிச் சென்றால் சேதுபதி வாழ்ந்த பகுதியை அடைகிறோம். அங்கு நடுவில் உள்ள மேடையில் இன்னும் சேதுபதி அரசர்கள் நவராத்திரி விழாவைச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். இந்தப் பகுதி மிகவும் கவனத்துடன் பலவளைவுகளுடன் எடுக்கப்பட்டது. இங்குப் பக்கச் சுவர்களிலும் மேல்வளைவுகள் முழுவதிலும் ஓவியங்கள் உள்ளன. இங்குள்ள வண்ணங்கள் மங்காமல் பளிச்சென்று நன்கு தெரிகின்றன. இந்த அறையில் உள்ள ஓவியங்களை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரித்துக் கொள்ளலாம். சுவர்களில் உள்ள ஓவியம் இராமனுடைய கதையைச் சித்தரிக்கிறது. இவற்றுள் பெரும்பாலானவை அழிந்தும் மங்கியும் போய்விட்டன.

## சேதுபதிகளும் செங்கோலும்

மேல் வளைவுகளில் முத்துவிஜய ரகுநாத சேதுபதியின் உருவம் பல்வேறு நிலைகளில் காட்டப்பட்டுள்ளது. ஒன்றில் ரகுநாத சேதுபதி தமது குலதெய்வம் ஆன ராஜராஜேஸ்வரி அன்னையரிடமிருநது ஆளும் செங்கோலை பெறுவது போல் காண்பிக்கப்பட்டு உள்ளது. மதுரை அங்கயற் கண்ணியிடமிருந்து செங்கோலை திருமலை நாயக்கர் வாங்கி யானை மீது அமர்த்தி வலம் வந்து அதை அரியணையில் அமர்த்தி அன்னையின் அடியானாகத் தென்னாட்டை ஆண்டதாக அறிகிறோம். ஊஞ்சல் மண்டபம் என்ற அக்கோயிலிலேயே உள்ள ஓர்



கண்ணாடி காணும் கட்டழகி

இடத்தில் ராணி மங்கம்மாள் அங்கயற் கண்ணியிடமிருந்து செங்கோல் வாங்குவது போல் ஓர் ஓவியம் இடம் பெற்றுள்ளதும் இங்கு நினைவிற் கொள்ளவேண்டும். இது அன்று இருந்த பெரும் மரபு என்பதை இங்கு உள்ள ஓவியம் உறுதிப்படுத்துகிறது. அவ்வாறு சேதுபதி செங்கோல் வாங்குமிடத்து அவர் அணிந்திருக்கிற ஆடை அணிகலன் மொகலாய ஆடையை நினைவுறுத்துகின்றன. அந்த ஆடை பூ வேலைப்பாடு நிரம்பியதாய்க் காணப் படுகிறது. முழுக்கைச் சட்டை அணிந்திருக்கிறார். அதிலும் பூ வேலைப்பாடுகள். அவருக்குப் பின் நல்ல பெரிய சரிந்த கொண்டையோடு மூக்கில் புல்லாக்குத் தரித்து அவரது தேவி நிற்கிறாள். ராஜராஜேஸ்வரி அமர்ந்திருக்கின்ற ஆசனம் ஐரோப்பிய பாணியில் விளங்குகிறது. சேதுபதிக்கு அருகில் நிற்பது அவரது மைந்தனாகக் காணப்படுகிறது. மற்றொரு வளைவில் திருமாலிடமிருந்து சேதுபதி அருள் பெறுவதுபோலக் காட்டப் பட்டுள்ளது.

## மன்னர்தம் மணத்தொடர்பு

இன்னும் ஒரு வளைவில் விஜயரகுநாத சேதுபதி வயதான ஒருவர் முன் அமர்ந்து கொண்டு இராமாயணம் கேட்கிறார். சேதுபதியின் முன்னர் உள்ள ஓலையில் ‘ஸ்ரீராம நீவே கதி’ என்று தெலுங்கு எழுத்தில் எழுதப்பட்டுள்ளது. பெரியவரின் கரத்தில் உள்ள ஓலையில்



நாட்டிய நங்கையர்

'ஸ்ரீராம ஜெயம்' என்று தெலுங்கில் எழுதியுள்ளது. முத்து விஜய ரகுநாத சேதுபதிக்கு இராமாயணம் கேட்பதில் அவ்வளவு ஈடுபாடு என்பது தெரிகிறது. இங்கு ஒன்று நினைவில் கொள்ள வேண்டும். நாயக்க மன்னர்கள் ஆண்ட போது செஞ்சி, தஞ்சை, மதுரை ஆகிய மூன்று இடங்களில் தெலுங்கு செல்வாக்குப் பெற்று இருந்தது. நாயக்கர் தெலுங்கு தேசத்தினர் ஆதலின் அவர்களது வீட்டு வழக்கில் தெலுங்கு சிறப்பிடம் பெற்றிருந்தது. பல தெலுங்குக் காப்பியங்கள் இயற்றப் பட்டன. சேதுபதி மன்னர்கள் மறவர் குலத்து வந்தவர்கள் ஆயினும் தெலுங்கு மொழி பேசும் நாயக்க மன்னருடன் மணவினை செய்து கொண்டனர். ஆதலின், தெலுங்குக் கலப்பு அவர்களிடையேயும் பரவியது என்பதில் ஐயமில்லை. ஆதலின், இங்கு சேதுபதி தெலுங்கில் இராமாயணம் கேட்பது சித்தரிக்கப்பட்டுள்ளது.

மற்றொரு தொடர்பையும் இங்குக் குறிக்க வேண்டும். தஞ்சை மன்னர்களும் மதுரை நாயக்க மன்னர்களும் முதலில் நெருங்கியவர்களாக இருந்தார்கள். தஞ்சை நாயக்கர்கள் இராமேச்சுரம் கோயிலுக்குப் பல பணிகள் புரிந்திருக்கிறார்கள். அவர்களில் அச்சுதப்ப நாயக்கர் இராமேச்சுர நர்த்தன மண்டபம் கட்டியுள்ளார் போல் தோன்றுகிறது. அவரது சிலை உருவம் அங்குள்ளது. அவரது அருமை மைந்தனே விஜயரகுநாத நாயக்கன். தஞ்சையை ஆண்ட நாயக்கர்களில் மிகவும் சிறந்தவன். அவனது ஆற்றலும் வீரமுமே சேதுபதி

மன்னர்களுக்குத் தொடர்ந்து ரகுநாத சேதுபதி என்னும் பெயரைக் கொடுத்தது என்றால் மிகையாகாது.

## ஸ்ரீராமஜெயம்

தஞ்சை ரகுநாதநாயக்கன் இராமாயணத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவன். எப்பொழுதும் ராமகதையைக் கேட்டுக் கொண்டே இருப்பானாம்.

அவனுக்குச் சரியாக நூறு ஆண்டுகளுக்குப் பிறகு இங்கு உள்ள ஓவியத்தைத் தீட்டிய விஜய ரகுநாத சேதுபதி வாழ்ந்தார். அவரும் ராம கதை கேட்பதில் தனக்கிருந்த ஆர்வத்தை வெளிப்படுத்தியுள்ளதோடு அதே சொற்றொடரை உபயோகித்து உள்ளதை இந்தக் கருத்து எந்த அளவுக்கு மேலோங்கி நின்றது எனத் தெளிய உதவும்.

## அலங்காரப்பிரியர் விஜயரகுநாத சேதுபதி

இந்த முத்து விஜயரகுநாத சேதுபதி அலங்காரம் செய்து கொள்வதில் மிகவும் விருப்பம் உடையவர்போல் இங்குள்ள ஓவியங்களில் ஒவ்வொரு வளைவிலும் தன்னை ஒவவொரு விதமாக அலங்கரித்துக் கொண்டு காட்சியளிக்கிறார். மொகலாயர் ஆடையும், அணியும், தலை முடியும் பூண்டு அமர்ந்து கொண்டு ஆடல் காண்பதாக உள்ளது ஒரு காட்சி.

மற்றும் ஓர் இடத்தில் சேதுபதி அரசர் தன் தேவியோடு அமர்ந்து இருப்பது காணப்படுகிறது. அதில் அவரது பெயரும் தேவியின் பெயரும் தெலுங்கில் எழுதப்பட்டுள்ளன. மற்றொரு காட்சி சேதுபதி தன்னை மன்மதன் போல் அலங்கரித்துக் கொண்டு கரும்பு வில்லேந்தி கிளியின் மீதமர்ந்து எதிரே இரதி போல் அலங்கரித்து அன்னத்தின் மீதமர்ந்து வரும் தன் தேவியுடன் மலர்க் கணைகளால் போர்தொடுப்பதுபோல், உள்ள காட்சி உண்மையில் மிகச்சிறந்த ஓவியம் என்பதில் ஐயமில்லை. இக்காட்சியில் நல்ல ஒரு விறுவிறுப்பு இருக்கிறது. கருதது இருக்கிறது. மலாக் கணைகளை ஒட்டி வண்டுகள் உள்ளன. மன்மதன் இரதியாக இவர்கள திகழ்கிறார்கள எனபதை மேலும் சிறக்கச் செய்கிறது. அனனத்தின் மீதும் கிளி மீதும அமர்ந்துள்ள இவ்விருவரது தோற்றமும் கம்பீரமாகத் திகழ்கிறது. நல்ல கணகவா ஓவியம்.

## சேதுபதிக்கு ஐரோப்பியர் சல்யூட்

மற்றொரு காட்சியில் சேதுபதி அமர்ந்து இருக்கிறார். அவருக்குப் பின் இருவீரர்கள் கத்தி தாங்கி நிற்கிறார்கள். அவர்களுககு எதிரில் இரண்டு ஐரோப்பியர் சேதுபதியை வணஙகுகிறார்கள். முதலில் நிற்கும்



சேதுபதிக்கு ஐரோப்பியர் செல்யூட்

ஐரோப்பியன் தனது தொப்பியைக் கையில் கழற்றிப் பிடித்துக்கொண்டு தலைகுனிந்து ஐரோப்பிய முறையில் வணங்குகிறான். மற்றும் ஒருவன் சேதுபதிக்குத் தட்டில் ஏதோ திறை ஏந்தி கொணர்ந்து நிற்கிறான். இக்காட்சி மிகவும் சிறப்பு மிக்க காட்சி.

1800க்குப் பிறகு ஆங்கிலேயக் கும்பினியர்கள் இப்பகுதியைத் தங்களது ஆட்சிக் குள்ளாக்கி சேதுபதி அரசர்களைத் தங்களின் சிற்றரசர்களாக நடத்தினர். அப்பொழுதுதான் கர்னல் மார்டின் என்பவர் இராமநாதபுரத்துக்கு வந்து கும்பினி யாருக்காக ஆண்டான். ஆதலின், அந்நிலையில் ஐரோப்பியர் சேதுபதிக்கு வணங்குவதுபோல படத்தில் போடக்கூடிய சூழ்நிலை இல்லை. சேதுபதி அரசர்கள் இன்னும் கம்பெனியாரின் ஆட்சிக்குள் வராத தனிப்பேரரசு ஆண்ட காலத்தில் இவ்வோவியங்கள் வரையப்பட்டன என்பதை இக்காட்சியும் வலியுறுத்தும். இவை கி.பி. 1710-1730க்குள் வரையப்பட்டிருக்கும் என முன்பே கண்டோம்.

**மன்னர் தம் பள்ளியறை**

ஓர் ஓரத்தே உள்ள படிகளின் வழியாக மாடிக்கு வருகிறோம். மாடி என்பதைக் காட்டிலும் சேதுபதி மன்னரின் பள்ளி அறைக்கு வருகிறோம் என்பதே பொருந்தும். ஆம். இம்மாடி அறை அவர் தன் தேவியுடன்

துயில் கொள்ளும் அறை என்பதில் ஐயமில்லை. அதைச் சான்று கூறுவதாக உள்ளன இங்குள்ள ஓவியங்கள். ஒவ்வொரு ஓவியமும் மிகப் பெரிய அளவில் தீட்டப்பட்டுள்ளன. சுமார் (6 அடி) 2 மீட்டர் உயரத்துக்கும் மேல் உள்ள இவற்றில் சில ஓவியங்கள் மறைந்துவிட்டன. ஆயினும், பெரும்பகுதி நல்ல நிலையில் உள்ளன. இங்குள்ள காட்சி ஒவ்வொன்றும் ஒரு கருத்தில் அமைக்கப்பட்டதாகும்.



திருமால் அடியார் சேதுபதி

**மன்னர்கள்**

தமிழ்நாட்டில் 1700ல் மன்னர்கள் எப்படியெல்லாம் வாழ்ந்திருக்கிறார்கள் என்று இதன்மூலம் அறியலாம். இந்தியாவின் வடபால் இமயமலை அடிப்பகுதியில் சில அரசர்களின் அரண்மனை களில் ஓவியங்கள் உள்ளன என்று அறிவோம். அங்கும் அரசர்களின் வாழ்க்கைகள் காட்சிகளாக இடம் பெற்றுள்ளதைப் பார்க்கும்போது, அரண்மனைகளில் ஓவியங்களைத் தீட்டுவது ஒரு மரபாகத் திகழ்ந்தது போலும்! அக்காலத்தில் ஓவியக் கலைஞர்கள் ஓரிடத்திலிருந்து மறு இடத்திற்கு இப்பணிக்காகச் சென்றிருக்கிறார்கள் அல்லது அந்தக் கருத்துக்கள் பரவியிருக்கின்றன.

## மொகலாயர் தெலுங்கர் கலை

மொகலாய அரசர்கள் கலையில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்கள். அவர்களது அவையில் புகழ்மிகு ஓவியர்கள் திகழ்ந்தார்கள் என்று அறிவோம். 17-ஆம் நூற்றாண்டின் இறுதியில் குறிப்பாக ஔரங்கசீப் ஆட்சியில் கலைக்கு அரசியல் செல்வாக்கு இல்லாததால் தக்காணத்துக்குப் பெரும்பாலான கலைஞர் சென்றனர் என்பர் வரலாற்றாசிரியர். அந்தத் தொடர்பு, நாயக்கர் அரண்மனைகளிலும் ஏற்பட்டிருக்கிறது. மொகலாய ஆடை அணியும் முறை அதாவது உள்பகுதி தெரியும் வகையில் மெல்லிய துகிலைப் பாவாடை போல் ஆண்களும் பெண்களும் அணிவது தெற்கே இராமநாதபுரம் அரண்மனைக்கும் வந்துள்ளது. அதுபோல் பெண்கள் தலையில் அணியும் அணிகலன்களும், மொகலாயப் பெண்களே ஆடுவது போன்ற காட்சிகளும், மொகலாய ஓவியங்களில் காணப்படும் கட்டடங்களின் அமைப்பும், இந்தக் கலைத்தொடர்பு, கலாசாரத் தொடர்பு அல்லது இணைப்பு ஏற்பட்டுள்ளது என்பதைக் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன.

இந்த ஓவியங்களில் தெலுங்கு நாட்டுப் பண்புகளும், மொகலாயர் பாங்கும் இங்கும் அங்குமாகத் தென்படுகிறது என்றால் தெலுங்குத் தொடர்பு ஒவவொரு காட்சியிலும் இடம் பெற்றுள்ளது. பெண்கள் தெலுஙகு நாட்டில் ஓவியத்திலும். சிற்பங்களிலும் உள்ளதுபோலக் கொண்டைகள் அணிந்திருக்கிறார்கள். உடைதரித்திருக்கிறார்கள். தெலுங்கு மொழியில் சில இடங்களில் விளக்கம் உள்ளது கண்டோம். பெண்களும் ஆண்களும் ஒல்லியாக இல்லாமல் சதைப் பிடித்த சற்று குண்டான வடிவங்களாகச் சித்தரிக்கப்பட்டுள்ளனர். இந்த ஓவியர்களுக்கு கால்களையும் பல்வேறு நிலைகளில் வரையத் தெரியவில்லை. பக்க வாட்டில் நிற்பது போலவே திரும்பத் திரும்ப வரைகிறார்கள். எனினும் ஆடைகள் எவ்வளவு வகையான பூ வேலைப்பாட்டோடு இருந்தன என்று இங்கு காணலாம். குறிப்பாகப் பெண்கள் அணியும் புடவைகளில் எத்தனை வகைகள், எத்தனை வேலைப்பாடு, எத்தனை வண்ணங்கள்! புடவை உற்பத்தி செய்வோர்கள் இங்கு வந்தார்களானால் பெரும் விருந்தே காத்திருககிறது. நாட்டியத்தைப் பற்றி அறியவும் இன்ன பிற கலாச்சாரப் பணபுகள் பற்றி அறியவும் இராமநாதபுர ஓவியங்கள் ஒரு கருவூலம். இவற்றைத் தீட்டி அருந்தொண்டாற்றிய முத்துவிஜய ரகுநாத சேதுபதியைப் பாராட்டாமல் இருக்க முடியாது.

இந்த அரும் மாளிகையை, அண்மையில் காலஞ்சென்ற இராமநாத புரம் இராஜா ஸ்ரீ. இராமநாத சேதுபதி அவர்கள், மனமுவந்து



கும்பிடும் குழலியர்

அளித்துள்ளார்கள். அவர்களது பெரும் பண்பும், அருந் தொண்டும் அளவிடற்கரியது. இங்கு சேதுபதி அரசர்கள் தமிழகத்துக்கு செய்த தொண்டினை எடுத்தியம்பும் அருங்காட்சியகம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. இது தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையால் பாதுகாக்கப்பட்டு பராமரிக்கப்படும் வரலாற்றுச் சின்னம்.



# 38. தமிழ் இசை

இந்திய நாடு சில ஆயிரம் ஆண்டுகளாகவே இசைத்துறையிலும், நாட்டியத்திலும் ஈடு இணையற்ற இடம் பெற்றுத் திகழ்கிறது.

வேத காலத்தில் இருந்தே இசையைப் பெரிதும் மதித்து அதற்குத் தனி இடம் கொடுத்து, இசையால் பாடப்படும் வேதம் என ஸாமவேதத்தை வகுத்துள்ளனர்.

பிற்காலத்தில் இந்தியாவின் வெவ்வேறு பகுதிகளில் மலர்ந்த ராகங்கள் அந்தந்த தேசங்களின் பெயர் கொண்டு திகழ்ந்தன.

கௌட தேசத்தின் பெயரால் 'கௌளை' என்னும் ராகமும், சௌராஷ்டிர தேசத்தின் பெயரால் 'சௌராஷ்டிரம்' என்னும் ராகமும், காந்தாரம், விராடம், கூர்ஜ்ஜரம் என்றெல்லாம் அந்தந்தப் பகுதிகளின் பெயரால் ராகங்கள் உள்ளன.

இவை ஒவ்வொன்றும் ஒரு தனிப்பட்ட ராகங்களாக உள்ளன.

இந்தியாவின் வட பகுதியில் உள்ள இசையை மொத்தமாக ஒரு பெயரால் அழைக்க வேண்டும் என்றால் அதை "ஹிந்துஸ்தானி சங்கீதம்" என்றுதான் அழைக்கிறோம்.

அந்தப் பெயரிலிருந்தே ஓர் உண்மை புலப்படும். கி.பி.12ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு இந்தியாவில் இஸ்லாமியத் தாக்கம் அதிகம் ஏற்பட்டது. அதனால் அராபிய இசை, பாரசீக இசை இவற்றின் தாக்கத்தால் இந்திய இசை பெரிதும் பாதிக்கப்பட்டது.

அந்த தாக்கத்தால் மருவித் திகழ்வதே இன்றைய இந்துஸ்தானி சங்கீதம். இதைப் பண்டைய இந்தியச் சங்கீதத்தின் மாற்று வடிவம் என்று சொல்லலாம்.

தென் இந்தியாவைப் பொருத்தமட்டில் இரண்டு மரபுகளை நாம் காண்கிறோம்.

ஒன்று தமிழில் தேவாரம் பாடுகின்ற பண்முறை.

மற்றது கர்நாடக இசை.

நாம் இப்போது கர்நாடக இசை என்று சொல்வது முன்னூறு ஆண்டுகளுக்குள்ளாக வரும்மரபையே ஆகும். இந்த இசைக்கு ஒப்பரும் தொண்டாற்றியவர்கள் தியாகராஜ சுவாமிகள், சாமா சாஸ்திரிகள், முத்துசுவாமி தீட்சிதர் ஆகிய சங்கீத மும்மூர்த்திகள் ஆவார்கள். அவர்கள் அதற்கு முன்பு இருந்த தேவார மூவர் இயற்றிய இசைபாடும் மரபையே பின்பற்றி பாடியுள்ளார்கள். இதையே கர்நாடக இசை என்கிறோம்.

இந்த இசை மரபுக்கு இலக்கணக் கட்டுக்கோப்பு வகுத்தவர் 'வேங்கடமகி' என்ற பெரியவர்.

தஞ்சையில் நாயக்கர் ஆட்சியில் அவைக்களைப் புலவராக திகழ்ந்தவர்.

விஜயராகவ நாயக்கர் என்ற மன்னர் காலத்தில் இருந்தவர். அதாவது 1650 ஆம் ஆண்டில் வாழ்ந்தவர்.

அவர் இயற்றிய "சதுர்தண்டிபிரகாசிகை" என்ற நூலில்தான் இன்றைய கர்நாடக இசைக்கு இலக்கணங்களைத் தெளிவாக வகுத்துள்ளார்.

அவர் வகுத்துள்ள மரபுப்படிதான் இன்றைய கர்நாடக இசையைப் பாடுகிறோம்.

அவருக்குப் பின் வந்தவர்கள்தாம் சங்கீத மும்மூர்த்திகளான தியாகய்யர், தீட்சிதர், சாமா சாஸ்திரிகள் ஆவர்.

வேங்கடமகி தமது நூலில் ராகங்களை சுத்தமத்திம ராகங்கள், பிரதி மத்திம ராகங்கள் எனப் பிரிக்கிறார்.

அதோடு சிலவற்றை "மேளகர்த்தா ராகங்கள்", "ஜன்ய ராகங்கள்" என்றும் பிரிக்கிறார்.

இந்த மரபுதான் இன்றைய கர்நாடக இசையின் மரபு ஆகும்.

தேவாரப் பதிகங்களைப் பாடும் மரபை "பண்முறை" என்கிறோம். இதைத்தான் "தமிழ் இசை" என்றும் அழைக்கிறோம்.

தமிழ் நாட்டில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக இசைபாடும் மரபை "பண் பாடுதல்" என்றுதான் கூறியுள்ளனர்.

சங்க இலக்கியங்களிலேயே பண்பாடுவது தான் குறிக்கப்படுகிறது.

"பரிபாடல்" முழுவதும் பண்களில் அமைக்கப்பட்டு இசைக்கப் பட்டன என்பதற்கு அவற்றிலேயே குறிப்புகள் உள்ளன.

சிலப்பதிகாரத்திலும் இதே மரபைக் காண்கிறோம். தேவாரப் பதிகங்களை இயற்றிய சான்றோர்கள் அவற்றை இசைப் பாடல்கள் என்னும் பண்களில் பாடப்படுபவை என்பதையும் குறிப்பர்.

காந்தாரம், இந்தளம், செவ்வழி, குறிஞ்சி முதலிய பண்களை நாயன்மார்களே தங்களது பதிகங்களில் குறிப்பிட்டு இருக்கின்றனர்.

தேவார மூவர் காலத்தில் இருந்தே இப்பதிகங்கள் கோயில்களில் பண்முறையில் பாடப்பட்டு வந்தன. கி.பி.8,9 நூற்றாண்டுக் கல்வெட்டுகளில் இருந்து கோயில்களில் இவற்றைப் பாட இசை வல்லுநர்களை அமர்த்தி இருக்கிறார்கள் என்பதற்கும் சான்றுகள் இருக்கின்றன.

பல்லவ அரசன் நந்திவர்மன், சோழப் பேரரசர்கள் பராந்தகன் முதலியோர் கல்வெட்டுக்கள் இவற்றைத் தெளிவாகக் குறிப்பிடுகின்றன.

முதலாம் இராஜராஜ சோழன் தஞ்சைப் பெருங்கோயிலில் இசை வல்லுநர்கள் 50 பேரை நியமித்தான்.

மறைந்து போன பதிகங்களை நம்பியாண்டார் நம்பியின் உதவியோடு தில்லையில் கண்டுபிடித்தான்.

திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபில் வந்த ஒரு பெண்ணின் உதவியோடு அவற்றின் பண்களை வகுத்தான் என்று வரலாறுகள் கூறுகின்றன.

எனவே இன்று நாம் பாடும் மரபு இராஜராஜன் காலத்தில் இருந்து தொடர்ந்து வரும் இசை மரபு.

அதற்கும் நானூறு ஆண்டுகளுக்கு முன்பிருந்த மரபைத்தான் அவன் வகுத்துக் கொண்டான் என்பதைத் தெரிவிப்பதுதான் திருநீலக்கண்ட யாழ்ப்பாணர் மரபு.

திருஞானசம்பந்தர் பாடல்களைப் பாட, உடன் இருந்து அவற்றை திருநீலகண்ட யாழ்ப்பாணர் தமது யாழில் இசைத்தார் அல்லவா?

அந்த மரபுதான் இந்தப் பண் மரபு.

சங்க காலத்திலிருந்து தேவார மூவர் காலத்திலும் திகழ்ந்து -

இராஜராஜன் காலத்திலும் திகழ்ந்து -

பின்னர் தமிழகமெங்கும் தெய்விக இசையாகத் திகழ்ந்து வந்ததுதான் இந்தப் பண்முறை.

இது வரலாற்று உண்மை

பண்களைத்தான் ராகங்கள் என்று கூறுகிறோம்.

'பண்' என்பது தொன்மையான பெயர்.

ராகம் என்பது பரவலாக இப்பொழுது கூறப்படும் பெயர்; அவ்வளவுதான்.

'கர்நாடக இசை' என்பது அண்மைக் காலத்தில் வந்த பெயர்தான். 1650 ஆம் ஆண்டில் வேங்கடமகி என்பவர் வகுத்த இலக்கணத்தின்படி பாடுவதைத்தான் 'கர்நாடக சங்கீதம்' என்று கூறுகிறோம்

வேங்கடமகி என்ன சொல்கிறார் தெரியுமா?

"நான் ஒன்றும் புதிதாக இசைக்கு இலக்கணத்தை வகுத்துவிடவில்லை"

"ஏற்கெனவே இங்கு இருந்த இசையைத் தான் தொகுத்துள்ளேன்"

ஒன்றுபோல் உள்ள ராகங்களை ஓர் இனமாகத் தொகுத்து, மேளகர்த்தா ராகங்கள் என்றும், ஜன்ய ராகங்கள் என்றும் பாகுபாடு செய்துள்ளேன்.

"இது ராகங்களின் கூட்டத்தை அறிந்து கொள்ள எளிதாக இருக்கும்" என்று எழுதியுள்ளார்.

ஏற்கெனவே தமிழ் நாட்டில் பாடிவந்த பண்களைத்தான் வேங்கடமகி வகைப்படுத்தி இருக்கிறார். இது அவரே கூறி இருக்கும் உண்மை.

அவர் எங்கிருந்த மரபை எடுத்து வகைப் படுத்தினார் என்பதை அவரது நூலிலேயே குறிப்பிட்டு இருக்கிறார்.

அவர் நூலில் ராக ஆலாபனையைக் கூறும் ஓர் அத்தியாயம் உள்ளது.

ராகங்களை முதலில் எடுப்பது எப்படி? படிப்படியாக ஆலாபனையை விரிவாக்குவது எப்படி? முடிப்பது எப்படி என்றெல்லாம் எழுதியிருக்கிறார்.

அவருடைய நூல் சம்ஸ்கிருத மொழியில் இருக்கிறது.

அதில்தான் அவர் கூறுகிறார்: ராகத்தை எடுப்பது என்று ஒருமுறை. இதை 'ராக வர்த்தனி' என்று கூறுகிறார். இது சம்ஸ்கிருதப் பெயர்.

இதையே மக்கள் "எடுப்பு" என்று கூறுகிறார்கள் என்று "இயம் ஏவ ஜனை: லோகே எடுப்பு இதி அபிதீயதே" என்று கூறுகிறார்.

'எடுப்பு' என்ற சொல்லை இங்கு அப்படியே எடுத்துச் சமஸ்கிருத மொழியில் பயன்படுத்தியுள்ளார்.

'எடுப்பு' என்ற சொல் சமஸ்கிருதச் சொல்லே அல்ல. பிராகிருத சொல்லும் அல்ல. நல்ல சுத்தமான தமிழ்ச் சொல்.

இந்த தமிழ்ச் சொல்லை தமது சம்ஸ்கிருத நூலில் அப்படியே பயன்படுத்தியுள்ளார்.

அதுமட்டும் இல்லை. இவ்வாறு மக்கள் கூறுகிறார்கள் என்றும் அழுத்தமாகச் சொல்கிறார்.

இதில் இருந்து தமிழ் வழக்கில் இருந்த பண்களை எடுத்துத் தமது நூலில் வகுத்துள்ளார் என்பது தெளிவு.

ஏற்கெனவே நம்மிடையே வழக்கில் இருந்த இசை மரபைத்தான் வேங்கடமகி வகுத்துள்ளாரே ஒழிய தாமாக புதிதாக ஒன்றையும் அவர் அமைக்கவில்லை.

எனவே வேங்கடமகியின் மரபைப் பின் பற்றும் இன்றைய கர்நாடக இசை என்பது இங்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ் நாட்டில் திகழ்ந்த இசை மரபுதான் என்பதில் எந்தவித சந்தேகமும் இருக்க முடியாது.

அது நமது தமிழிசையான பண்ணிசை தான்.

மற்றும் ஒன்றையும் கூறவேண்டும். இரண்டாயிரம் ஆண்டுகளாக நம்மிடையே திகழ்ந்து வரும் பண்கள் எல்லாம் இன்று நம்மிடையே உள்ளன என்று எண்ணிவிடக்கூடாது.

பல பண்களை நாம் காலப்போக்கில் மறந்துவிட்டோம்.

அதனாலதான் இரண்டு அல்லது மூன்று வெவ்வேறு பண்களை ஒரே ராகத்தில் இன்று பாடுகிறோம்.

நட்டராகம், சாதாரி என்ற இரண்டு பண்களையும் பந்துவராளி என்ற ஒரே ராகத்தில் பாடுகிறோம்.

அதேபோல் கொல்லி. கொல்லிக் கௌவாணம், பியந்தைக் காந்தாரம் என்ற மூன்று பண்களையும் "நவரோஜ்" என்ற ராகத்தில் பாடுகிறோம்.

இந்தப் பண்களுக்கு வெவ்வேறு பெயர் இருப்பதில் இருந்தே இவற்றை வெவ்வேறு விதமாக பாடவேண்டும் என்பது தெளிவு.

நாமோ அவற்றை ஒரே ராகத்தில் பாடுகிறோம். காரணம் பல பண்களின் ராகங்களை மறந்துவிட்டோம். எஞ்சியுள்ளது பதினைந்து ராகங்கள்தாம் - பண்கள்தாம்.

இந்திய நாட்டின் மிகவும் தொன்மையான இசை மரபு வட பகுதியில் இருந்து மருவி இந்துஸ்தானி சங்கீதமாக மாறிவிட்டது.

தென் பகுதியில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகத் தொடர்ந்து பாடப்பட்டு வரும் இசை தமிழிசைதான்.

அதிலும் ஒரு பகுதிதான் எஞ்சி இருக்கிறது.

இந்திய நாட்டின் தொன்மையான இசை மரபு, மாறாது தொடர்ந்து வழக்கத்தில் இருந்து வருகிற மரபு தமிழிசைதான்.

எனவே தமிழிசையைப் பேணிக் காப்பாற்ற வேண்டும். இது இந்திய இசையைப் பேணிக்காப்பாற்ற வேண்டும் என்று ஆர்வமுள்ள அனைவரும் மேற்கொள்ள வேண்டிய புனிதமான பணியாகும்.



இசைபாடும் முறைக்காரி

# 39. தமிழின் பெயரில் ராகம்

அந்தந்த தேசத்தின் பெயரால் முன்பு ராகங்கள் இருந்திருக்கின்றன. 'திராவிடி' என்று தமிழின் பெயராலே ஒரு ராகம் இருந்ததை அறிகிறோம். திராவிடம் என்ற சொல்லை தமிழ் என்பதற்கு முன்பு பயன்படுத்தினர். தமிழின் பெயரால் 1300 ஆண்டுகளுக்கு முன்பே ஒரு ராகம் இருந்தது தெரிய வருகிறது.

திராவிட கூர்ஜரி, திராவிடகவுளை எனவும் ராகங்கள் இருந்தன. 250 ஆண்டுகளில் நாம் இவைகளை மறந்தோம்.

தேவாரத்தில் இசை, நாட்டியம் பற்றிய இடங்களில் 'சதிர்' என்று குறிப்பிட்டுள்ளனர். சிலர் இச்சொல் சதாராவிலிருந்து வந்தது என்கின்றனர். 'விதிவழி மறையவர்' என்ற தேவராப் பாடலில் 'சதிரே' என்று முடித்து 1300 ஆண்டுகட்கு முன்னரே சம்பந்தர் பாடியிருக்கிறார்.

ஜதிவழி வருவது நடம், சதிர் என்பன. பெரியபுராணத்தை ஒருவர் வடமொழியில் அப்படியே மொழி பெயர்த்துள்ளார். அதன் பெயர் 'உபமன்யு பக்த விலாசம்' என்பது. பாட்டு இயற்றுபவர்களை 'வாக்கேயக்காரர்கள்' என்பார்கள். அந்த வகையில் இந்த தேவாரம் பாடிய மூன்று நாயன்மார்களும் வாக்கேயக்காரர்களாகின்றனர்.

மாத்திரைக்கு கட்டளை என்று ஒரு பெயர் உண்டு. எட்டொரு கட்டளையில் 13 வகையில் பாடல் உள்ளதாக 'பஞ்ச மரபு' என்ற நூல் கூறுகிறது.

அப்பர் பெருமான் பாடிய பாடல்களில் பல பாடல்கள் அகத்துறை பாடல்களாக உள்ளன.

பழைய நூல்களில் கீதத்திற்கு ஒரு மரபும் நாட்டியத்திற்கு ஒரு மரபும் இருந்ததாக தெரிகிறது. நாட்டியத்தைக் கோயில்களில் தடைசெய்யும் வரை இவை இருந்ததாக அறிகிறோம்.

குடந்தை சுந்தரேசனார் பாடலைக் கேட்ட பின்னரே எனக்கு பரிபாடலின் பொருள் தெரிந்தது என்று பிரஞ்சு நண்பர் ஒருவர் கூறினார்.

சமய நூல்களில் பாடல், ஆடல் பற்றியும் இசைக் கருவிகள் பற்றியும் குறிப்புகள உள்ளன. ஊடலைத் தணிக்க பாடலும் ஆடலும் பயன்பட்டன.

கோயில்களில் இசையும், நாட்டியமும், பூஜையின் அங்கங்களாக இருந்தன. கேயம், வாத்யம், இரண்டும் ஆகம அங்கங்கள்.

கோயில்களில் நாட்டியம் இடம் பெற வேண்டும். நாட்டியம் என்ற பெயரால் ரிக்கார்டு டான்சுகள் வந்து விடக்கூடாது.

நாட்டியமாடும் பெண்களைக் குறைவாகப் பேசக்கூடாது.

அவர்கள் பண்ணின் நன்மொழி யார்; பவளத்துவர்வாயினார், கண்ணழகுடையார் என பலவாறு நாயன்மார்கள் குறிப்பிடுகின்றனர்.



# 40. வெறிவிலக்கு

நம்மாழ்வார் பாடிய திருவாய்மொழியில் "தீர்ப்பாரை யாம் இனி எங்ஙனம் நாடுதும்" என்னும் பாசுரத்துக்கு 'வெறிவிலக்கு' என்ற தலைப்பு வெளிவந்துள்ள நூல்களில் காணப்படுகிறது. 'வெறிவிலக்கு' என்றால் என்ன? அத்தலைப்பு இப்பாசுரத்துக்குப் பொருந்துமா? என ஆய்வது இக்கட்டுரை. அச்சம் அளிக்கும் தெய்வத்துக்கு இறைச்சியும் கள்ளும் படைத்து ஆடுவது வெறியாடல் எனப்படும். அதை வேலன் என்பவன் ஆடுவான் என்றும் பிறர் ஆடுவார் என்றும் கூறுவார். ஆடுவோர் மீது தெய்வம் தோன்றி, ஏற்பட்டுள்ள நோய் அல்லது குறை யாது? அதைப் போக்க என்ன செய்ய வேண்டும் எனக் கூறும் என்பது பண்டைய நம்பிக்கைகளில் ஒன்று. நம்மாழ்வார் பாடலில் கட்டுவிச்சி ஒருத்தி வெறியாடுகிறாள். இதை ஆழ்வார் 'அணங்கு ஆடல்' என்று கூறுகிறார். அவ்வாறு அணங்கு ஆடுபவர்கள் என்ன செய்வார்கள் என்றும் ஆழ்வார் தெளிவாகக் கூறுகிறார்.

ஒரு பெண் காதலுறுகிறாள். அவளது நோயைத் தீர்க்க கட்டுவிச்சியை அழைத்து அவள் சொல் கேட்கின்றனர். அணங்கு ஆடுகின்றனள். ஓர் ஆட்டையும் கள்ளையும் படைக்கின்றனர். முழவு கொட்ட தோள் குலைக்க துணங்கை ஆடுகின்றனர். கட்டுவிச்சியின் மாயம்வல்ல சொற்கேட்டு இவ்வாறு ஆடுகின்றனர். கருஞ்சோற்றையும் செஞ்சோற்றையும் படைக்கின்றனர். இவர்கள் ஆடுவது பொய். இவர்கள் அணங்கு ஆடுவது ஓர் இளந்தெய்வத்துக்கு. அதைச் செய்து பயனில்லை. வேதம் வல்லவர்களை அழைத்து கண்ணனுக்கு வழிபாடு செய்தால் இவளது நோய் அகலும் என்று ஆழ்வார் பாடுகிறார்.

*"இவளைப் பெறும் பரிசு இவ்வணங்கு ஆடுதல் அன்று"*
*"இசைப்பு இன்றி நீர் அணங்கு ஆடும் இளம்தெய்வம் அன்று இது"*
*"...இக்கட்டுவிச்சி சொல் கொண்டு நீர்*
*எதுவானும் செய்து, அங்கு ஓர் கள்ளும் இறைச்சியும் தூவேன்மின்"*
*"மருந்துஆகும் என்று, அங்கு ஒருமாய வலவை கொண்டு*
*கருஞ்சோறும் மற்றைச் செஞ்சோறும் களன் இழைத்து என்ன பயன்?"*

*"அணங்குக்கு அருமருந்து என்று அங்குஓர் ஆடும் கள்ளும்பராய்*
*துணங்கை எறிந்து தம்தோள் குலைக்கப்பாடும் அன்னைமீர்"*
*"வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான்*
*திருப்பாதம் பணிந்து இவள் நோய் தீர்த்துக்கொள்"*

என்பது ஆழ்வார் வாக்கு. அணங்கு ஆடலைத் தவிருங்கள். கண்ணனைப் பாடுங்கள் என்பது குறிக்கோள். இதனால்தான் 'வெறிவிலக்கு' - வெறியைத்தவிர்' என்ற பொருளில் தலைப்பு அமைந்துள்ளது எனக் கருதலாம். அதுவே பொருத்தம் எனக் கூறமுடியாது.

தொல்காப்பியத்தில் புறத்திணை இயலில் வெறிஆடல் குறிக்கப்படுகிறது.

"வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன் வெறியாட்டயர்ந்த காந்தள்"

என வருகிறது. தெய்வத்துக்குச் செய்யும் சிறந்த கடன்களை அறிந்தவன் வேலன். அவன் உயிர்ப்பலி கொடுக்க வேண்டும் என்று கூறுவதால் 'வெவ்வாயினன்'. அவன் முருகப் பெருமானது வேலைக் கையில் ஏந்திக் கொண்டு காந்தள் பூவைச் சூடிக் கொண்டு ஆடுவான். ஆதலின் இதற்கு காந்தள் என்று பெயர் என்று உரையாசிரியர் கூறுகிறார். பெரும்பாலும் இதை வேலனே ஆடுவான். சிலசமயம் பிறர் ஆடுவதும் உண்டு என்பது இலக்கணம் என்பார் நச்சினார்க்கினியர். தொல்காப்பியம் 'அகத்திணை புறத்திணை' என்று இருவகைப்பட்ட நாட்டிய மரபுக்காக எழுதப்பட்ட இலக்கண நூல். பரதருடைய 'நாட்டிய சாத்திரம்' போல தொல்காப்பியமும் ஒரு நாட்டிய இலக்கணமே எனலாம்.

'விலக்கு' என்ற சொல்லை 'தவிர்த்தல்' என்ற பொருளில் கண்டோம். ஆயினும் விலக்கு என்றால் 'பாட்டு' என்றும் பொருள் உண்டு. சிலப்பதிகாரத்தில் இப்பொருளைக் காண்கிறோம். மாதவி ஆடியதைக் கூறும் அரங்கேற்றுக் காதையில் பலவகைக் கூத்தையும் பாட்டுக்கேற்ப ஆடினாள் என்று கூறுமிடத்து 'பல்வகைக் கூத்தும் விலக்கினில் புணர்ந்து' என வருகிறது. இங்கு விலக்கு என்றால் பாட்டு என்று உரையாசிரியர்கள் கூறுகிறார்கள். வேந்து விலக்கு, படைவிலக்கு, ஊர்விலக்கு என்று பாடல் உருபுகள் உண்டு. விலக்கு என்னும் பாடல்கள் நாட்டியத்துக்குப் பயன்படும் என்றும், அவை பத்துப் பகுதிகளைக் கொண்டவை என்றும் அறிகிறோம்.

ஆனால் வெறிவிலக்கு என்ற தலைப்பு நம்மாழ்வார் பாசுரத்துக்கு இந்தப் பொருளில் வைக்கப்பட்டுள்ளதா எனில் -

பண்டைய சுவடிகளில் திருவாய்மொழிப் பாடல்களுக்குத் தலைப்பு இல்லை. சென்ற நூற்றாண்டில் பதிப்பிக்கப்பட்ட நூல்களில்தான் தலைப்புகள் காணப்படுகின்றன.

'வெறி' என்றாலே பாடல் என்று பொருள் உண்டு. நம்மாழ்வார் பாடியுள்ள இந்தப் பாசுரத்திலேயே இறுதியில்

*'வழுவாத தொல்புகழ் வண்குருகூர்ச் சடகோபன் சொல்*
*வழுவாத ஆயிரத்துள் இவை பத்து வெறிகளும்*
*தொழுது ஆடிப்பாட வல்லார் துக்கசீலம் இலர்களே"*

என்று பாடியுள்ளார்.

இந்தப் பத்து வெறிகளையும் - பாடல்களையும் பாடி ஆட வல்லார் என்று கூறுவதிலிருந்து 'பாடல்கள்' என்ற பொருள் திட்டவட்டமாகக் கிடைக்கிறது. இப்பத்து வெறிகளையும் பாடி ஆடுங்கள் என்றுதானே ஆழ்வார் கூறுகிறார்? ஆதலின் வெறிவிலக்கு என்ற தலைப்புக்கு வெறியைத் தவிருங்கள் என்று பொருள் கொண்டால், ஆழ்வாரின் குறிப்புக்கு நேர் விரோதமாக அல்லவா ஆகிறது? இல்லை எனில் இத்தலைப்புக்கு என்ன பொருள் கொள்வது? வெறிவிலக்கு என்றால் வெறிப்பாட்டு என்று பொருள் கொள்ளலாம். வெறியைத் தவிர் என்றும் பொருள் கொள்ளலாம்.

விலக்கு என்றால் மாற்றுதல் என்றும் பொருள் உண்டு. தமிழ் லெக்சிகன் காண்க. ஆதலின் இத்தலைப்புக்கு அணங்கு ஆடலை மாற்றி, கண்ணபிரான் மீது பாடி ஆடுங்கள் என்றும் பொருள் கொள்ளலாம். வெறி என்னும் பாட்டு என்றும் பொருள் கொள்ளலாம். ஆதலின் வெறிவிலக்கு என்ற ஒரே தலைப்பில் தவிர், மாற்று, பாடல் என்ற மூன்று பொருளும் தொனிக்கும்படி அமைத்துள்ள ஆன்றோர்களின் ஆழ்ந்த அறிவை எண்ணி வியக்காமல் இருக்க முடியவில்லை.



# 41. பரதநாட்டியம்

இந்திய நாட்டில் பல்வேறு பகுதிகளில் நாட்டியம் பல்வேறு பெயர்களில் அழைக்கப் பெறுகிறது. மணிபுரி, ஒடிஸ்ஸி, கதக், மோகினி ஆட்டம் என்றெல்லாம் இது பெயர் பெறுகிறது. தமிழ்நாட்டில் ஆடப்பெறும் நாட்டியம் ஒன்றே, 'பரதநாட்டியம்' என்ற பெயரில் உலகெங்கும் புகழ் பெற்று விளங்குகிறது. இப்பெயர் குறித்துக் கருத்து வேறுபாடுகள் உள்ளன. உதாரணமாக 'பரதநாட்டியம்' என்ற பெயரே தமிழ்-நாட்டியத்துக்கு 1935 அல்லது 1940 ஆம் ஆண்டுக்குப் பின்னர்தான் ஏற்பட்டது என்றும், அதற்கு முன்னர் இது 'சதிராட்டம்' என்றே அழைக்கப்பட்டது என்றும், 'தேவடியாள் குலத்தினர் இதை ஆடி வந்ததால் சமுதாயத்தில் இழுக்குடையாதாக இது கருதப்பட்டது என்றும் 1930ன் பின்னர் சமுதாயத்தில் முன்னிலைக் குடும்பப் பெண்களும், ஆடல் கலையில் ஈடுபட்டதால், சதிர் ஆட்டம் என்ற பெயரை மாற்றி "பரத நாட்டியம்" என்ற புதுப் பெயர் சூட்டப்பட்டது என்றும், சிலர் கூறுவர். ஆனால் வரலாற்றை நோக்குங்கால் தமிழகத்தில் காலம் காலமாக ஆடலை 'பரதநாட்டியம்' என்று அழைத்துள்ளனர் என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன.

1930க்கு பல ஆண்டுகளுக்கும் முன்னர் வாழ்ந்த அமரகவி சுப்ரமண்ய பாரதியார் தமது பாடலில் "பரத நாட்டியக் கூத்திடுவீரே" என்று கூறுகிறார். 18ம் நூற்றாண்டைச் சேர்ந்த ஓலைச்சுவடி ஒன்றில் 'பரதவிதநாட்டியம் பயில்கின்ற பலமாதர்' என்ற சொற்றொடர் வருகிறது' இதிலிருந்து 200 ஆண்டுகளுக்கும் முன்பும் தமிழகத்தில் நாட்டியம் 'பரதநாட்டியம்' என்ற பெயரால் அழைக்கப்பெற்றது என்பதில் ஐயத்துக்கே இடமில்லை.

பண்டைய காலங்களில் கதையின் அடிப்படையில் வாசகங்களைக் கூறிக் கொண்டு இடையிடையே இசையுடனும், ஆடலுடனும் நடிப்பதையே நாட்டியம் என்றனர் என்றும், இன்று நாடகம் என்று வழங்கப்படுவதே நாட்டியம் எனப்பட்டது என்றும், இன்று நம் பெண்கள் ஆடும் ஆடலுக்கு 'நாட்டியம்' என்ற சொல் பொருந்தாது என்றும் சிலர் கூறுவர். ஆதலின் இது குறித்து சில அடிப்படை உண்மைகளை அறிந்து கொள்வது சாலச் சிறந்ததாகும்.

**நாட்டிய சாஸ்திரம்**

பரதமாமுனிவர் எழுதிய நூலுக்கு 'நாட்டிய சாஸ்திரம்' என்று பெயர். இந்நூலில் பரதர் நாட்டியத்தைப் பற்றி மட்டும் கூறவில்லை. அரங்கம் அமைத்தல், இசை, இசைக் கருவிகள், அவற்றை வாசிக்கும் மரபுகள், சொல், கவிதை, கவிதையின் தன்மை, பல்வேறு சுவைகள், ஆடை அணிகலன்கள், முதலியவற்றையும் நாட்டியத்தில் பயன்படுத்தும் கரணங்கள், கால்சாரிகள் ஹஸ்தங்கள், உடல் வளைவுகள், அசைவுகள், கழுத்து அசைவுகள், முதலிய அனைத்தையும் விவரித்து அவற்றிற்கு இலக்கணம் வகுத்துள்ளதும் இந்நூலேயாகும். உலக மரபுகளைக் காட்டுவதை **'லோகதர்மி'** என்றும், நாட்டியத்திற்கெனத் தனித்தன்மை உடைய மரபுகளை **'நாட்டியதர்மி'** என்றும் பரதர் அழைக்கிறார். பரதர் எழுதிய நாட்டிய நூலுக்கு உரை எழுதியவர்களில் மிகச் சிறந்தவர் "அபிநவகுப்தர்" என்பவர். காஷ்மீர தேசத்தைச் சேர்ந்த அவர், தமிழ் நாட்டில் தஞ்சைக் கோயிலைக் கட்டிய முதலாம் இராஜராஜசோழன் காலத்தில் வாழ்ந்தவர். அவர் இந்நூலை 'நாட்டிய வேதம்' என்று கூறுகிறார்.

கி.பி.13ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் சார்ங்கதேவர் என்ற பெரியார். அவர் **"சங்கீத ரத்னாகரம்"** என்ற நூலை சமஸ்கிருத மொழியில் எழுதியிருக்கிறார். அவரும் நாட்டிய நூலை 'நாட்டியவேதம்' என்ற பெயராலேயே அழைக்கிறார். அவரும் நர்த்தனம் என்பது நாட்டியம் என்று அழைக்கப்படுகிறது என்று கூறுகிறார். சார்ங்கதேவரின் நூலுக்கு ஸிம்மபூபாலர் என்பவர் உரை எழுதியுள்ளார். அவர் நர்த்தனம் என்பது **நாட்டியம், நிருத்தம், நிருத்தியம்** என மூன்று பிரிவுகளை உடையது. பாடலின் அர்த்தமானது சுவையை முக்கியமாகக் கொண்டு அபிநயிக்கப்படும் பொழுது நாட்டியம் எனப்படும். பாடலின் அர்த்தம் பாவகத்தை அடிப்படையாகக் கொண்டு அபிநயிக்கப்படும் போது நிருத்யம் எனப்படும். பாடலின் ராகத்துக்கு ஏற்ப உடல் அசைவுகளோடு ஆடுதல் நிருத்தம் எனப்படும் என்று கூறுகிறார். மூன்றாவதாகக் கூறப்படும் நிருத்தம் என்பதில் பாடல் உண்டு. ஆனால் அதன் அரத்தத்தைப் பற்றி கவனம் தேவையில்லை. அதன் ராக அசைவுகளுக்கு ஏற்ப அங்க அசைவுகள் இருக்க வேண்டும். அதாவது அபிநயம் இல்லாமல் நாட்டியம் மட்டும் புரிவதை நிருத்தம் என்பர். இவை மூன்றும் உட்பிரிவுகளே. மூன்றிலே இசையும் உண்டு; ஆடலும் உண்டு. ஆதலால் இதற்கு நாட்டியம் என்பது பொதுப் பெயர்.

**தமிழ் மரபு**

தமிழ் மரபில் நாட்டிய நூல்படி பெண்கள் ஆடிய ஆடலை 'நாட்டியம்' என்றே சுமார் 2000 ஆண்டுகளாக அழைத்து வந்துள்ளனர்.

தமிழில் நாட்டிய மரபுகளை மிகச் சிறப்பாகக் கூறும் நூல் சிலப்பதிகாரமாகும். சிலப்பதிகாரத்தில் மாதவி ஆடியதைக் கூறும் அரங்கேற்றுக் காதையில் அப்பெண் நன்னூல்களில் கூறியபடி நாட்டியம் புரிந்தாள் என்று

*"நாட்டிய நன்னூல் நன்கு கடைப்பிடித்துக்*
*காட்டினள்"*

என்று கூறுகிறது. இதற்கு உரை எழுதிய அரும் பதவுரையாசிரியர் "நாட்டியத்தை நூல்களில் சொன்ன முறைமை வழுவாமல் அவிநயங்காட்டிப் பாவகந் தோன்ற.........ஆடிக்காட்டினாள்" என்று கூறுகிறார். அபிநயம் காட்டி ஆடும் ஆடலுக்கு 'நாட்டியம்' என்று பெயர் என்பது இவர் கருத்து. அரும்பதவுரையாசிரியருக்கு 200 ஆண்டுகளுக்கும் பின்னர் வந்த அடியார்க்கு நல்லாரும் இதையே கூறுகிறார். மாதவி அரங்கேறி தனியாக ஆடிய ஆடல், இன்று நம் பெண்கள் ஆடும் ஆடலைப் போன்றதே. இதை இளங்கோவடிகளும், அரும்பதவுரையாசிரியரும், அடியார்க்கு நல்லாரும் **'நாட்டியம்'** என்றே அழைத்துள்ளதிலிருந்து இன்று பெண்கள் ஆடும் ஆடலை 'பரத நாட்டியம்' என்பதே பொருந்தும்.

தமிழில் நாட்டியத்தை, கூத்து, ஆடல், நிருத்தம், லயம், நர்த்தனம், நடம், என்றெல்லாம் அழைப்பர். நடமாடும்பெண் இருவகைக் கூத்துக்களையும், பலவகைக் கூத்துக்களையும் அறிந்து ஆடல் வேண்டும் எனச் சிலப்பதிகாரம் கூறுகிறது. இருவகைக் கூத்து என்பது தேசி, மார்க்கம் என்ற இரண்டுவகை. **தேசி** என்பது நம் நாட்டில் தமிழ்ப் பகுதியில் மலர்ந்த ஆடல். **மார்க்கம்** என்பது வடுகு என்றும் அழைக்கப்படுகிறது. இது தமிழகத்திற்கும் வடபால் மலர்ந்த ஆடல். ஆதலின் இளங்கோவடிகள் காலத்திலேயே தமிழக ஆடல் என்றும் வடுகு ஆடல் என்றும் இரு பிரிவுகள் வளர்ந்திருந்தன என்பது தெளிவு. பிற்காலத்தில் இவை மேலும் பல பிரிவுகளாக விரிந்தன. **புகழ்க்கூத்து, வசைக்கூத்து** என்றும் **ஆரியக்கூத்து, தமிழ்க்கூத்து** என்றும், **சாந்திக்கூத்து, விநோதக்கூத்து** என்றும் இரண்டிரண்டாகக் கூத்துக்களை வகைப்படுத்தினர். இவற்றைப் பற்றி அடியார்க்குநல்லார் தமது உரையில் விரிவாகப் பின்வருமாறு கூறுகிறார்.

"**சாந்திக்கூத்து** என்பது சொக்கம், மெய்க்கூத்து, அவிநயம், நாடகம் என நான்கு பிரிவுகளை உடையது. நாயகன் சாந்தமாக ஆடிய கூத்து சாந்திக்கூத்து எனப்படும்.

**சொக்கம்** என்பது சுத்த நிருத்தம். அது நூற்றெட்டுக் கரணம் உடையது.

**மெய்க்கூத்து** என்பது தேசி, வடுகு, சிங்களம் என மூவகைப்படும். இவை மெய்த் தொழில் கூத்தாகலின் மெய்க்கூத்தாயின. இவை அகச் சுவை பற்றி எடுத்தலின் அகமார்க்கம் என நிகழ்த்தப் படும்.

**அவிநயக்கூத்து:** கதை தழுவாது பாட்டினது பொருளுக்குக் கைகாட்டி வல்லபம் செய்யும் பலவகைக் கூத்து.

**நாடகம்** கதை தழுவி வரும் கூத்து.

**விநோதக்கூத்து** என்பது குரவை, கலிநடம், குடக் கூத்து, தோல்பாவை என்னும் கூத்துகளாம்."



தலபுஷ்ப புடம்
கும்பகோணம் சாரங்கபாணி கோயில்

தமிழ் நாட்டியத்தில் நிருத்தத்துக்குச் சிறப்பிடம் இவற்றில் சொக்கம் என்பது சுத்தநிருத்தம் எனப் படும் என்பதும் அது 108 கரணங்களைக் கொண்டது என்பதும் குறிக்கத்தக்கது. சிவபெருமான் நிருத்தம் புரிவதில் மிகவும் ஈடுபாடுடையவர். அவரே கரணங்களை முதன் முதலில் போதித்தார். அந்தி நேரங்களில் ஆடல்புரிகின்ற நான் பல்வேறு கரணங்களைக் கொண்டு அங்கஹாரங்களால் அலங்கரித்து நிருத்தம் புரிந்தேன். அதை நினைவு கூர்கிறேன். என்று சிவபெருமானே கூறுகிறார். (ப.நா.சா)

**'மயா அபி ஸ்மிருதம் நிருத்தம் சந்தியாகாலேஷு நிருத்யதா**

**நாநா கரண சம்யுக்தை: அங்கஹாரை: விபூஷிதம்'**

சிவபெருமானுக்குக் கரணங்களில் உள்ள ஈடுபாட்டைத் தேவாரத் திருப்பதிகங்களும் குறிக்கின்றன.

*"கழலோடு திருவிரலால் கரணம் செய்து*
*கனவின் கண் திருவுருவம் தான் காட்டும்மே*
*எழிலாரும் தோள் வீசித் தான் ஆடும்மே"*

என்று அப்பர் பாடுகிறார். காலும் கையும் இணைந்து அழகுற ஆடுவது நிருத்தத்தில் கரணம் எனப்படும். பரத முனிவரின் நாட்டிய நூலில்,

"ஹஸ்த பாத சமாயோக:நிருத்தஸ்ய கரணம்

பவேத்"

என இலக்கணம் கூறப்பட்டுள்ளது. கழலோடு திருவிரலால் கரணம் செய்து" என்னும் அப்பர் பாடல் கரணம் என்பதின் இலக்கணத்தைத் தமிழில் அழகாக எடுத்தியம்புகிறது. 'கரணம்' என்பதற்கு மிகவும் தொன்மையான தமிழாக்கம் இதுவே. அப்பர்சுவாமிகள் மற்றொரு இடத்தில் சிவபெருமானை "சொக்கம் பயின்றீர்" என்றும் ஆடும் சொக்கன்காண்' என்றும் அழைக்கிறார். சொக்கம் என்பது 'கரணம்' எனக் கண்டோம். ஆதலின் தமிழ்நாட்டில் அப்பர் வாழ்ந்த கி.பி.600க்கும் முன்பாகவே 108 கரணங்களும், அவை சிவபெருமானாடியவை என்பதும் அவற்றிற்கு சொக்கம் என்ற பெயரும் அறியப்பட்டிருந்தன.

**சிற்பத்தில் நாட்டியக் கரணங்கள்**

இந்திய வரலாற்றில் ஆயிரம் ஆண்டுகளுக்கும் மேலாகத் தமிழ்நாட்டின் நாட்டியக் கரணங்களுக்கு மிகச் சிறந்த இடத்தை அளித்து வந்துள்ளனர். தஞ்சைப் பெருங்கோயிலில் இராஜராஜப் பெருமன்னன் 108 கரணங்களுக்குச் சிறப்பிடம் கொடுத்துச் சிற்பமாகப் படைத்துள்ளான். கர்ப்ப கிருஹத்தின் மேல் தளத்தில் சுற்றுச் சுவரில் சிவபெருமான் 108 கரணங்களையும் ஆடுவதாகச் சிற்பங்களில் அமைத்திருக்கிறான். இவை பரதருடைய நாட்டிய சாஸ்திரத்தில் கூறியபடி வடிக்கப்பட்டுள்ளன. 108 கரணங்களும் வரிசைப்படுத்தப்பட்டு சிற்பத்தில் வடிக்கப்பட்டுள்ளதைத் தமிழ் நாட்டில் தான் காணகிறோம். தொன்மையான சான்று இதுவே யாகும்.



தில்லை நடமாடும் நங்கை

கும்பகோணத்தில் சாரங்கபாணி சுவாமி கோயில் கோபுரத்தில் 108 கரணங்களைச் சித்தரிக்கும் சிற்பங்கள் உள்ளன. இவை சிவபெருமான் ஆடுவதாக உள்ளன. இவை கி.பி.12ம் நூற்றாண்டுச் சோழர் கால சிற்பங்களாகும். வேறு ஏதோ சிவன் கோயிலில் முதலில் இருந்தன. இப்பொழுது இக்கோபுரத்தில் பாங்குறப் பொருத்தப் பட்டுள்ளன. இச் சிற்பங்களின் கீழே கரணங்களின் பெயர்கள் கிரந்த எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளன. மூன்றாவதாகச் சிதம்பரம் நடராஜப் பெருமானின் கோயிலில் நான்கு கோபுர நிலைக்கால்களிலும், 108 கரணங்களைப் பெண்கள் ஆடுவதாகச் சோழர் காலத்தில் செதுக்கி வைக்கப்பட்டுள்ளன. கிழக்குக் கோபுரத்திலும், மேற்குக் கோபுரத்திலும் ஒவ்வொரு கரணத்தின் கீழும் கிரந்த எழுத்துக்களில், அந்தந்தக் கரணத்தைக் கூறும் பரத சாஸ்திரச் செய்யுள் பொறித்து வைக்கப்பட்டுள்ளது. பரத சாஸ்திரமே இவ்வாறு கல்லில் பொறித்து வைக்கப்பட்டுள்ளது தமிழ் நாட்டில்தான் என்பது பெருமைக்குரிய செய்தியாகும். திருவண்ணாமலை, திருவதிகை போன்ற கோயில் கோபுரங்களிலும் இது போன்று கரணங்கள் இடம் பெற்றுள்ளதைக் காணலாம். இவற்றிலிருந்து சோழர் காலத்திலிருந்தே நம் தமிழ் நாட்டில் நாட்டியத்தில் கரணங்களுக்குச் சிறப்பிடம் கொடுத்து வந்துள்ளதைக் காண்கிறோம். ஆதலின் இந்தியாவின் பிற பகுதிகளில் காணப்படும் நாட்டியத்தைக் காட்டிலும் தமிழக நாட்டியத்தில் கரணங்கள் இன்றும் அதிகம் பயன்படுத்தப்படுகின்றன.

## நாட்டியம் கற்றுத்தரும் முறை

நாட்டியத்தைப் பெண் குழந்தைகளுக்கு எப்பொழுது கற்றுத் தரத் தொடங்க வேண்டும்? எவ்வளவு ஆண்டுகள் பயின்ற பின் அரங்கேற வேண்டும்? நாட்டியப் பெண்ணிற்கு வேண்டிய இலக்கணம் யாது? என்பவற்றைப் பற்றி இளங் கோவடிகள் தெளிவாகக் கூறியுள்ளார். நாட்டியம் ஆடும் பெண்ணுக்கு ஆடல் தெரிய வேண்டும். பாடல் தெரிய வேண்டும். இவற்றுடன் அழகும் நிறைந்திருக்க வேண்டும். இம்மூன்றில் ஒன்றும் குறையக்



தில்லை திருவாயில் - நடமாடும் நங்கை

கூடாது. ஐந்து வயதில் குழந்தைகளுக்கு நாட்டியம் கற்றுத்தரத் தொடங்க வேண்டும். தினம் காலையும், மாலையும் நாட்டியப் பயிற்சி செய்தல் வேண்டும். இதை 'சிரமம் இருபொழுது' என்று அரும்பதஉரை ஆசிரியர் கூறுகிறார். அடியார்க்கு நல்லார் காலத்தில் நாட்டியப் பயிற்சியை எப்படித் தொடங்கினார்கள் என்பதற்கு சான்றுகள் உள்ளன. பண்ணியம் வைத்துக் கணபதியை வணங்கி, ஐந்து வயதுப் பெண்ணை மலர்களால் அலங்கரித்து ஆடல் கற்றுத்தரத் தொடங்க வேண்டும். இதற்கு **"தண்டியம் சேர்த்தல்"** என்று பெயர்.

*பண்ணியம் வைத்து ஆனைமுகன் பாதம் பணிந்து நாள்*
*புண்ணிய ஓரை புகன்றன கொண்டு எண்ணியே*
*வண்டிருக்கும் கூந்தல் மடவரலை ஐயாண்டில்*
*தண்டியஞ் சேர்விப்பதே சால்பு"*

என்பது பாட்டு.

*'வட்டணையும் தூசியும் மண்டலமும் பண்ணிமைய*
*எட்டுடன் ஈரிரண்டாண்டு எய்திய பின்*
*கீதக்குறிப்பும் அலங்காரமும் கிளரச்*
*சோதித்து அரங்கேறச் சூழ்'*

பெண்ணிற்கு வட்டணை, தூசி, மண்டலம், பண், முதலியன கற்றுத்தந்து பின்னர் கீதம், அலங்காரம் முதலியனவும் புகட்டி, 12ம் வயதில் இவற்றில் அடைந்துள்ள தகுதியை சோதனை செய்து பின்னர் அரங்கேற்றம் செய்ய வேண்டும் என்கிறது பாடல்.

இரண்டு வகையான தேசி, மார்க்கம் என்னும் இருவகை நடனங்களையும் ஏழு ஆண்டில் இப் பெண்கள் கற்றுப் பின்னரே அரங்கேறினர்.

**தலைக்கோல்:**

ஒரு பெண் முதன் முதலில் நாட்டியம் புரியும் அரங்கத்துக்குத் **தலைக்கோல் தானம்** என்று பெயர். தலைக்கோல் என்பது அரங்கேற்றத்தின் சின்னமாகத் திகழ்வது. பொதியில் மலை போன்ற புண்ணிய மலைச்சாரல்களிலே வளரும் மூங்கில் கழிகளினால் இக்கோல் செய்யப்படும். கணுவுக்குக்கணு ஒரு சாண் உடையதாக, இக்கோல் ஏழு சாண் நீளம் இருக்கும். கணுக்களில் நவரத்தினங்கள் இழைத்து இடை நிலங்களில் பொன் தகடு போர்த்தி இது செய்யப்பட்டிருக்கும் இக்கோலை இந்திரன் மகன் ஜயந்தனாகக் கருதி, ஆவஹித்து புண்ணிய நன்னீர்களால் நீராட்டுவித்து, மலர்மாலைகளால் அலங்கரிப்பர். பின்னர் பட்டத்து யானையிடம் கொடுத்து, அரசன், அமைச்சர் முதலியோர்

சூழ்ந்து வர ஊரை வலம் வருவர். முரசுகளும், மங்கல வாத்தியங்களும் முழங்கும். உடன் தேரும் வரும். தேரில் வரும் கவியிடம் இத்தலைக்கோல் அளிக்கப்படும் இவ்வாறு ஊர்வலம் வந்த பின்னர் அரங்கிலே தலைக்கோலை எதிர்முகமாக வைத்து அதைப் பூசித்து, அதன் பின்னர் ஆடல் தொடங்குவர். இவ்வாறு அரங்கேற்றம் முடிக்கும் பெண்ணுக்குத் **தலைக்கோலரிவை** எனப் பெயர். சோழர் காலத்தில் கி.பி.10,12ம் நூற்றாண்டுகளிலும் இவ்வழக்கம் இருந்து வந்தது. பல ஆடல் மகளிர், தலைக்கோலி எனக் கல்வெட்டில் குறிக்கப்படுகின்றனர்.



நிகுஞ்சிதம் கரணம், குடந்தை

**பக்கவாத்தியம்:**

இவ்வாறு அரங்கேறிய பெண்கள் ஆடியமுறை பற்றியும் நம்மால் அறிய முடிகிறது. இதை 'அரங்கிலே ஆடும் இயல்பு' என்று கூறுவர். ஆடலைப் பற்றிக்கூறும் முன்னர் பக்கவாத்தியங்களைப் பற்றிச் சிறிது அறிதல் நலம்.

அரங்கத்தில் பெண் ஆடும்போது வாய்ப்பாடலுடன் குழல், யாழ், மத்தளம் (தண்ணுமை), குடமுழா, இடக்கை ஆகிய கருவிகள் வாசிக்கப்பட்டன என்று இளங்கோவடிகள் கூறுகிறார்.

*"குழல்வழி நின்றது யாழே யாழ்வழித்*
*தண்ணுமை நின்றது தகவே தண்ணுமைப்*
*பின்வழி நின்றது முழவே முழவொடு*
*கூடிநின்று இசைத்தது ஆமந்திரிகை"*

என்று சிலப்பதிகாரம் கூறும். இரண்டாயிரம் ஆண்டு களுக்கும் முன்னர் நாட்டியத் துக்கு இவை பக்கவாத் தியங்களாக இருந்தன. தேவாரக்காலமான கி.பி.7-8ம் நூற்றாண்டிலும் இவை பக்கவாத்தியங்களாக வாசிக்கப்பட்டன.

*"குழலின் ஓசை வீணை மொந்தை கொட்ட*
*முழவதிர கழலின் ஓசை ஆர்க்க ஆடும் கடவுள்"*

-சம்பந்தர் தேவாரம்

அப்பர் சுவாமிகள் குழல், கொக்கரை, கைத்தாளம் மொந்தை முதலிய பக்கவாத்தியங்கள் என

*"குழலொடு கொக்கரை கைத்தாளம் மொந்தை*
*குறட்பூதம் முன்பாட தான் ஆடுமே"*


நாட்டிய கரணம, குடநதை

என்கிறார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் தக்கை (உடுக்கை போன்ற இசைக்கருவி) தண்ணுமை (மத்தளம்), தாளம், வீணை, தகுனிச்சம், இணைச்சங்கு, கொக்கரை குடமுழா ஆகியவை பக்கவாத்தியங்கள் என்று கூறுகிறார். இதில் தகுனிச்சம் என்பது ஒருவகை முழவு. கொக்கரை ஒருவகை வளைந்த இசைக்கருவி. நாட்டியத்தில் சங்கும் பக்கவாத்தியமாகப் பயன் பட்டது என்பது இதனால் புலப்படும்.

*"தக்கை தண்ணுமை தாளம் வீணை தகுனிச்சம் இணைச்சங்கு*
*கொக்கரை குடமுழவினோடு ஓசை கூடப்பாடி நின்றாடுவீர்"*

என்கிறார்.

ஏறக்குறைய கி.பி.1000ல் தோன்றிய தஞ்சைப் பெரிய கோயிலில் ஏராளமான பெண்கள் நாட்டியமாடினர். அவர்களைப் பற்றி இராஜராஜன் பெரியதொரு கல்வெட்டைப் பொறித்து வைத்துள்ளான். அதிலிருந்து நாட்டியத்துக்குப் பக்கவாத்தியம் எவ்வாறு இருந்தது என்று அறிகிறோம். நட்டவம் செய்வார் நால்வர், பாடவ்யம் எண்மர், கானபாடி ஐவர், வங்கியம் வாசிப்பார் (குழல்) மூவர், உடுக்கை வாசிப்பார் இருவர், வீணை வாசிப்பார் இருவர், ஆரியம் பாடுவார் மூவர், தமிழ் பாடுவார்

நால்வர், கொட்டி மத்தளம் வாசிப்பார் இருவர், சங்கு ஊதுவார் மூவர், பக்கவாத்தியம் இருபத்து நால்வர், என மொத்தம் பக்கவாத்யம் 64 பேர் இருந்தனர் 64 பக்கவாத்யரைக் குறிக்கும் அக்கல்வெட்டு நம்மை வியப்பில் ஆழ்த்தும். ஆனால் சங்கீத ரத்னாகரம் என்ற நூல் (13ஆம் நூற்றாண்டில் வாசிப்போர் 64 பேர் இருந்தால் அதை **உத்தம சம்பிரதாயம்** என்றும், 32 பேர் இருந்தால் **மத்திம சம்பிரதாயம்** என்றும் அதற்குக் கீழ் இருந்தால் **அதம சம்பிரதாயம்** என்றும் கூறுகிறது. ஆதலின் அறுபத்துநால்வரைப் பாடுவதற்கும், பக்கவாத்யத்துக்கும் நியமித்த ராஜராஜன் உத்தம சம்பிரதாயத்தைப் பின்பற்றியுள்ளான்.

சங்கீதரத்னாகரம் என்னும் நூல் மத்தளக்காரர், தாளக்காரர், கஞ்சதாளம், காளம் ஊதுவர், குழல், வாய்ப்பாட்டு என இசைப்போரையும் கூறுகிறது. இசைக்கருவிகள் இணைந்து வாசிப்பதை வடமொழி நூல்கள் 'மேளாபகம்' என்று கூறுகின்றன. அதிகமான இசைக்கருவிகள் இணைந்து வாசிப்பதைத் தமிழில் பெரியமேளம் என்றும், குறைந்த இசைக்கருவிகள் உள்ளதைச் சின்னமேளம் என்றும் அழைத்தனர் போலும்! முற்காலங்களில் 'மங்கள வாத்தியம்' அல்லது "ஸகல வாத்தியம்" என்று எல்லா இசைக்கருவிகளும் இணைந்து வாசிக்கும் மரபு உண்டு. இதில் முக்கிய இடம் பெறுவது நாதஸ்வரம். ஆதலின் நாதஸ்வரத்தை "மேளவாத்தியக் கச்சேரி" என்று சொல்லும் பழக்கம் வந்தது. மேளவாத்யத்தில் இசைக்கருவிகளின் எண்ணிக்கை அதிகம். ஆதலால் அதைப் பெரிய மேளம் என்று அழைத்தனர். சாதாரணமான நாட்டியக் கச்சேரிக்கு இசைக்கருவிகளின் எண்ணிக்கை குறைவு. அதனால் நாட்டியக் கச்சேரியைச் சின்ன மேளம் என்ற பெயரில் அழைத்தனர். சமீப காலம் வரை **சின்ன மேளம்** என்ற பெயரில் நாட்டியம் வழங்கிவந்ததற்கு காரணம் அதுவே.

இசைக்கருவிகள், பண்டைய நூல்கள் பாடலுக்கு ஏற்ப இணைந்து இசைப்பவை என்றும், நிருத்தத்துக்கு ஏற்ப இணைந்து இசைப்பவை என்றும், இரண்டுடனும் இணைந்து இசைப்பவை என்றும் மூன்றுவகைகளாகக் கூறுகின்றன. இவை **கீதானுகம், நிருத்தானுகம், உபயானுகம்** எனப் பெயர் பெறும் மூன்றுவகை.

**அரங்கில் ஏறி ஆடும் இயல்பு:**

அரங்கில் ஏறி ஆடும் முறையைப் பற்றியும் பண்டைய நூல்களிலிருந்து அறிய முடிகிறது. முதல் முதலில் ஏறி ஆடும் அரங்கைத் **தலை அரங்கேறல்** என்று அழைப்பர்.

அரங்கில் ஏறியவுடன் முதலில் இரண்டுபாடல் பாடப்படும். இவை தெய்வப்பாடல் என்று அழைக்கப்படுகின்றன. முதல் பாடல் நன்மைகள்

நல்க தெய்வத்தை வேண்டுவதாம். இரண்டாவது பாடல் தீமைகள் அகல வேண்டுவதாம். தெய்வப்பாடலைப் பாடி முடித்தவுடன் எல்லா இசைக்கருவிகளும் இசைக்கப்படும். இதை அந்தரக்கொட்டு என்பர். இவ்வந்தரக்கொட்டு இசைத்த பின்னர் தான் ஆடும்பெண் உருக்காட்டுதல் மரபு.

ஆடுகின்ற பெண்முதலில் தேசிக்கூத்தை ஆடினாள். இதை மூன்று ஒத்துடைய மட்டதாளத்தில் தொடங்கி ஓரொத்துடைய ஏகதாளத்தில் முடித்தாள். இதன் பின்னர் மார்க்கம் என்னும் ஆடலைப் புரிந்தாள். இதற்குப் பிரபந்தம் பாடப்பெற்றது. பிரபந்தம் என்பது பஞ்சதாளத்தில் வகுக்கப்பெற்றது. இதையும் மட்டதாளத்தில் வைசாக நிலையில் ஆடி முடித்தாள். இவை அனைத்தும் சிலப்பதிகாரத்தில் மாதவி ஆடியதாகக் குறிக்கப்பட்டுள்ளன. ஆதலின் சுமார் 2000 ஆண்டுகளாக தமிழகத்தில் நிலவிய ஆடல் முறை இது என அறியலாம்.

சங்கீதரத்னாகரம் என்னும் நூல் கி.பி.13ம் நூற்றாண்டில் எழுதப் பெற்றது எனக் கண்டோம். அந்நூலில் முதலில் புஷ்பாஞ்சலி குறிக்கப்படுகிறது. பின்னர் நிருத்தம் குறிக்கப்படுகிறது. அது இன்று அலாரிப்பு என்று சொல்வதை ஒத்துள்ளது. நிருத்தம் இவ்வாறு பலவகை 'வாத்யபிரபந்தீங்களுக்கு' ஏற்ப ஆடவேண்டும். பாடலில் எவ்வாறு பிரபந்தம் உண்டோ அதுபோல வாத்தியம் மட்டும் வாசிக்க தனிப் பிரபந்தங்கள் இருந்தன. இவற்றை **வாத்யப் பிரபந்தம்** என்றனர். இதன் பின்னர் '**கேயமான பிரபந்தங்களுக்கு நாட்டியம்** ஆடவேண்டும் என்று இந்நூல் கூறுகிறது.

கி.பி.13ம் நூற்றாண்டில் "ஜயஸேநாபதி" என்பவர் 'நிருத்த ரத்னாவளி' என்ற நூலை இயற்றியிருக்கிறார். காகதீய அரசன் அவையை அலங்கரித்தவர் இவர். தென்னாட்டுப் பண்பை அறிந்தவர். முதலில் "புஷ்பாஞ்சலி" ஆடிப் பின்னர் நிருத்தரங்கம் என்பதை ஆடவேண்டும்.

**பதம், கவிதை, துடுக்கு** எனப்பல அங்கங்களை ஆடவேண்டும். ஆடும் முறையில் சிற்சில வேறுபாடுகளைக் கொண்டு **சுத்தபத்ததி, விசித்திரபத்ததி, தேசிபத்ததி** என மூன்று வகைகளைக் கூறுகிறார்.

கி.பி.1825ல் தஞ்சையில் ஆண்டவர் மராத்திய மன்னர் இரண்டாம் சரபோஜி. இவர் நாட்டியத்தில் சிறப்பாக ஈடுபாடு கொண்டவர். பல நிருபணங்களை இவரே இயற்றியுள்ளார். இவர் காலத்தில் அரங்கேறி ஆடும் பெண்கள் 18 உருப்படிகளை ஆடியதாக அறிகிறோம். அவை கீழ்க் கண்டவாறு பெயர் பெறுகின்றன.

| | |
|---|---|
| 1. ஜயஸ்துதி | 5. சப்தம் |
| 2. சரணு சரணு | 6. வர்ணம் |
| 3. அலாரு | 7. பதம் |
| 4. சொல்ல | 8. ஸ்வரஜதி |
| 9. அபிநயபதம் | 14. பிரபந்தம் |
| 10. தில்லானா | 15. திரிபுட |
| 11. அபிநயபதம் | 16. சுலோகவர்ணம் |
| 12. ஜக்கினிபதம் | 17. கவுத்தம் |
| 13. கீதம் | 18. மங்களே |

இப்பெயர்கள் சற்று மராட்டியச் சாயலுடன் வழங்கும் தமிழ்ச் சொற்களே. அலாரிப்பு என்னுந் தமிழ்ச் சொல் 'அலாரு' என்றுள்ளதைக் காணலாம்.

சரபோஜியின் காலத்தில் வாழ்ந்தவர்கள்தாம் சின்னையா, பொன்னையா, சிவானந்தம், வடிவேலு என்று புகழ் வாய்ந்த தஞ்சை சகோதரர்கள். இவர்கள் தஞ்சைக் கோயிலில் நட்டுவனார்களாகவும், சரபோஜி அவர் மகன் சிவாஜி ஆகிய இருவர் அவைக்களத்திலும் நாட்யாசார்யர்களாகவும் திகழ்ந்தவர்கள். நாட்டியத்திற்குப் பல வர்ணங்கள் ஜதி முதலியவற்றைத் தமிழ், தெலுங்கு மொழிகளில் இயற்றியவர்கள். இவர்கள் இயற்றிய பல பாடல்களை இன்றும் நமது நாட்டியமணிகள் தமது ஆடல்களுக்குப் பயன் படுத்துகின்றனர். இன்று நம் பெண்கள் ஆடும் ஆடல் மரபை சீர் செய்தவர்கள் இவர்களே என்றும் இன்றைய நாட்டிய மரபின் தந்தை என இவர்களையே கூறவேண்டும் என்றும், இவர்களே, புஷ்பாஞ்சலி, அலாரிப்பு, ஜதிஸ்வரம், வர்ணம், பதம், சப்தம், தில்லானா என்ற வரிசையை ஏற்படுத்தியவர்கள் என்றும் சிலர் கூறுவர்.

### நாட்டியம்: தொடக்கம் முதல் மங்களம்வரை

இவர்களுக்கும் நூறு ஆண்டுகளுக்கு முன்னரே இன்று ஆடுவது போலவே பெண்கள் ஆடினர் என்பதற்கு இலக்கியச் சான்றுகள் உள்ளன. நிலக்கோட்டை ஜமீன்தார் நாகமகூளப்பநாயக்கர் மீது சுப்ரதீபக்கவிராயர் என்ற புலவர், ஒரு நூல் எழுதியுள்ளார். அந் நூலுக்கு '**கூளப்ப நாயக்கன் விறலி விடுதூது**' எனப் பெயர். இது மதுரையை விஜயரங்க சொக்கநாத நாயக்கர் ஆண்ட காலத்தில் எழுதப் பெற்றது. கி.பி.1725ஐச் சார்ந்தது. மதுரை மீனாக்ஷி அம்மன் கோயிலில்



தஞ்சாவூர் நாட்டியம்

ஆயிரக்கால் மண்டபத்தில் ஒரு நாட்டியப் பெண் ஆடியதாக இந்நூல் கூறுகிறது. அவள் தொடக்கம் முதல் இறுதிவரை என்னென்ன உருக்கள் (Items) ஆடினாள் எனத் தெளிவாகக் கூறுகிறது. முதலில் அப்பெண் தெய்வசுருதி பாடினாள். பின்னர் கைத்தாளம், மத்தளம், கைவீணை, பலகை, தித்தி, வேணு, சுரம் ஆகிய இசைக்கருவிகள் இசைத்தன. பின்னர் அப்பெண் 'புஷ்பாஞ்சலி' செய்தாள். அதன் பின் பிள்ளையார் கவுத்துவம், சுப்ரமண்யர் கவுத்துவம் ஆடினாள். பின்னர் ஒரு எடுப்பெடுத்தாள். அதன் பின்னர் நந்திகேசுவரரின் அபிநய தர்ப்பணத்தில் கூறியுள்ளபடி 'அலாரிப்பு' செய்தாள். பின்னர் 'கைச்சலாம்' செய்தாள். இதன் பின்னர் வரிசையாக 'தரு', 'ஜதி', கீதம் முதலியன ஆடினாள் என மேலும் தொடர்கிறது.

"...................தெய்வசுருதி காணும் இசை, ராகம், கைத்தாளம், மத்தளம், கை வீணை, பலகை, தித்தி, வேணு, சுரம் கோணாமல் கூடும் சுருதியுடன் கொம்பனையாள் சங்கீதம் பாடும் சுருதி இன்பம் பாலிக்க"

என அப்பாடல் தொடங்குகிறது. சிலப்பதிகார காலத்திலேயே ஆடல்தொடங்கும் முன் தெய்வப்பாடல் இரண்டு பாடப்பெற்றது எனக் கண்டோம். சுமார் 1800 ஆண்டுகளுக்குப் பிறகு இந்நூலில் 'தெய்வச்சுருதி' பாடப்பெற்றது என்று குறிப்பிட்டுள்ளதைக் காணலாம். நமது மரபு 2000 ஆண்டுகளுக்கும் மேலாகத் தொடர்ந்து

காப்பாற்றப்படும் மரபு என்பது இதிலிருந்து தெளிவாகிறது. புஷ்பாஞ்சலி செய்து **கணேச கவுத்துவம் சுப்ரமண்யர் கவுத்துவம்** கொண்ட பிறகு 'ஒரு எடுப்பெடுத்தாள்' எனக் கண்டோம். எடுப்பென்றால் என்ன?

கி.பி. 16-ம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் வேங்கடமகி என்பவர், தஞ்சை நாயக்கர் அரண்மனையில் அமைச்சராய் இருந்தார். அவர் சதுர்தண்டி பிரகாசிகை என இசையைப் பற்றி ஒரு நூல் சமஸ்கிருதத்தில் எழுதியிருக்கிறார். இதில் **எடுப்பு** என்ற தமிழ்ச் சொல்லை அப்படியே பயன்படுத்தியிருக்கிறார். அதற்கு இலக்கணம் வகுத்திருக்கிறார். வாய்ப்பாட்டில் 'ஆலாபம்' என்பது ஒரு தொடக்கநிலை. அது ஆயத்தம் என்றும் எடுப்பு என்றும் இரு பகுதியாக இருக்கும். ஒரு ராகத்தைப் படிப்படியாக வளர்ப்பதை எடுப்பு என்கிறார். இதற்கு ராகவர்த்தனி என்றும் பெயர் உண்டு. இதையே இப்பெண் எடுத்தாள் என இந்நூல் கூறுகிறது.

முகம்மதியர் படை எடுப்புக்குப் பின்னர் அவர்களது நாகரிகக்கூறுகள் சில நம் நாகரிகத்துடன் இணைந்தன. அவ்வாறு இணைந்தவற்றில் '**சலாம் செய்தல்** என்பது ஒன்று. கி.பி.1725லேயே இது நமது இசையுடனும், நாட்டியத்துடனும் இணைந்துவிட்டது என்பதற்கு இந்நூல் சான்று. நாட்டியத்தில் பெண்கள் முதலில் சலாம் செய்வது வரும். இதை இந்நூல் கைச்சலாம் செய்தாள் என்று கூறுகிறது. இராமநாதபுரத்தில் 1725-ல் தீட்டிய ஓவியங்கள் இராமலிங்க விலாசம் என்ற மாளிகையில் உள்ளன. அவற்றில், சில பெண்கள் சேதுபதி அரசரின் முன்னர் ஆடுவது போல் உள்ளன. ஒன்றில் ஆடும் பெண் 'சலாம்' செய்தல் தீட்டப்பட்டுள்ளது. தியாகராஜ சுவாமிகள் கூட தமது கீர்த்தனைகளில் **சலாமுரே** என்ற பதத்தைப் பயன்படுத்தி பாடியுள்ளார். தஞ்சாவூர் மராட்டிய அரசர்களின் அவையில் நாட்டிய மணிகள் சலாமிடுவது வழக்கமாயிருந்தது. சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் கூட "சலாம்" என்ற உருப்படியை பெண்கள் ஆடிவந்தனர். இப்பொழுது இது ஆடப்படுவதில்லை.

கைச்சலாத்தின் பிறகு இப்பெண் தரு, ஜதி, கீதம், பிரபந்தம், பதசாரி அபிநயம், கோப்பு, பேரணி, ஜக்கனி, கூத்து, தேசிகம் முதலியன ஆடினாள் என்றும் இறுதியில் 'ஜயமங்களம்' ஆடி முடித்தாள் என்றும் இவ்விரலி விடுதூது கூறுகிறது. ஆகமொத்தம் 18 உருப்படிகளை இப்பெண் ஆடியுள்ளாள் சரபோஜி நிருபணத்திலும் இவ்வாறு 18 உருப்படிகள் ஆடப்பெற்றன எனக் கண்டோம். 18 உருப்படிகளையும் ஆடிமுடிக்க சுமார் 4 மணிக்கும் மேலாகும். அக்காலத்தில் மக்கள் 4 மணி நேரம் அமர்ந்து பார்க்கும் மரபு இருந்தது. இக்காலத்தும் கிராம மக்கள் நீண்ட நேரம் ஆடவேண்டும் என விரும்புவதைக் காண்கிறோம்.



ஹிந்துஸ்தானி நாட்டியம்

ஆதலின் நாட்டியம் ஆடும் பெண், தான் ஆடும் உருப்படிகளை வரிசைப்படுத்தி ஆடுவது என்பது தொன்று தொட்டு வரும் மரபு என்பது தெளிவு: அண்மைக் காலங்களில் சிலர் தஞ்சை சகோதரர்கள் என்னும் சின்னையா பொன்னையா, சிவானந்தம் வடிவேலு ஆகிய நால்வரும் தான் சரபோஜி அவையில் இன்றுள்ள நாட்டிய மரபை சீர்செய்தார்கள், எனக் கூறுகின்றனர். தஞ்சை சகோதரர்கள் என்ன சீர் செய்தார்கள் என்பதற்குத் தெளிவான சான்றுகள் இல்லை.

### நாட்டியப் பெண் பாடும் மரபு

மேலும் கூளப்பநாயக்கர் விரலிவிடுதூது, ஆடுகின்ற பெண் இடையில் 'கீதம் பாடினாள்' என்று கூறுகிறது. அண்மைக் காலம் வரையில், நாட்டியம் ஆடும் பெண்ணுக்கு நன்கு பாடத் தெரிந்திருக்கவேண்டும். ஆடலின் இடையில் பாடவேண்டும். தற்காலத்தில் தெலுங்குதேச 'குச்சிபுடி' நடனத்தில் சிலர் இடை இடையே பாடுகின்ற மரபைக் கொண்டுள்ளனர். தமிழ் மரபில் இது முற்றிலும் கைவிடப்பட்டுள்ளது. அப்பர், ஞானசம்பந்தர் வாழ்ந்த காலத்தில் பெண்கள் ஆடும் போது' பாடவும் செய்தனர் என 'மாதர் பண்ணுடன் பாடி ஆட என்றும், 'இழைவளர் அல்குல் மாதர் இசை பாடி ஆட' என்றும் தேவாரப்பாடல்கள் குறிப்பதைக் காணலாம்.

**நாட்டியச் சொற்கள்**

நாட்டியத்தில் இன்று பயன்படுத்தப்படும் சில சொற்கள் எவ்வளவு தொன்மையானவை எனக் காண்போம். நமது பரதநாட்டியத்தில் 'கை', 'தை' என்ற சொற்களை சொல்லுகட்டில் பயன்படுத்துகிறார்கள். சுமார் 2000 ஆண்டுகளாக இச்சொற்களைப் பயன்படுத்துகிறார்கள் எனக் கல்வெட்டிலிருந்து அறிகிறோம். ஈரோட்டுக்கு அருகில் அறச்சலூர் என்ற இடத்தில் ஒரு மலையில் குகைப்பகுதி ஒன்று உள்ளது. அக் குகைத் தளத்தில் ஒரு கல்வெட்டு உள்ளது. அதில் 'தை த தை த தை' என பொறிக்கப்பட்டுள்ளது.

இதன் அருகில் இச்சொற்கோர்வைகளைக் கோர்த்தவன் பெயர் எழுதப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு கி.பி.2,-3ம் நூற்றாண்டைச் சார்ந்தது. 'சதி' என்ற சொல்லை அப்பர், சம்பந்தர் சுந்தரர் ஆகிய மூவரும் தமது பாடல்களில் பயன்படுத்துகின்றனர்.

*'சரியின் முன்கை நன்மாதர்*
*சதிபட மாநடமாடி' என்று சம்பந்தரும்,*

*"குடமுழவச் சதிவழியே அனல்கையேந்தி*
*கூத்தாடவல்ல குழகனாகி" என்று அப்பரும்,*

*கூடிய இலயம் சதிபிழையாமை*
*கொடியிடை உமையவள் காண" என சுந்தரரும்*
*பாடுவதிலிருந்து நாட்டியத்தில் 'ஜதி' என்ற சொல் 1300*
*ஆண்டுகளு க்கும் மேலாக பயன்படுத்தப்பட்டுள்ளது என்பது*
*தெளிவு. அதுபோல் "தோம் தாம்" என்று ஜதிச் சொற்களை*
*சம்பந்தர் அப்படியே பயன்படுத்துகிறார்.*

"தேம்தாம் என்று சேயிழையார் நடமாடும் திருவையாறே" என்று கூறுகிறார். அதுபோல் "தென்னாதெனா" என்ற சொற்களும் நாட்டியத்தில் பயன்படுகின்றன. இவற்றை மாணிக்கவாசக சுவாமிகள் தமது பாடலில்,

*"தென்னா தென்னாவென்று தெள்ளேணம் கொட்டோமோ"*

என்கிறார். இப்பொழுது ஆடலில் 'தில்லானா' என்று ஒரு ஆடலைக் குறிக்கின்றனர். இதில் 'திறனாதிறனா' என்ற சொற்கள் பயன் படுத்தப்படுகின்றன. 'திறனா திறனா' என்ற சொல்லும் பண்டைய நூல்களில் காணப்படுகிறது. கி.பி.600ல் ஆண்ட பல்லவ அரசன் மகேந்திர வர்மன் தான் எழுதிய 'மத்தவிலாசப் பிரஹஸனம்' என்ற நூலில் **'திறண திறண'** என்று குறித்துள்ளான். 'திறணம்' என்ற சொல் **"தெள்ளணம்"** என மருவி வந்துள்ளதோ என்று கூட ஐயப்படலாம்.

இன்று நாட்டியத்தில் பயன்படுத்தப்படும் வர்ணம், கீதம், ஜதி, வலி, நிருத்தம், சொக்கம், லயம், கரணம் முதலிய பல சொற்களும் தேவாரப் பதிகங்களில் பயன் படுத்தப் படுகின்றன. இன்று 'பதம்' என்று ஒரு உருப்படி ஆடப் படுகிறது. அது அபிநயத்தை அடிப்படையாகக் கொண்டது. சிருங்காரச் சுவையை பிரதானமாகக் கொண்டது. கி.பி.17-ம் நூற்றாண்டில் வாழ்ந்த க்ஷேத்ரஞரின் பதங்கள் புகழ் வாய்ந்தவை, பதம் என்ற சொல் எதிலிருந்து வந்தது? பரத முனிவர் தாண்டவம் என்றும் லாஸ்யம் என்றும் இருவகை நடனங்களைக் குறிக்கிறார். **தாண்டவம்** சிவபெருமான் ஆடியது. **லாஸ்யம்** என்பது உமாதேவி ஆடியது. உமை அன்னை உஷைக்கு லாஸ்யத்தைக் கற்றுக்கொடுத்தாள். லாஸ்யம் என்பது **லஸனம்** என்னும் சொல்லிலிருந்து தோன்றியது. ஒரு ஆணும் பெண்ணும் ஒருவர் மீது ஒருவர் கொண்ட காதலால் ஏற்படும் மனோபாவங்களை வெளிப்படுத்துவது லாஸ்யம் எனப்படும்.

*லஸநாத் லாஸ்யம் இத்யுக்தம்*
*ஸ்திரீபும்பாவ ஸமாச்ரயம்*

என்று பரதர் கூறுகிறார். ஆதலால் சிருங்காரச் சுவையை பிரதானமாகக் கொண்டு ஆடப்படுவது லாஸ்யம் என்னும் நடனமாம். வெறும் பாடலில் மட்டும் ச்ருங்காரத்தை வெளிப்படுத்துவது **கேயபதம்** என்றும் நாட்டியத்தில் பயன்படுத்துவது **அபிநயபதம்** என்றும் அழைக்கப்பட்டன. சுமார் 200 ஆண்டுகளுக்கும் முன்னர் கூட நாட்டியத்தில் பயன்படுத்துவதை அபிநயபதம் என்றே அழைத்தனர். அச்சொல்லே சுருக்கமாக இக்காலத்தில் **பதம்** என்று அழைக்கப்படுகிறது.

பண்டைய தமிழகத்தில் **அகக்கூத்து** என்றும, **புறககூத்து** என்றும் இருவகைக் கூத்துக்கள் இருந்தன. இவற்றில் அகக்கூத்து என்பது காதல் சுவையை முதன்மையாகக்கொண்டது. இதை **அகமார்க்கம்** என்றும் கூறுவர். **லாஸ்யம்** என்றாலும் **அகமார்க்கம்** எனறாலும் ஒன்றே. **குரவைக்கூத்து** என்று சிலப்பதிகாரம் கூறும் ஆடல் அக மார்க்கத்தைச் சார்ந்ததே. இது வட இந்தியாவில் **ராஸகேளி** என்று பிற்காலத்தில் அழைக்கப்பட்டது. அகமார்க்கத்துக்கு எனத் தனியாகப் பாடல்கள் உண்டு. **கந்தம்** முதல் **பிரபந்தம்** வரை உள்ள பாடல்கள் அகமார்க்கத்துக்கு உரிய பாடல்களாகும் என்று உரையாசிரியர்கள் கூறுவர். இதிலிருந்து பிரபந்தம் என்ற பாடல் அகச்சுவையைப் பிரதானமாகக் கொண்டு நாட்டியத்திற்காகப் பயன்பட்டது எனபது தெளிவு. தமிழ்நாட்டில் 96 வகையான பிரபந்தங்களைக் குறிப்பர. இப்பிரபந்தங்களை ஆராயும் போது 60க்கும் மேற்பட்டவை காதல

சுவையை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்டவை. பரிபாடல், கலித்தொகை ஆகிய நூல்கள் தமிழில் உள்ள மிகத்தொன்மையான இசைப் பாடல்களாகும். இவற்றில் கலித்தொகை முற்றிலும் அகச்சுவையைப் பொருளாகக் கொண்டது. நாட்டியத்திற்காக இயற்றப்பட்ட இசைப்பாடல்கள் இவை. அதே போன்று பரிபாடலும் நாட்டியத்திற்காகப் பயன்படுத்தப்பட்ட இசைப்பாடல் எனக் கருதுகிறேன். புறுநானூறு என்னும் தொகுப்பு **புறக்கூத்துக்கும்**, அகநானூறு, நற்றிணை போன்ற சங்க இலக்கியங்கள் **அகக்கூத்துக்கும்** பயன்படுத்தப்பட்ட இசைகள் எனவும், **அகம்**, **புறம்** என்னும் பிரிவே இதன் அடிப்படையில் தோன்றியதோ என்றும் கொள்ளலாமோ எனில். கொண்டால் தவறில்லை, பொருத்தமே என்பது எனது கருத்து. 'ஆற்றுப்படை' என்னும் வகை பிரபந்தங்களில் ஒன்றாகக் கூறப்படுகிறது. பாணரும் விறலியரும் இவ்வகைப் பிரபந்தங்களில் இடம் பெறுதல் காணலாம்.

**கோவை, கலம்பகம், பரணி, உலா, தூது, பிள்ளைத் தமிழ், ஊசல், சிந்து** ஆகிய பாடல்வகைகள் நாட்டியமாக ஆட எழுதப்பட்டவை. ஆழ்வார்கள் பாடிய பாடல்களை **திவ்யபிரபந்தம்** என்று சொல்கிறோம். இவை தெய்வப் பாடல்கள். தெய்வத்தின் மீது பெண்கள் பாடி ஆடுபவை. நாட்டியத்திற்காகப் பயன்பட்டவை. இன்றும் திவ்ய பிரபந்தப்பாடல்கள் அனைத்திற்கும் அரையர் என்போர் பாடி அபிநய நாட்டியம் புரிவர். இவை நாட்டியத்தின் மூலம் தெய்வ வழிபாடாக மிளிர்ந்தவை என்பதைக் காட்டும். திவ்ய பிரபந்தங்களில் பல பாடல்களும் அகத்துறைப் பாடல்களாக உள்ளன. இவற்றை ஆடல் மகளிர் கோயில்களில் பாடி ஆடும்போதுதான் இவற்றின் அர்த்தம் பொருத்தமாக அமைகிறது. இம்மரபு அறியாது சில ஆராய்ச்சியாளர்கள் இப்பாடல்களை அடியார்கள் பாடுகிறார்கள் என்றும் இது மனோதத்துவத்துக்கே முரண்பாடு என்றும் எழுதுவது பொருத்தமற்றது. மரபு தெரியாத ஆராய்ச்சியாகும்.

தேவாரப் பாடல்கள் பலவும் ஒரு பெண் சிவபெருமான் மீது காதல் கொண்டு, அதை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளதைக் காண்கிறோம். கீழ்வரும் பாடலைக் காணுங்கள்.

*"வண்ணமும் வடிவும் சென்று கண்டிலன்*
*எண்ணி நாமங்கள் ஏத்தி நிறைந்திலள்*
*கண்ணுலாம் பொழில்சூழ் கழிப்பாலைஎம்*
*அண்ணலே அறிவான் இவள் தன்மையே"*

என்று அப்பர் பாடுகிறார்.

*"சொன்மாலை பயில்கின்ற குயிலினங்கள் சொல்லீரோ,*
*பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்*
*முன்மாலை நகுதிங்கள் முகிழ்விளங்கு முடிச்சென்னி*
*பொன்மாலை மார்பன்என் பொதுநலமுண்டு இகழ்வானோ*

என்னும் அப்பர் பாடலும் அகப் பாடலே.

பண்டைய தமிழகத்தில் கோயில் வழிபாட்டில் ஒரு அங்கமாக நாட்டியம் திகழ்ந்தது. ஆதலின் பாடலும் ஆடலும் இணைந்தே வளர்ந்தன. பல ஆயிரக்கணக்கான பாடல்கள் தோன்ற ஊக்குவிக்கும் உணர்வாகத் திகழ்ந்தது நாட்டியமே. ஆதலின் தேவாரப் பாடல்கல் நாட்டியத்திற்குப் பயன்பட்டன எனில் அது மிகையாகாது.

மாணிக்கவாசக சுவாமிகள் எழுதியவை திருவாசகம் என்றும் திருக்கோவையார் என்றும் அழைக்கப்படுகின்றன. திருக்கோவையார் முற்றிலும் காதல் சுவையின் அடிப்படையில் எழுதப்பட்டது. அன்று முதல் இன்று வரை ஆன்றோர் இதை மாணிக்கவாசக சுவாமிகளே எழுதினார் என்பர். ஆயினும் இன்று சிலர் இதில் உள்ள காதற் சுவையைக் காணில் மணிவாசக சுவாமிகள் இதை எழுதியிருக்கமாட்டார் என்கின்றனர். ஆடும் பெண்கள் கோயில்களில் பாடி ஆட எழுதப்பெற்றது ஆதலின் மாணிக்கவாசகரே எழுதினார் என்பதில் ஐயமில்லை. மாணிக்கவாசகரின் திருவாசகத்திலும் பத்துக்கும் மேற்பட்ட பாடல்கள் ஆடுவதற்காக எழுதப்பட்டவை. திருவாசகத்தில் கீழ்வரும் பாடல்கள் அவ்வகையைச் சார்ந்தவை.

1. திருவெம்பாவை
2. அம்மானை
3. பொற்சுண்ணம் இடித்தல்
4. தெள்ளேணம் கொட்டல்
5. திருச்சாழல்
6. கோத்தும்பி
7. பூவல்லி கொய்யல்
8. உந்தீபற
9. தோணொக்கம்
10. பொன்னூசல்
11. அன்னைப்பத்து
12. குயில் பத்து

முதலிய அனைத்தும் நாட்டிய மகளிர் ஆடுவதற்காக எழுதப்

பெற்றவை. கோயில்களில் திருவாசகப் பாடல்களைத் தேவரடியார் பெண்கள் பாடி ஆடினர் என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. குலோத்துங்க சோழன் காலத்தில் முதல் பத்து பாடுவதற்கும், இரண்டாம் பத்து, கடைக்காப்பு, சாழல் பாடி ஆடவும் விட்ட நிவந்தங்களைக் கல்வெட்டு கூறுகிறது. ஆதலின் திருவாசகப் பாடல்கள் ஆடப்பெற்றன என்பதில் ஐயமில்லை.

பாண்டிய-பல்லவர் ஆகிய அரசர்களின் அவையில் பல பாடல்கள் எழுதப்பட்டன. கி.பி. ஏழாம் நூற்றாண்டில் திருஞானசம்பந்தர் காலத்தில் வாழ்ந்தவன் அரிகேசரி பராங்குச மாறவர்மன் என்ற பாண்டிய மன்னன், இவனுக்கு நெல்வேலி வென்ற நெடுமாறன் என்றும் நின்றசீர் நெடுமாறன் என்றும் பெயர் உண்டு. அவன் மீது பாடப்பெற்றது **பாண்டிக் கோவை** என்னும் நூல். இந்நூலின் பாடல்கள். பாண்டிய மன்னனின் சிறப்பையும் வெற்றிகளையும் பாடி ஒரு பெண் அவன் மீது கொண்ட காதலை எடுத்தியம்புவதாக உள்ளது. ஆதலின் இப்பாடல்கள் பாண்டியன் அவையில் நாட்டியமகளிரால் ஆடப்பட்டவை எனலாம். இதேபோன்று தெள்ளாறெறிந்த நந்திவர்மன் மீதுபாடப்பட்டது **நந்திக்கலம்பகம்** என்னும் நூல். இதில் உள்ள பாடல்களும் நந்திவர்மனைத் தலைவனாகக் கொண்டு தலைவியின் உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்துகின்றன. அது மட்டுமின்றி இவை இசைப் பாடல்களாகவும் உள்ளன. **"அம்போதரங்கம்"** என்னும் இலக்கண அமைப்பில் தாளத்திற்கு ஏற்ப அமைந்த பாடலேயாகும். அதலின் இப்பாடல்கள் நந்திவர்மனின் அவையில் நாட்டிய மகளிர் பாடி ஆடியவையே.

சோழர்காலத்தில் நாட்டியம் மிக உன்னத நிலையை அடைந்திருந்தது. அப்பொழுது பல பாடல்கள் நாட்டியத்திற்காக இயற்றப்பட்டிருக்கவேண்டும். அவை வை எனத் தெளிவாகக் கூறச் சான்று கிடைத்தில. ஆயினும் ஒன்றிரண்டு மட்டும் நாட்டியத்திற்காக இயற்றப்பட்டவை எனத் திட்டவட்டமாகக் கூறலாம். குலோத்துங்க சோழனின் கலிங்கத்து வெற்றியைக் கூறுவது **கலிங்கத்துப்பரணி.** இது ஜயங்கொண்டார் இயற்றியது.

கலிங்கத்துப்பரணியின் அமைப்பைக் காணும்போது அது குலோத்துங்கனின் அவையில் நாட்டிய நாடகமாக ஆடப்பட்டது எனலாம். அதே போன்று ஒட்டக்கூத்தர் இயற்றியநூல் தக்கயாகப்பரணி என்பது. தக்கயாகப் பரணி கும்பகோணத்துக்கு அருகில் உள்ள தாராசுரம் என்னும் இராஜராஜேச்சுரத்து இறைவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டது. அக்கோயிலில் நாட்டிய நாடகமாக ஆடப்பெற்றது.

அதேபோன்று விக்ரம சோழன்உலா, குலோத்துங்கச் சோழன் உலா, இராஜராஜன் உலா என்னும் மூவர் உலாக்களும் அம் மன்னர் களின் அவையில் நாட்டியமாக ஆடப் பெற்றவை. பிற் காலத்தில் பல பாடல்கள் நாட்டியத்திற்காக இயற்றப் பட்டன. அருணகிரியாரின் திருப்புகழும், குமரகுருபரர் இயற்றிஇய பிரபந்தங்களும் இவ்வகையைச் சார்ந்தவையே எனலாம்.


நாட்டியப் பெண் - மதுரை

**நாட்டியம் கோயில் வழிபாட்டின் அங்கம்:**

கோயில்களில் வழிபாட்டின் அங்கமாக நாட்டியம் திகழ்ந்தது. கோயில் வழிபாடு 16 அங்கங்களை உடையது. **ஷோடசோபசாரம்** என்று இதைக் கூறுவர். இதில் 'கீதவாத்தியம்' பதினான்காவது அங்கம் என்றும் நிருத்தம் பதினைந்தாவது அங்கம் என்றும் ஆகம நூல்கள் கூறுகின்றன: ஈசான குருதேவ பத்ததி என்ற நூல், வழிபாட்டில் நிருத்தம் எவ்வாறு பயன்பட்டது எனக் கூறுகிறது. கோயிலை முதலில் வலம் வரும்போது வாத்யங்கள் மத்யமத்தில் இசைக்கப்படவேண்டும் இரண்டாவது சுற்றில் அதாவது ஸ்ரீபலி கொடுக்கும்போது விளம்பிதத்தில் ஸங்கீதம், லாஸ்யம், தாண்டவம், மண்டனம் ஆகியவற்றை புரிதல் வேண்டும், மூன்றாவதாக வலம் வரும்போது கீதமும், வாத்தியமும் துருதத்தில் இசைக்கப்படவேண்டும் என்று கூறுகிறது.

ஸ்ரீபலி என்பது கோயில்களில் நாள்தோறும் சந்திதொறும் நடைபெறும் ஒரு வழிபாடு. இதில் பிரம்மா முதலிய தேவதைகளுக்கும் திகபாலர்களான இந்திரன், அக்னி, யமன், நிருதி, வருணன், வாயு, சோமன், ஈசானன் ஆகிய தெய்வங்களுக்கு அன்னம் படைக்கப்படும். அவ்வமயம் நிருத்தம் புரியவேண்டும். ஒவ்வொரு தேவதைக்கும் தனித் தனி நிருத்தம் உண்டு. தாளங்களும் வெவ்வேறு தாளங்களாகும்.

**சிதம்பர க்ஷேத்ர சர்வஸ்வம்** என்ற நூலில் சில சிறப்புச் செய்திகள் கூறப்படுகின்றன. "வீதிகளில் அந்தந்த திசைக்கு ஏற்ற கீத

நாட்டியத்தையும் பரதர் குறிக்கும் பிரமணம் முதலிய விலாச நிருத்தியங்களையும் செய்வர். கணிகையர்கள் பரதர் கூறிய நாட்டியத்தைப் புரிவர் என்றும் கூறுகிறது.

திருமால் கோயிலில் புரிய வேண்டிய நிருத்தங்கள் பதினெட்டுக்கும் மேற்பட்டவை குறிக்கப் படுகின்றன இவற்றில் **மண்டலம், பிருஷ்ட குட்டிமம், கமலம், கமலவத் விருத்தம், ஸர்வதோபத்ரம், விலாசம், கேதகம் விஷ்ணு க்ராந்தம், பத்ரமாலி, காந்தாரகுட்டிமம், விருத்த குட்டிமம், பாரிபத்ரம், கடிபந்தனம்** என்பவை நாட்டியவகைகள். சைவக்கோயில்களில் **அஜபா நடனம், குக்குட நடனம்** முதலிய நடனங்கள் இடம் பெற்றன.

கல்வெட்டுக்களில் நாட்டியத்தைப்பற்றிப் பல செய்திகள் உண்டு. அவற்றைப்பற்றி விரிந்த ஒரு நூலே எழுதலாம். பரதநாட்டியவரலாறு, குறிப்பாகத் தமிழகத்தில் வளர்ந்த விதம் இன்னம் சிறக்க எழுதப்பட வேண்டும். அம்முயற்சியின் ஒரு அங்கமே இது.

*பண்ணியல்பாக பத்திமையாலே*
*பாடியும் ஆடியும் பயிலவல்லோர்கள்*
*விண்ணவர் விமானம் கொடுவர ஏறி*
*வியனுலகாண்டு வீற்றிருப்பவரே*

*சம்பந்தர்*



நாட்டியம்

# 42. கோயில் தழுவிய கூத்து

பரமானந்த மூர்த்தியாகத் திகழும் பரம்பொருள் பரமஆகாசமாக எங்கும், எதிலும் வியாபித்து நிறைந்து நிற்கிறார். அந்த பரமாகாச வெளியிலே தோன்றும் அசைவுதான் வாயுவாகி, தீயாகி, நீராகி, நிலமாகி, எண்ணற்ற உயிர்களாகி, உலகாகி பரிணமிக்கின்றன என்பதை, 'ஆகாசாத் வாயு. வாயோர் **அக்னி, அக்னேர் ஆப:. அத்பய: பிருத்வீ** என்று வேதம் கூறுகிறது. பரமாகாசத்தில் தோன்றும் தொடக்கம். அசைவுதான் 'நாதம்' எனப்படுவது. ஆதலின் பரமனையே நாதஸ்வரூபமாகத் திகழ்பவர் என்றும், 'நாததனு' என்றும் கூறுகிறோம். அந்த தொடக்க அசைவுதான் 'ஓம்' காரமாக உருவெடுத்து, மந்திரஸ்வரூபமாக வெளிப்படுகிறது.

நம் இந்து சமயத்தில் உருவ வழிபாடு செய்கிறோமே சிலையிலோ, படத்திலோ அல்லது உருவற்ற கோளகமாகவோ... இவை அனைத்திலும் மந்திரஸ்வரூபமாக கடவுளை ஆவஹித்து வழிபடுகிறோம். அதனால் தான் கோயில் பூஜைகளில் மந்திரத்துக்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கிறோம். "மந்திரமும், தந்திரமும் ஆனான் கண்டாய்" என்பார் அப்பர் பெருமான். மந்திரத்தைக் கேட்டாலே தெய்வநினைவுதான் தோன்றும்.

இதேபோல பரமாகாச வெளியில் தோன்றும் அசைவுதான் இசையாகவும் பரிணமிக்கிறது. அசையே இசையாக, அலை அலையாக வெளிப்படுகிறது. அலைகளின் அசைவு வெவ்வேறு வகையில் சுழன்று வரும்போது, அவற்றிற்கு வெவ்வேறு பெயர் கொடுத்து ராகங்கள என அழைக்கிறோம். பரவெளியில் தோன்றும இசையும் பரமனின் தோற்றமே. ஆதலின், "பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி" என்பார் அப்பர் பெருமான். ஆன்றோர் 'சப்த பிரும்ம மயம்' என இவ்வுலகையே கூறுவர். உலகினில் மனிதர்தம் குரலில் இவ்விசை வெளிப்படுகிறது. குரல் வெறும் அசைவு கொடுத்தால் ஓசையாகவும், பண்படுத்தி வெளிப்படுத்தின் இசையாகவும் வருகிறது. குழலில் வெளிப்படுகிறது. முழவில் வெளிப்படுகிறது. பல்வகைக் கருவிகளால் வெளிப்படுகிறது. பகவனைப் பூஜிக்கும்போது மணி அடித்து வணங்குகிறோமல்லவா? மணியின் நாதம் கேட்டாலே பூஜை நினைவுதானே - கடவுள் நினைவுதானே நமக்கு வருகிறது! அதுபோல


கோணேரிராஜபுரம் வீதி உலா ஓவியம்

இசையைக் கேட்டாலே பரமனின் நினைவே நிறைந்து நிற்கும் வகையில் கோயில் வழிபாட்டில் இசையே இன்றியமையா அங்கமாக வைத்தார்கள் முன்னோர். எவ்வாறு மந்திரம் சொல்லி மந்திரமூர்த்தியாக கடவுளைப் பூஜிக்கிறோமோ அதேபோல, இசை பாடி சங்கீத ஸ்வரூபமாக பரமனைப் பூஜிப்பதும் கோயில் வழிபாடுதான். அதனால் வீணாதரதக்ஷிணாமூர்த்தியாக, குழலூதும் கோவலனாக, அங்கத்தில் வீணை ஏந்திய தேவியாக வணங்குகிறோம்.

இதேபோல பரவெளியில் தோன்றும் அசைவு ஒரு குறிப்பிட்ட இடைவெளியில் தோன்றி அலையாக சுழன்று வரும்போது, கண்களால் காணப்படும் ஆடலாக வெளிப்படுகிறது. குறிப்பிட்ட இடைவெளியில் காலபிரமாணத்தில் ஓசை ஏற்படும்போது அதைத் தாளம் என்கிறோம்.

அது காதால் கேட்கப்படுகிறது. அது அலை அலையாக மேலும் கீழும், முன்னும் பின்னும், இடையிலும் உருவாகி அசைந்து தோன்றும்போது அதை ஆடல் என்கிறோம். அந்த ஆடல் மென்மையாக வெளிப்பட்டால் லாஸ்யம் என்றும், கடுமையாக வெளிப்பட்டால் தாண்டவம் என்றும் அழைக்கிறோம். இரண்டுமே பரமனின் தோற்றமே. அதனால்தான் பரம்பொருளை ஆடலின் தெய்வமாக ஆனந்ததாண்டவமூர்த்தியாக, ஆடவல்ல பெருமானாக, நடராஜ தத்துவமாக வணங்குகிறோம். பக்திநிலையை அடைந்த ஞானிகளும், யோகிகளும் பரமனை பரவெளியில் ஆடும் பெருமானாகத்தான் கண்டிருக்கிறார்கள். அப்பர் பெருமானின் பாடலைப் பாருங்கள்.

*"பக்தனாய் பாடமாட்டேன்*
*பரமனே பரமயோகீ*
*எத்தினால் பக்தி செய்கேன்*
*என்னை நீ இகழ வேண்டா*

*முத்தனே முதல்வா*
*தில்லை அம்பலத்தே ஆடுகின்ற*
*அத்தா உன் ஆடல் காண்பன்*
*அடியனேன் வந்தவாறே”*

என்று பாடுகிறார்.

## ஆடல் பரப்ரம்மஸ்வரூபம்

**நாட்டிய பிரும்மம்.** மந்திரம் பூஜைக்கு எவ்வளவு முக்கியமோ, இசை வடிவிலும் இசைக் கருவி வடிவிலும் கீதம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் நாட்டியத்திற்கும் இருந்தது அதனால்தான். ‘பரமனே, நீ மந்திரமாக இருக்கிறாய்! நீ இசையாகி நிற்கிறாய்! நீ ஆடலாக வெளிப்படுகிறாய்!” என உருவகிப்பதுதான் நமது பூஜை முறை. இசையின்றி, ஆடல் இன்றி பூஜை நிறைவு பெறுவதில்லை. இதனால் தான் நமது கோயில்களில் மந்திரத்தோடு இசையும், பாடலும் முறையே பயின்றவர்களால், அதற்காகவே தங்களை அர்ப்பணித்துக் கொண்டவர்களால் படைக்கப்பட்டது. பண்டைக் காலத்தில் கோயில்களில் பாடுபவர்கள் முறையாய் தீட்சை பெற்றவர்களாக இருக்க வேண்டும் என்ற நியதி இருந்தது. தஞ்சாவூர் இராஜராஜேச்வரம் கோயிலில் தேவாரப் பதிகங்களைப் பாட இராஜராஜன் ஐம்பதின்மரை நியமித்தான். இவர்கள் அனைவரும் தீட்சை பெற்றவர்களாகத் திகழ்ந்தனர். அதுபோல நாட்டியம் ஆடுபவர்களும் முறையாய் பயின்று அதற்குரிய யோக்கியதை உள்ளவர்களாய் திகழ்ந்தனர். தங்களை கடவுள் பணிக்கே அர்ப்பணித்துக் கொண்டவர்களாக, அடியார்களாக, தாசர்களாகத் திகழ்ந்தனர். நாட்டியப் பெண்களுக்குத் ‘தேவரடியாள்’ என்று பெயர் இருந்தது.



நாட்டிய சிறப்பம், தில்லை

கோயில்களில் கீதமும், வாத்தியமும், நிருத்தமும் எப்பொழுதும் இருந்தது. இதை 'நிருத்த கீத வாத்யம்' என்று சம்ஸ்கிருதத்தில் கூறுவர். 'கொட்டாட்டுப் பாட்டு' என்பது தமிழ் வழக்கு. 'கொட்டாட்டுப் பாட்டாகி நின்றாய் போலும்' என்பர் தேவாரப் பெரியோர்.

கோயில் தோன்றிய காலத்திலிருந்தே இசையும், நாட்டியமும் கோயிலோடு இணைந்த கலைகளாகவே பரிணமித்து வந்துள்ளன. "பதி ஆவது நட்டக் கொட்டாட்டறா நல்லூர்" என்பார் சம்பந்தப் பெருமான்.

*"பண்ணின் நல்ல மொழியார்*
*பவளத்துவர் வாயினார்*
*எண்ணில் நல் குணத்தார்*
*இணைவேல் வென்ற கண்ணினார்*
*வண்ணம் பாடி வலிபாடி*
*தம் வாய்மொழி பாடவே*
*அண்ணல் கேட்டுகந்தானும்*
*ஐயாறுடை ஐயனே"*

என்று திருஞானசம்பந்தர் கோயில்களில் பாடுவதற்கு பெண்களும் இருந்தனர் என்பதைக் காட்டுகிறார். இவ்வாறு பாடுவோருக்கு 'முறைமாதர்' என்றும் பெயர் உண்டு என.

*'தவம் மலி பத்தர் சித்தர்*
*மறையாளர் பேண*
*முறை மாதர் பாடி மருவும்'*

என்ற சம்பந்தர் தேவாரத்திலிருந்து அறிகிறோம்.

நம் கோயில்களில்தான் எத்தனை இசைக் கருவிகள் இருந்தன? எண்ணில் இசைக் கருவிகள் இருந்தனவாம் - சம்பந்தர் தம் தேவாரத்தில் கூறுகிறார்.

*"கத்தரிகை துத்திரி கறங்குதுடி*
*தக்கையொடு இடக்கை படகம்*
*எத்தனை உலப்பில் கருவித்திரள்*
*அலம்ப இமையோர்கள் பரச*
*ஒத்துஅற மிதித்து நடம்இட்ட ஒருவர்"*

என்கிறார். காரைக்கால் அம்மையார் தமது பதிகத்தில், அன்று கோயிலில் இருந்த இசைக்கருவிகளைப் பட்டியல் போட்டே கூறுகிறார் எனலாம்.

*"துத்தங் கைக் கிள்ளை விளரி தாரம்*
*உழைஇளி ஓசை பண் கெழுமப் பாடி*
*சச்சரி கொக்கரை தக்கையொடு*
*தகுணிதம் துந்துபி தாளம் வீணை*

*மத்தளம் கரடிகை வன்கை மென்தோல்*
*தமருகம் குடமுழா மொந்தை வாசித்*
*தத்தனை விரவினோடாடும் எங்கள்*
*அப்பனிடம் திருஆலங்காடே"*

- என்பார்.

சச்சரி, கொக்கரை, தக்கை, தகுணிதம், துந்துபி, தாளம், வீணை , மத்தளம், கரடிகை, வன்கை, மென்தோல், தமருகம், குடமுழா, மொந்தை இவை எல்லாம் இசைக் கருவிகள். நம் கோயில்களில் இருந்தவைதாம்.

கோயில் வழிபாட்டைப் பற்றிக் கூறும் நூல்களில் 'தந்திர சமுச்சயம்' என்பது ஒரு நூல். இதில் சுவாமியை திருஉலா எடுத்து வரும்போது எத்தனை கருவித்திரள்கள் வாசிக்கும், பெண்கள் பாடுவர் என,

*"சங்கப் ரேங்கத சடுல*
*படஹோத்தாள ஊருபேரி*
*ரங்கத் ச்ருங்க: உட்டமர டமரு*
*உத்தீப்ரவீணா: ப்ரவீணா:*
*டக்கா டுக்கா விரல முரளீ*
*கர்மடா:ச அபியாயு:*
*ஸ்பாயத் தீபா: தம் இஹ மஹித:*
*உத்தாம ஹேளா: மஹேளா:"*

சங்கம், படஹம், தாளம், ஊருபேரி (இடுப்பில் கட்டிக் கொண்டு தொடையில் தாங்கி அடிக்கும் பேரி), கொம்பு, காளம், உட்டமரு, டமரு, வீணை, டக்கை, உடுக்கை, முரளீ (குழல்) இவற்றை இசைப்பவர்கள் முன்னே செல்ல, எழிற்பெண்கள் ஆடிக்கொண்டு செல்வர் என்பது இதன் குறிப்பு.

கோயில்களில் தினம் செய்யும் பூஜைகளைப் பல உபசாரங்களாகப் பிரிக்கும் மரபு உண்டு. கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம் என வரிசையாக இவ்வைந்தும் செய்யப்படுமானால் இதை 'பஞ்சோபசாரம்' என்று சொல்வர். இதன் பின் மற்ற திசைக் காவலர்களுக்கும், பரிவார தெய்வங்களுக்கும் நடக்கும் வழிபாடு ஸ்ரீபலி எனப்படும். இவ்வாறு நடைபெறும் பூஜையில் தீபம் முடியச் செய்தால் அதற்கு அர்ச்சனை என்று பெயர். இதில் நைவேத்யம் இல்லை. நைவேத்யம் முடிய செய்யும் வழிபாட்டை பூஜனை என்பர். பலி முடிய செய்யும் வழிபாட்டை சாந்தி என்று சொல்வர்.

*"தீபாந்தம் அர்ச்சனம் ப்ரோக்தம்*
*நைவேத்யாந்தம் து பூஜனம்*



தக்கயாகப்பரணி - ஒரு காட்சி

*பல்யந்தம் சாந்திகம் ப்ரோக்தம்*
*பூஜா ஹி த்ரிவிதா உச்யதே"*

என்று கூறுகிறது. 'காமிகாமம்' என்னும் நூல். கோயில்களில் மூன்று கால பூஜைகள், பலிவரை நடைபெற வேண்டும். மூன்று காலமும் இருபத்து நான்கு வாத்தியம் வாசிப்பவர்கள் இருக்க வேண்டும். 34 அல்லது 24 அல்லது குறைந்தது 10 பேராவது அழகும், யௌவனமும் உள்ள பெண்கள் நிருத்தம் புரிய வேண்டும்.

*"வாத்யகானாம் சதுர் விம்சத்*
*சர்வ வாத்ய சமன்விதம்*
*கணிகா: சதுஸ்த்ரிம்சத்*
*சதுர்விம்சதி வா தச*
*ரூப யௌவன சம்பன்னா:*
*த்ரிகாலம் நிருத்தம் ஆசரேத்"*

இது சிறந்தது என்று காமிகாமம் கூறுகிறது. ஐம்பது பெண்கள் நாட்டியமும், முப்பத்து நான்கு வாத்தியக்காரர்களும் இருந்தால் அதிலும் சிறந்தது என்றும்; ஐம்பது வாத்தியங்களும் 216 பெண்கள் ஆடலும் இருந்தால் மிகமிகச் சிறந்தது என்றும் அதே ஆகமநூல் கூறுகிறது.

தஞ்சாவூரில் இராஜராஜ சோழன் 250-க்கும் மேற்பட்ட வாத்தியக்காரர்களையும், 400-க்கும் மேற்பட்ட பெண்களின் ஆடல்களும் நாள்தோறும் நடைபெற அமர்த்தினான். இந்திய நாட்டில்

வேறு எந்தக் கோயிலிலும் இல்லாத அளவுக்குப் பாடுபவர்களையும், இசைக்கருவி வாசிப்பவர்களையும், ஆடல் மகளிரையும் அமர்த்தி கலையையே தெய்வமாக உருவகித்துக் காட்டினான்.

தமிழ்நாட்டில் மட்டும் 35,000 கோயில்கள் பட்டியலில் இப்பொழுது உள்ளன. இவற்றில் 40 சதவிகிதம் (அதாவது 12,000 கோயிலுக்கும் மேல்) ஒருவேளை பாடுபவர்கள் கூட கிடையாது. வாத்தியமா? இருந்த கோயில்களில் எல்லாம் வாத்தியங்கள் தூங்குகின்றன (தொங்குகின்றன). ஒரு கோயிலில்கூட ஒரு நாளைக்கு ஒருவேளை ஆடல் கிடையாது ஏன்? சமுதாயச் சீர்திருத்தம் என்ற பெயரால் ஆடலையே நிறுத்திவிட்டோம். அட, பெண்கள் ஆடுவதைத்தான் நிறுத்தினோம்! ஆண்கள் ஆடலாமே! எல்லாவற்றிலும் மேலை நாட்டைக் காப்பியடிக்கிறோம் நாம். அங்கு 'பேலே' நாட்டியத்தை எத்தனை ஆண்கள் கற்றுக் கொண்டு ஆடுகிறார்கள்? பின்பற்றலாமே!

நாட்டியத்துக்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்டாள் பரவையார். திருவாரூர்க் கோயிலில் நாட்டியம் ஆடிய பெண். அவளை சுந்தரமூர்த்தி நாயனார் திருமணம் செய்து கொண்டார். அந்த நாட்டியப் பெண்ணை 1200 ஆண்டுகளுக்கும் மேலாக தெய்வமாகக் கோயிலில் வணங்கி வருகிறோம். அவளது சிலையைச் செய்து சுந்தர மூர்த்தி நாயனாரோடு வணங்குகிறோம்.

பெண்கள் நாள்தோறும் கோயிலில் பூஜையின்போது ஆடியிருக்கிறார்கள். திருவிழாவின்போது, உலாவரும் போது தெய்வத்தின் முன் தெருக்களிலும் ஆடியிருக்கிறார்கள். ஆடும் பெண்களே பாடவும் செய்திருக்கிறார்கள்.

*'மங்கைமார் நடம்பயில் மாமழபாடியே*
*'பாலின் நேர் மொழி மங்கைமார் நடமாடி இசைபாட'*

என்பது தேவாரம். அதேபோல,

*'வீதித் தேர் ஓடும் அரங்கேறி*
*சேயிழையார் நடமாடும் திருவையாறே'*

என்பதும் அதுவே. தெருவில் விழாக்களில் ஆடப்படுவதால் தெருக்கூத்தாயிற்று. கோயில்களில் விழாக்காலங்களில் நாடகம் ஆடும் மரபும் அன்று தொட்டே உண்டு. நாடகங்களில் வசனமும், பாட்டும், நாட்டியமும் இணைந்து இருக்கும். கதைகளைக் காட்சியாகக் கொண்டு ஆடுவது. இதையும் பெண்கள் ஆடியிருக்கிறார்கள்.

'நாடகம் ஆடி மடவார்கள் பாடும் நறையூர்' என்பது சம்பந்தர் தேவாரம். கோயில்களில் இவ்வாறு பாடுவோரை சாந்திக் கூத்தர்கள் என்றும், பெண்களை சாந்திக் கூத்திகள் என்றும் சோழர் காலத்தில் அழைத்தனர் எனக் கல்வெட்டுகள் கூறுகின்றன. கோயில் பூஜையில் ஸ்ரீபலிவரை பூஜை நடந்தால் அதற்கு சாந்தி என்று ஆகமம் கூறியதை

முன்னரே கண்டோமல்லவா? கேரளாவிலும், கன்னியாகுமரி மாவட்டத்திலும் கோயிலில் பூஜை செய்பவரையே சாந்தி என்று தான் இன்றும் அழைக்கிறார்கள். 'மேல் சாந்தி', 'கீழ் சாந்தி', என்பது அவ்வட்டார வழக்கு. ஆதலால் பூஜைக்கு ஆடுவோர் சாந்திக் கூத்தர் ஆயினர். சாந்திக் கூத்தர்கள் நாடகம் ஆடும்போது முகத்தில் வண்ணம்பூசி, தலையில் பெரியதாக வாசிகை தரித்து (இன்றும் கதகளி ஆட்டத்திலும், தெருக்கூத்துகளிலும் தரித்துக் கொள்கிறார்கள்) ஆடுவர் எனப் பண்டைய நூல்கள் கூறுகின்றன.

சோழர் காலத்தில் அந்தந்த கோயில்களில் உள்ள பரமனையே. கதாநாயகனாகப் படைத்து நாட்டியங்கள் நடைபெற்றன. 'இராஜராஜேச்வர நாடகம்' என்பது தஞ்சாவூர் பெரியகோயிலில் நடைபெற்றது. தாராசுரத்துப் பெருமானை நாயகனாக்கி அக்கோயிலில் நாட்டியமாக ஆடப்பட்டது. ஒட்டக் கூத்தர் இயற்றிய தக்கயாகப்பரணி. இதுபோல 17, 18, 19 ஆம் நூற்றாண்டுகளில் நூற்றுக்கணக்கான கோயில்களில், குறவஞ்சி நாடகங்கள் இயற்றப்பட்டு ஆடப்பெற்றன. குற்றாலக் குறவஞ்சி, கும்பேசர் குறவஞ்சி, சரபேந்திர பூபாலன் குறவஞ்சி முதலியன எல்லாம் அவ்வாறு கோயில்களில் தோன்றிய நாட்டியங்கள்தாம்.

ஆதலால் அன்று கோயிலில் நிலவிய மரபை பிரதிபலிப்பவையாகத் தான் சோழர்காலக் கோயில்களிலும், பிற்காலக் கோயில்களிலும் ஏராளமான நாட்டியச் சிற்பங்களும், ஓவியச் சிற்பங்களும் செதுக்கப் பெற்றுள்ளன. ஒரு கோயிலில் எந்த நாட்டியம் சிறந்திருந்தது என அங்குள்ள சிற்பங்களைக் கொண்டேகூடக் கூறலாம். அந்த அளவுக்கு நாட்டியத்தை நாம் போற்றியதற்குக் காரணம், பரமனையே ஆடலாகக் கண்டதுதான். திருவீழிமிழலைப் பெருமானை சம்பந்தர் பாடுகிறார்.

*"விதிவழி மறையவர் மிழலை உளீர் நடம்*
*சதிவழி வருவதோர் சதிரே*
*சதிவழி வருவது ஓர் சதிர் உடையீர் உமை*
*அதிகுணர் புகழ்வதும் அழகே"*

என்று பாடுகிறார். (பரமனே, வேதத்தைப் பேணுகின்ற மறையவர் நிறைந்த ஊர் மிழலையில் உள்ளீர். நீர் 'ஜதி'களுக்கு ஏற்ப நடம்புரிகின்றீர். அந்த ஜதிவழி நடனம் 'சதிர்' ஆக அமைகிறது. அழகாக இருக்கிறது. ஆதலின் நல்ல உயர் குணத்தோர் உம்மை புகழ்வது பொருத்தமே')

மிகச்சிறந்த இசையும், நாட்டியமும் நம் கோயில்களில் வழிபாடாக என்று மீண்டும் இடம் பெறுகின்றனவோ அன்று நம் வழிபாட்டுமுறை பண்பட்டு நிறைவு பெறும் எனலாம்.

# 43. எட்டோடு ஐந்தாறு நடம்

திருமூலர் தமது திருமந்திரம் ஒன்பதாம் தந்திரத்தில் சுந்தரக் கூத்து என்ற தலைப்பில் "எட்டோடு ஐந்தாறு நடம்" எனக் கூறுகிறார்.

*"கொடுகொட்டி பண்டரங்கம் கோடு சங்காரம்*
*நடம் எட்டோடு ஐந்தாறு நாடியுள் நாடும்*
*திடமுற்று எழும்தேவ தாருவாம் தில்லை*
*வடமுற்ற மாவன மன்னவன் தானே" 2733*

என்கிறார் இதன் பொருள் என்ன?

பா. இராமநாதம்பிள்ளை அவர்களும் துடிசைக் கிழார் அ. சிதம்பரனார் அவர்களும் எழுதியுள்ள திருமந்திர விளக்கமும், குறிப்பும் (கழகப் பதிப்பு) என்ற நூலில்

"கொடுகொட்டி, பாண்டரங்கம், கோடு, ஐவகை சங்காரத்துடன் காளிக்கூத்து, முனிக் கூத்து, இன்பக்கூத்துங்கூடிய எட்டு ஐந்தொழில் கூத்து அறுசமயக் கூத்து என இருபத்திரண்டென்ப" எனவும் "நடம் எட்டு - ஐந்தொழில் நடத்துடன் காளிக் கூத்து, முனிக் கூத்து, ஆனந்தக்கூத்து எட்டு. ஐந்து கூடல், குற்றாலம், தில்லை, பேரூர், ஆலங்காடு இங்காடிய கூத்துக்கள் ஐந்து. ஆறு, அறுசமயங்களிலும் அவ்வவர் சமயத்துக் கேற்ற கூத்துக்கள்" எனவும் பொருள் தந்துள்ளனர். இருவரும் பரமன் நடத்தை இரு பத்திரண்டாகக் குறிப்பர். காலஞ்சென்ற பி. நடராஜன் அவர்கள் அண்மையில் தமது ஆங்கில மொழி பெயர்ப்பில் "கொடு கொட்டி, பாண்டரங்கம், கோடு, சம்ஹாரம் முதலிய எட்டு நடங்களும் பிற ஐந்து நடங்களும் பரமன் ஆடினார்" எனக் குறித்துள்ளார். இவர் நூலில் 'ஆறு' என்ற சொல்லுக்குப் பொருள் இல்லை.

ஒன்பது ஆகமங்களின் அடிப்படையில் தமது திருமந்திரத்தை இயற்றியதாகத் திருமூலர் கூறுகிறார். அவை காரணாகமம், காமிகாகமம், வீராகமம், சிந்தாகமம், வாதுளாகமம், யாமளம், காலோத்தரம், சுப்ரபேதம், மகுடாகமம் என ஒன்பதாகும் என

***"பெற்றநல் ஆகமம் காரணம் காமிகம்***
***உற்றநல் வீரம் உயர்சிந்தம் வாதுளம்***

*மற்றஅவ் யாமளம் ஆகும்கா லோத்தரம்*
*துற்றநல் சுப்பிரம் சொல்லு மகுடமே"*

என்று கூறுகிறார். இந்த ஒன்பது ஆகமங்களில் மகுடாகமமும் ஒன்று. மகுடாகமம் முழுவதும் கிடைக்கவில்லை. அதில் ஒரு பகுதியே கிடைத்துள்ளது. அதில் பரமனின் நிருத்தரூபம் சித்தரிக்கப்படுகிறது.

*"நிருத்த ரூபம் சதா த்யாத்வா*
*தக்ஷிணாலயம் ஆதிகம்*
*ஜ்யோதிரூபம் நடம் நிருத்யம்*
*ஸ்ருஷ்டி ஸ்திதி அந்த காரணம்"*

என்று விவரித்துக் கொண்டே செல்கிறது. ஆனந்தக் கூத்தாடும் பரமனை இதய மத்தியில் இருத்தி கலைமயமாகவும் நாத ரூபமாகவும் தியானிக்க வேண்டும். அவரை வட்டத்தின் நடுவில் ஒரு முகமும் இரு கால்களும், நான்கு கரங்களும் உள்ள நடேச மூர்த்தியாக தியானிக்க வேண்டும். அவர் முப்பத்தெட்டு கலைகளில் இருப்பவராகவும் முப்பத்தெட்டு மந்திரங்களில் இருப்பவராகவும் முப்பத்தெட்டு நிருத்தம் புரிபவராகவும் நினைந்து வணங்கவேண்டும் என"

*"ஹ்ருத்பத்ம மத்யே ஸம்ஸ்தாப்ய*
*நாத தந்திரம் கலாமயம்*



திவ்யபிரபந்தம், ஒரு காட்சி

*ஏகவக்தரம் சதுர் பாஹூம்*
*த்விபாதம் விருத்த மத்யகம்"*
*"அஷ்டத்ரிம்ஸத் கலாந்யாஸம்*
*அஷ்டத்ரிம்ஸாத்ம மந்த்ரகம்*
*அஷ்டத்ரிம்ஸத் பரம் நிருத்தம்"*

அஷ்டத்ரிம்ஸத் என்றால் 38 என்று பொருள். 'அஷ்டத்ரிம்ஸத் பரம் நிருத்தம் என்றால் 38 பரமநிருத்தம் என்று பொருள், ஆக மகுடாகமம் 38 நிருத்தங்களைப் பரமன் புரிவதாகக் கூறுகிறது. இதன் அடிப்படையில் பார்க்கும்போது "நடம் எட்டோடு ஐந்தாறு" என்பதற்குப் பொருள் விளங்குகிறது. ஐந்தாறு என்றால் முப்பது என்றும், எட்டும் சேர்ந்து 38 என்றும், 38 நடத்தை இங்குத் திருமூலர் குறிக்கிறார் என்றும் இது மகுடாகமத்தின் கருத்துப்படி உள்ளது எனவும் தெளியலாம். இங்கு நடங்கள் முப்பத்து எட்டில் கொடுகொட்டி, பாண்டரங்கம், கோடு, ஸம்ஹாரம் ஆகிய நடங்களும் அடங்கும். ஆதலின் திருமூலர் திருமந்திரத்துக்குப் பொருள் கூறும் போது அவர் குறித்துள்ள ஆகமங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால்தான் உண்மை தெளிவாகும்.



# 44. கழல் ஆடு திருவிரல்

அப்பர் ஆறாம் திருமுறையில் திருவதிகைப் பதிகத்தில் கீழ்வரும் பாடல் காணப்படுகிறது.

*குழலோடு கொக்கரை தாளம் மொந்தை*
*குறள்பூதம் முன் பாடத் தான் ஆடும்மே*
*கழல் ஆடு திருவிரலால் கரணம் செய்து*
*கனவின்கண் திருவுருவம் தான் காட்டும்மே*
*எழில் ஆரும்தோள் வீசித்தான் ஆடும்மே*
*ஈமப் புறங்காட்டில் ஏமந்தோறும்*
*அழல் ஆடும்மே அட்டமூர்த்தியாமே*
*அவன் ஆகில் அதிகை வீரட்டனாமே*

இப்பாடலில் இரண்டாவது வரி "கழல் ஆடு திருவிரலால் கரணம் செய்து" என்று உள்ளது காண்க. தருமை ஆதீனப் பதிப்பிலும், சமாஜப் பதிப்பிலும், பாண்டிச்சேரிப் பதிப்பிலும் கழல் ஆடு என்று தான் காணப்படுகிறது. ஆனால் திருப்பனந்தாள் பதிப்பில் மட்டும் "கழலோடு திருவிரலால் கரணம் செய்து" எனப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இப்பாடங்களில் எது பொருத்தம் என ஆய்வது இக்கட்டுரையின் நோக்கம்.

கழல் என்றால் அணி என்றும் கால் என்றும் பொருள் உண்டு. கழல் ஆடு திருவிரலால் கரணம் செய்து எனில் கழல் அணிந்த கால் விரல்களால் கரணம் செய்து எனப் பொருள் கொள்ளலாம். அவ்வாறு தான் தருமை ஆதீனப் பதிப்பில் அருணைவடிவேல் முதலியார் அவர்களால் பொருள் உரைக்கப்பட்டுள்ளது. "கழல் ஆடு திருவிரல் திருவடியின் கண்அசையும் சிறந்த விரல்கள். ஞானசக்தியும் கிரியா சக்தியுமே திருவடிகள் ஆதலின் விரல்கள் அவற்றின் கூறுகள் என்க. உயிர்களின் நுண்ணுடம்பை அசைத்தலாகக் கொள்க" என்று பொருள் கொடுத்துள்ளார்.

இப்பாடலில் நாட்டியத்தையே குறித்துள்ளதை காண்கிறோம். தான் ஆடும்மே, தோள் வீசித்தான் ஆடும்மே, அழல் ஆடும்மே என்று வருவதைப் பார்க்கிறோம். ஆடல் கலையில் திருவிரல் என்பது முத்திரைகள் காட்டும் கையைக் குறிக்கும். கை என்றும் ஹஸ்தம் என்றும் இதைக் கூறுவர். ஒற்றைக்கை இரட்டைக்கை, பிண்டி, பிணையல் என இதன் பிரிவுகள் உண்டு, மற்றும் எழில் கை, தொழில்



ஊர்த்வ தாண்டவர்

கை எனப் பெயரும் உண்டு. கை விரல்களால் முத்திரைகளைக் காட்டுவதால் திருவிரல் என்பது கையைக் குறிக்கும். முத்திரைகளைக் கொண்டு அபிநயம்பிடித்தல் ஆடலில் முக்கிய செயல் ஆதலால் நாட்டியப் பெண்ணுக்கே "கைகாட்டும் முறைக்காரி" என்று பெயர். "கை அரிவையர் மெல் விரல் காட்டி" என்றும் "சரியின் முன் கை நல்மாதர் சதிபட மாநடம் ஆடி" என்றும் ஞானசம்பந்தர் பாடுகிறார். ஆதலின் திருவிரல் என்பது கையைக்குறிக்கின்ற ஒரு கலை நுணுக்கச்சொல். முதலில் குறித்த பாடலில் "கழலோடு திருவிரலால் கரணம் செய்தல்" என்பது காலொடு கையையும் இணைத்து ஆடும் மரபு எனக் கொள்ளலாம். இதே இடத்தில் "கரணம் இடுதல்" என்ற ஒருசொல்லும் வந்துள்ளதைக் காண்கிறோம். 'கரணம்'என்பதும் ஒரு கலை நுணுக்கச் சொல். சிவபெருமான் ஆடிய ஆடல்கள் 108 என்றும் அவற்றிற்க்கு கரணம் என்றும், சொக்கம் என்றும் சுத்த நிருத்தம் என்றும் பெயர்கள் உண்டு எனச் சிலப்பதிகார உரைகளிலிருந்தும் நாட்டிய நூல்களிலிருந்தும் அறிகிறோம். நாட்டியம் தோன்றிய வரலாற்றைக் கூறுமிடத்து சிவபெருமான் இதைக்கூறியதாக பரதரின் நாட்டிய சாத்திரம் பகர்கிறது. சிவபெருமான் மாலையில் தான் ஆடிய இக்கரணங்களை நான்முகன் வாயிலாக பரதருக்கு போதித்தார் என்று நாட்டிய சாத்திரம் கூறுகிறது.

இன்று இந்திய நாட்டில் உள்ள அனைத்து நாட்டியங்களும் இக்கரணங்களின் அடிப்படையில் தான் ஆடப்படுகின்றன. பரத

நாட்டியத்தின் அடித்தளம் இக்கரணங்கள். இவற்றிற்கு நிருத்தக் கரணங்கள் என்றும் பெயர். பரதர் தமது நாட்டிய நூலில் 108 கரணங்களின் இலக்கணத்தையும் குறித்துள்ளார். அவ்வாறு குறிப்பிடும்போது கரணம் என்பதின் இலக்கணத்தையும் கூறுகிறார். காலும் கையும் இணைந்துபுரியும் ஆடல் செயலுக்கு நிருத்தக் கரணம் எனப் பெயர் என்கிறார்.

**"ஹஸ்த்த பாத சமாயோகஹ நிருத்தஸ்ய கரணம் பவேத்"** என்பது பரதரின் வாக்கு. அப்பர் பெருமானின் பாடலை இப்போது பாருங்கள்! கழலும் திருவிரலும் (கையும்) இணைந்து செய்யும் செயல் என பரதரின் பாடலுக்கு நேர்தமிழாக்கம் ஆகக்காணப்படுகிறது. "கழலோடு திருவிரல் ஆல் கரணம் செய்து' என்னும் வரி. கழல் என்பது கால் என்றும் திருவிரல் என்பதற்கு கை என்றும் பொருள் கொண்டால் தான் ஆடல் மரபுக்கு ஏற்றதாக உள்ளது. கழலாடு திருவிரல் என்று கொண்டால் ஆடல் மரபின் நுணுக்கம் இல்லாமல் போய்விடும். பாடல் முழுவதும் ஆடலையே அப்பர் பிரான் பாடி இருப்பதால் ஆடல் கலையின் நுணுக்கத்தை அவர் பாடி இருக்கிறார் என்பதில் ஐயம் இருக்க முடியாது. ஆதலின் இப்பாடலில் கழலாடு திருவிரலால் கரணம் செய்து என்பதைக் காட்டிலும் கழலோடு திருவிரலால் கரணம் செய்து என்பதுதான் பொருத்தம் என்று தோன்றுகிறது.



# 45. வெள்ளையர் பார்வையில் தமிழக சட்டம் ஒழுங்கு

1620ஆம் ஆண்டு தஞ்சையை ஆண்ட விஜயரகுநாத நாயக்கர் டென்மார்க் அரசர் நான்காவது கிறிஸ்டியன் என்பவருடன் ஒரு வர்த்தக ஒப்பந்தம் செய்து கொண்டார். அந்த ஒப்பந்தத்தின்படி தரங்கம்பாடியில் டேனிஷ்காரர்கள் ஒரு கோட்டையை அமைத்துக் கொண்டு வாணிகம் செய்ய அனுமதிக்கப்பட்டனர். அப்பொழுது தரங்கம்பாடி வந்த வெள்ளைக்காரர் ஒருவர் அவ்வூர் கோயிலில் நடைபெற்ற திருவிழா பற்றியும், இங்கு நிலவிய சட்டம் ஒழுங்கு பற்றியும், நேராகப் பார்த்து ஒரு குறிப்பு எழுதி வைத்துள்ளார். இது நேர்முக வர்ணனை போல் காட்சியளிப்பதடு மிகவும் சுவையான செய்திகளையும் தருகிறது.

இதை எழுதியவர் ஜான் ஒலப்ஸன் என்பவர். 1593ம் ஆண்டு ஐஸ்லேண்டில் சாதாரண விவசாய குடும்பத்தில் பிறந்தவர். டென்மார்க்கில் உள்ள கோபன்ஹேகன் நகருக்கு படிக்கவும் தொழில் செய்யவும் வந்தவர். அந்நாட்டு அரசரின் பீரங்கிச் சிப்பாயாக அமர்ந்தார். பின்பு 1618ம் ஆண்டில் டென்மார்க் அரசர் கிறிஸ்டியன், இந்தியாவுக்கு ஓவ்கீடு என்பவரை வர்த்தகத்துக்கு அனுப்பியபோது ஒலப்ஸன்னும் உடன் செல்ல விரும்பினார். ஆனால் அதற்கு அரசர் அனுமதி கொடுக்கவில்லை. அதன்பின்னர் தஞ்சைக்கும் டென்மார்க்குக்கும் 1620ல் ஒப்பந்தம் ஏற்பட்ட பின்னர் இந்தியாவுக்கு பீரங்கிச் சிப்பாயாக சென்று வர ஜான் ஒலப்ஸனுக்கு அரசர் அனுமதி கொடுத்தார். ஒலப்ஸன் ‘கிறிஸ்டியன்ஹாவன்’ என்ற கப்பலில் 1623ம் ஆண்டு. மே மாதம், தரங்கம்பாடி வந்து சேர்ந்தார். இவரது கப்பல் டென்மார்க்கிலிருந்து தரங்கம் பாடி வந்து சேர எழு மாதங்கள் பிடித்தன. அது அக்காலத்தில் மிகவும் விரைவான பயணமாக கருதப்பட்டது. தரங்கம்பாடியில் இவர் ஒன்றரை ஆண்டு காலம் பீரங்கிச் சிப்பாயாக பணிபுரிந்தார். அப்போதுதான் இங்கு நேரில் பார்த்தவற்றை குறித்து வைத்துள்ளார்.

“இங்குள்ளவர்கள் (இந்துக்கள்) தமது விழாக்களை பெரும்பாலும் இரவில் கொண்டாடுகிறார்கள். நான் ஒருநாள் இரவு தரங்கம்பாடி

கோட்டையில் பீரங்கி கொத்தளத்தில் நின்று கொண்டிருந்தேன். அங்கிருந்து பார்த்தால் எதிரே அந்தக் கோயில் தெரியும்.

தரங்கம்பாடிக் கோயில் ஒரு சதுரமான உயர்ந்த கட்டிடத்தை (விமானத்தை) கொண்டது. அதைச் சுற்றிலும் உயர்ந்த சுற்றுச் சுவர்கள் உள்ளன. அதன் நடுவில் ஒரு பரந்த முற்றம் உண்டு. அங்கு விவரிக்க முடியாதபடி பயங்கரமான சிற்பக் காட்சிகள் உண்டு. (அக்காலத்து வெள்ளைக்காரர்கள் இந்து தெய்வங்களை பயங்கரமான உருவங்கள் என வர்ணிப்பது வழக்கம்) அந்த கோயிலின் உள்ளே மிருக வடிவில் ஆறு பெரிய சிற்பங்கள் இருந்தன. (இவர் குறிப்பது வாகனங்களை) கோயிலின் உள்பகுதியில் தங்கத்தாலான மிகவும் அழகான பீடம் ஒன்றில் மூன்று தெய்வங்களின் உருவங்கள் இருந்தன. இந்த முக்கியமான மூன்று தெய்வங்களும்தான் ஆண்டுக்கு ஒருமுறை தேரில் ஏற்றி வீதி உலாவகக் கொண்டு வருகிறார்கள். (இவர் குறிப்பது சோமாஸ்கந்த சிவபெருமானின் உருவம். உமை, சிவபெருமான், முருகன் ஆகியோரின் உருவம்) இத்தேரை வீதிகளில் இழுத்துச் செல்கிறார்கள். முப்பது அல்லது நாற்பது கொட்டு வாசிப்பவர்களும் மூன்று நான்கு கொம்பு வாசிப்பவர்களும் தங்கள் கருவிகளை வாசித்துக் கொண்டு வருகிறார்கள். தனியார் என்ற பல வீரர்களும் இதன்முன் செல்கிறார்கள். அன்று கோயில் பசுக்களை எல்லாம் சுதந்திரமாக தெருவில் அவிழ்த்து விட்டு விடுகிறார்கள்.

நான் அன்றிரவு கோட்டை மேல் இருந்து கண்ட காட்சி இதுதான். தீவட்டி வெளிச்சங்களில் காட்சி நன்றாகத் தெரிந்தது. அவர்கள் ஆடிக்கொண்டும் பாடிக் கொண்டும் வருவது தெரிந்தது. கோயிலின் உள்ளே மற்ற நேரங்களில் தொங்கவிட்டு வைத்திருந்த அழகிய ஆடைகளையும், ஆபரணங்களையும் அணிந்து இவர்கள் ஆடிக் கொண்டு வருவது கண்கொள்ளாக் காட்சியாக விளங்கியது. ஒரு நடிகர் மீன்போல் வேடம் போட்டுக் கொண்டு எதையோ விழுங்குவது போல் ஆடிக்கொண்டு வந்தார். இது ஏதோ ஒரு கதையைச் சித்தரிக்கிறது எனத் தெரிந்தது.

நான் அருகிலிருந்த உள்ளூர் ஓர் இந்துவிடம், “ஏன் வாய் பேசாத சிலையை போய் நீங்கள் கடவுள் என வணங்குகிறீர்கள் என்று கேட்டேன். அதற்கு அவர் எங்கள் கடவுளை நாங்கள் கண்ணால் காண முடிகிறது. உங்கள் கடவுளை நீங்கள் பார்க்கக் கூட முடியாதே! என்று கூறினார். பின்னர் தேவதாசிகள் ஆடுவதைப் பார்த்தேன்.

ஆனால் இங்கு ஒன்று மட்டும் மிகவும் வியப்புடன் கூறத்தான் வேண்டும். இவர்கள் (இந்துக்கள் - நம் சமயத்தை பின்பற்றாததால்) நிரந்தரமான இருளில் மூழ்கியிருப்பவர்கள் என நாம் நம்புகிறோம்.

நாமோ ஒளியைக் கண்டவர்கள். இருப்பினும் இவர்களைக் காட்டிலும் நாம் ஏன் மேன்மையாக நடந்து கொள்வதில்லை. கூறப்போனால் மிகவும் கீழ்த்தரமாகத்தான் நடந்து கொள்கிறோம். இந்தியாவில் சட்டமும், ஒழுங்கும் பெரும்பாலும் நிலைத்து நிற்கிறது. வணிகர்கள் சரியான எடைகளையும் அளவைகளையும் தான் பயன்படுத்துகிறார்கள். மக்கள் கெட்ட பழக்கங்களை வெறுக்கிறார்கள். நம் (ஐரோப்பிய) நாடுகளில் உள்ளதுபோல் அளவுக்கு மீறி உணவு உட்கொள்ளுவது, ஏராளமாகக் குடிப்பது போன்ற பழக்கங்கள் இங்கு இல்லை. தரங்கம்பாடியில் உள்ள இந்திய மக்கள் யாராவது குடிகாரனைப் பார்த்துவிட்டால் தலையை ஆட்டி மார்பில் அடித்துக் கொண்டு அவன்மீது காரி துப்புவார்கள். இவனை பேய் பிடிச்சிருக்கிறது என்று கூறுவார்கள்."

இவ்வாறு ஜான் ஒலப்ஸன் 1625ஆம் ஆண்டு தாம் நேரில் பார்த்ததை குறித்துள்ளார். இவர் தீவிர கிறிஸ்துவரான போதிலும் தரங்கம்பாடி மக்கள் அனைவரிடமும் நெருங்கிய நண்பராக இருந்திருக்கிறார். இவரது நெருங்கிய நண்பர்களில் பிராமணர் ஒருவர் இருந்தார் எனக் குறிக்கிறார். 370 ஆண்டுகளுக்கும் முன்னர், மேலை நாட்டுக்காரர் நேர்முகப் பார்வையில் இந்தியர் வாழ்க்கை, குறிப்பாக தரங்கம்பாடி மக்களின் வாழ்க்கைப் பற்றிய நேர்முக வர்ணனை இது. நமது பண்பை பிரதிபலிக்கும் ஒரு கண்ணாடி என்று கூட இதைக் கூறலாம். அன்று சட்டம் ஒழுங்கு நிலைத்து இருந்தது. மக்கள் குடியை வெறுத்தனர். நேரில் பார்த்த வெள்ளைக்காரர் கூறுகிறார். ஆனால் இன்று?

இவர் குறித்துள்ள மற்றொரு செய்தியும் முக்கியமானதுதான்.

'டேனிஸ் போர்க்' என்று பெயர் பெற்ற தரங்கம்பாடி கோட்டை மாளிகை மிகவும் அழகான கட்டிடம். மூலைகளில் கொத்தளங்கள் அழகாக அமைக்கப்பட்டுள்ளன. செங்கல்லில் அமைந்த இந்தக் கட்டிடத்தை இந்திய கொத்தனார்கள் தான் கட்டினார்கள். இவர்கள் நம் ஐரோப்பிய கட்டு வேலைக்காரர்களை விட மிகவும் விரைவாகவும், தொழில் நுணுக்கம் சிறந்தவர்களாகவும் திகழ்கிறார்கள். இந்த கோட்டையின் நடுவில் எழிலான 'சர்ச்' ஒன்றும் கட்டப்பட்டுள்ளது. இதை இந்திய கொத்தனார்கள் தாம் கட்டினார்கள். நாம் கொடுத்த டேனிஷ் வரைபடத்தை பின்பற்றி இவர்கள் கட்டி இருக்கிறார்கள்! என்று நம் கட்டிடக் கலைஞர்கள் ஐரோப்பிய கொத்தனார்களைக் காட்டிலும் மிகச் சிறந்தவர்கள் என இந்த வெள்ளைக்காரர் 1625லேயே எழுதி இருப்பதும் குறிப்பிடத் தகுந்தது.

"நமக்குள்ளே பழங்கதைகள் சொல்வதில் ஓர் பயனுமில்லை. திறனான புலமை எனில் வெளிநாட்டோர் அதை வணக்கம் செய்ய வேண்டும்," என்றான் பாரதி. இதோ மேற் குறித்தவை அதற்கு எடுத்துக்காட்டு. ஆனால் அது 370 ஆண்டுகளுக்கு முன்னர் நடந்தது!



பிரபந்தம் : நாட்டியம், ஒரு காட்சி

# 46. சிலைகளை விட்டு விடுங்கள்!

வந்தவாசி தாலுகா நெடுங்குன்றம் விஜய ராகவப் பெருமாள் கோயிலில் இருந்து அக்டோபர் மாதம் 21ம் தேதி சிலைகள் திருட்டு போயின என்று பத்திரிகை செய்தி வெளியானது. இச்செய்தி கலை வரலாற்றில் ஈடுபாடு உள்ளவர்களுக்கு பெரிதும் கவலையை தரும் என்பதில் ஐயமில்லை.



விஜயராகவப் பெருமாள்
செங்குன்றம்

நெடுங்குன்றம் ஒரு வரலாற்றுச் சிறப்பு மிக்க ஊர். தஞ்சாவூர் சீமையை சீரும் சிறப்புடன் நூற்றைம்பது ஆண்டுகள் ஆண்டு, தமிழக இசைக்கும், நாட்டியத்துக்கும் இலக்கியம், கலை ஆகிய அனைத்து பண்புகளுக்கும் பெரும் தொண்டு ஆற்றிய தஞ்சை நாயக்க மன்னர்களுடைய மூதாதையர்கள் நெடுங்குன்றத்தைச் சார்ந்தவர்கள்.

“நெடுங்குன்றம் நாயக்கர் குடும்பம்” என்றே இவர்களது குடும்பம் குறிக்கப்படுகிறது. விஜய நகரப் பேரரசர் கிருஷ்ண தேவராயர், அச்சுதராயர் காலத்திலேயே இவ்வூர் சிறந்த ஊராகத் திகழ்ந்திருக்கிறது.

கிருஷ்ண தேவராயர் காலத்தில் தான் இந்த விஜயராகப் பெருமாள் கோயில் கட்டப்பட்டது. விஜய நகரக் கால கலைக்கு இந்தக் கோயில் சிறந்த எடுத்துக் காட்டு. இக்கோயிலின் அதிஷ்டானத்தில் அச்சுதராயரின் கல்வெட்டு இருக்கிறது. அதில் இருந்து இவ்வூர் நெடுங்குன்றம் என்று வழங்கப்பட்டது. (இப்பொழுது நெடுங்குணம் என்று அழைக்கிறார்கள்) அது ஐயங்கொண்ட சோழ மண்டபத்து படை வீட்டு ராஜ்யம் என்னும் பகுதியில் பல்குன்ற கோட்டம் என்னும் உட்பிரிவில் இருந்தது. இங்கு கோயில் கொண்டிருக்கும் தெய்வம் ஸ்ரீராமர்.

நெடுங்குன்றம் ராமச்சந்திரப் பெருமாள் கோயில் உள் பிரகாரமும் உள் கோபுரமும் 1530க்குள் கட்டப்பட்டன.

அதற்குப் பின்னர் இந்தக் கோயிலை மீண்டும் விரிவாக்கி இரண்டாவது பிரகாரம், வெளிக்கோபுரம் முதலியவை கட்டியிருக்கிறார்கள். வெளிக் கோபுரத்தை தஞ்சை நாயக்கர்களில் ஈடுஇணையற்றவனான விஜய ரகுநாத நாயக்கன் கட்டியிருக்கிறான். அவனுடைய கல்வெட்டுக்கள் இதில் உள்ளன. உள்ளே பெரிய எழில் வாய்ந்த மண்டபம் ஒன்று இருக்கிறது.

அந்த அளவுக்கு இந்த கோயில் தஞ்சை அரசர்களின் வாழ்வில் முக்கிய இடம் பெற்ற வரலாற்றுச் சிறபபு வாய்ந்த கோயில். அந்த காலத்து சிலையைத் தான் திருடிக்கொண்டு போய் விட்டார்களோ என்று பார்த்தபோது அந்தக் காலத்து சிலையத் திருடிக்கொண்டு போகவில்லை. ஆனால் கிருஷ்ண தேவராயர் காலத்தில் செய்யப்பட்ட அந்த அழகான பெருமாளின் மூன்று கையைத்தான் உடைத்து திருடிக் கொண்டு போய் இருக்கிறார்கள். எவ்வளவு அழகான சிலை, எவ்வளவு வரலாற்று சிறப்பு வாய்ந்த சிலை, அதை உடைத்து எடுத்துக் கொண்டு போய் இருக்கிறதைப்பார்த்தால் அதிகம் தங்கம் இருக்குமோ என்று பார்க்கத் திருடிப் போயிருப்பது போல் தோன்றுகிறது. அதில் ஒரு பைசா தங்கம் கூடக் கிடைக்காது.

நம் நாட்டில் ஒரு தவறான கருத்து நிலவுகிறது. நமது உற்சவ சிலைகள் எல்லாம் 'பஞ்சலோகத்தால்' ஆனவை; தங்கம், வெள்ளி எல்லாம் போட்டிருப்பார்கள் என்று நினைக்கிறார்கள். அது முற்றிலும் தவறு. பஞ்சலோகம் என்பதே தற்காலத்தவைதான். பழைய நூல்கள் எதிலும் பஞ்சலோகம் என்ற கருத்து கிடையாது. பத்தாயிரக்கணக்கான கல்வெட்டுகளில் ஒரு கல்வெட்டில் கூட பஞ்சலோகம் என்ற குறிப்பு கிடையாது. நூற்றுக்கணக்கான சிலைகளை விஞ்ஞானிகள் ஆராய்ந்து இருக்கிறார்கள். எதிலும் தங்கம் தடயத்துக்குக் கூடக் கிடையாது. ஆதலால் நமது பழைய உற்சவ விக்ரகங்கள் எதிலும், தங்கம் இம்மியளவு கூடக் கிடையாது.

சிலையை உடைத்தது மட்டுமின்றி இங்கிருந்து ஒரு சுப்ரமண்யர் சிலையையும், சிவபெருமான் சிலையையும் திருடிக் கொண்டு போயிருக்கிறார்கள். அது இரண்டும் இந்த கோயிலைச் சேர்ந்தவை இல்லை. இதே ஊரில் உள்ள தீர்க்காசலேச்வரர் என்னும் சிவன் கோயில் சிலைகள். அங்கு உற்சவ மூர்த்தியாக திகழ்ந்தவை. அந்தக் கோயில் மிகவும் பழமை வாய்ந்த கோயில்.

கி.பி. எட்டாம் நூற்றாண்டில் பல்லவர் காலத்திலேயே நெடுங்குன்றம் சிறந்த ஊராகத் திகழ்ந்திருக்கிறது என அங்குள்ள கல் சிலைகள்

காட்டுகின்றன. மிக மிக அழகான பல்லவர் கால சப்தமாதர் கற் சிலைகள் அங்கு இருக்கின்றன.

இங்கு பல்லவர் கால வலம்புரி கணபதி, துர்க்கை, திருமால் ஆகிய கற்சிலைகள் எல்லாம் இருக்கின்றன. இந்தக் கோயிலில் சிறந்த வழிபாடு செய்ய கிருஷ்ண தேவராயர் காலத்தில் மான்யம் கொடுத்திருக்கிறார்கள். இந்த கோயிலைச் சேர்ந்ததுதான் திருட்டுப் போன சுப்ரமண்யர், சிவன் விக்ரகங்கள். இந்த சிவன் கோயிலில் பாதுகாப்பு போதாது என்று தான் ராமர் கோயிலில் கொண்டு வைத்தார்கள். இப்பொழுது அங்கிருந்தே போய்விட்டது. "இதோ இந்த வருடம் திருவிழா எடுத்தபோது எடுத்த கலர் படம் சார் இது. இதோ இந்த சுப்ரமண்யரும், சிவனும்தான் திருட்டுப் போயிடுத்து என்று அந்த கலர் போட்டோவைக் காண்பித்தார் அவ்வூர் சிவஞானம். அவர் கண்களில் இருந்து நீர் தாரைதாரையாக வழிந்தது.

நல்லதை எண்ணித்தான் பெருமாள் கோயிலில் வைத்தார்கள். அது ஒரு பெரிய கோட்டை மாதிரி இருக்கு. இரண்டு கோபுர வாசல்களும், பூட்டியது பூட்டியபடியே இருக்கின்றன. பின்புறத்தில் ஒரு மாந்தோப்பு இருக்கிறது. அதிலிருந்து ஒரு மரத்தின் கிளை வழியாக உள் பிரகாரத்துக்குள் குதித்து இருக்கிறார்கள். திருடர்கள், இரும்புக் கதவு கோட்டைக் கதவு போன்ற மரக்கதவு என ஐந்து பூட்டுக்களை உடைத்திருக்கிறார்கள். மரக்கதவை ஹாச்சா பிளேடால் அறுத்து உள் பூட்டை உடைத்து உள்ளே சென்று எடுத்திருக்கிறார்கள். இது ஒருவன் செய்ததாக இருக்க முடியாது. மூன்றுக்கும், மேற்பட்டவர் செய்திருக்க வேண்டும் என்றும் உள்ளூர் ஆட்கள் உதவி இல்லாமல் செய்திருக்க முடியாது என்றும் ஊரார் கருதுகின்றனர்.

மோப்ப நாய், இந்தக் கோயிலின் பின்புறத்தில் இருந்து ஒரு கிலோ மீட்டர் தூரம் ரோட்டோரமாக ஓடி பின்னர் நின்று விட்டதாம். சேத்துப் பட்டு சப்-இன்ஸ்பெக்டர் சுந்தரம், "இதுவரை ஏதும் தடயம் கிடைக்கவில்லை. ஆனால் விரைவில் பிடித்துவிடுவோம்," என்று நம்பிக்கையுடன் கூறுகிறார்.

நமது கோயில் சிலைகளை வெட்டி உருக்கினால் ஒரு பைசா தங்கம் கூடக்கிடைக்காது. அதனால் உத்சவ சிலைகளை உடைக்காதீர்கள். வெட்டாதீர்கள். விட்டுவிடுங்கள்.



# 47. பத்தூர் நடராஜர் காட்டிய வழி

கும்பகோணத்துக்கருகில் பத்தூரில் கண்டெடுக்கப்பட்டு லண்டனுக்கு கடத்தப்பட்ட நடராஜர் சிலையை இந்தியாவுக்கே திருப்பிக் கொடுக்க வேண்டும் என இங்கிலாந்து நாட்டு உச்ச நீதிமன்றம் இப்பொழுது தீர்ப்பு வழங்கிவிட்டது.

ஏற்கெனவே லண்டன் நீதி மன்றமும், மேல் முறையீடு மன்றமும், இந்நடராஜர் சிலை பத்தூர் கோயிலுக்கே திருப்பிக் கொடுக்கப்பட வேண்டும் என்ற தீர்ப்பை வழங்கியுள்ளன.

இந்நடராஜர் சிலையை வாங்கியிருந்த கனடா நாட்டு எண்ணெய்க் கம்பெனி, இங்கிலாந்து நாட்டு உச்ச நீதிமன்றத்தில், மூன்றாவது முறையாக வழக்குத் தொடர்ந்தது. இங்கிலாந்து உச்ச நீதிமன்றம் என்பது பிரபுக்கள் சபை (House of Lords) ஆகும். அம்மன்றம்தான் இவ்வழக்கைக் கேட்டு, எதிர்த்தரப்பு வாதத்தை விசாரித்து அவர்களது வழக்கைத் தள்ளுபடி செய்து, நடராஜர் சிலை பத்தூருக்கே கொடுக்கப்பட வேண்டும் என்னும் தீர்ப்பை உறுதி செய்து ஆணை வழங்கியது. இனி இந்நடராஜர் சிலை இந்தியா திரும்பி விட்டது. இங்கிலாந்து உச்ச நீதி மன்றத்தில் தொடுத்த எதிர்த்தரப்பு வழக்கு சில முக்கியமான வாதங்களைக் கூறியது.

1. லண்டனில் இருக்கும் நடராஜர் பத்தூர் நடராஜரே அல்ல; 2. இடிந்து பாழடைந்து வழிபாடில்லாத பத்தூர் கோயிலுக்கு நடராஜர் சிலையைக் கோரும் உரிமை சட்டப்படி இல்லை; 3. இந்திய நாட்டு ஹிந்துக் கோயில் பற்றிய வழக்கை பிறசமயத்தை பின்பற்றும் இங்கிலாந்து நாட்டு நீதிமன்றம் விசாரிக்க வேண்டிய நியதி இல்லை; 4. காலந்தாழ்ந்து போனதால் இவ்வழக்கு சட்டப்படி காலாவதியானதாகிறது; 5. பத்தூர் கோயில் தக்கார் நியமித்து இட்ட ஆணையில் குழப்பம் உள்ளது. சட்டப்படி செல்லத்தக்கது அல்ல.

எதிர்த்தரப்பின் இவ்வனைத்து வாதங்களையும் பிரபுக்கள் சபையும் உச்ச நீதிமன்றமும் நிராகரித்தது. இப்பொழுது நிராகரித்துவிட்டு நடராஜர் சிலையைத் திருப்பி அனுப்ப ஆணையிட்டுள்ளன. இவ்வழக்கை மூன்று நீதிமன்றங்களிலும் இந்தியாவுக்காக வாதாடியவர் ஆங்கிலேய வழக்கறிஞர் ஹேமில்டன் என்பவராவார். இவருக்கு பல

தொல்லியல், வரலாற்று நுணுக்கங்களையும் எடுத்துரைத்து உதவியவர் தமிழக அரசின் முன்னாள் தொல்லியல் துறை இயக்குநர் டாக்டர் இரா. நாகசாமியாவார். இருவரது சேவையையும் லண்டனில் உள்ள இந்திய ஹைகமிஷன் பாராட்டியுள்ளது.

இந்த முக்கியமான தீர்ப்பை அடுத்து இங்கிலாந்திலும் (அதேமாதிரியான சட்ட அமைப்பைக் கொண்ட) அமெரிக்காவிலும் உள்ள பல இந்திய செப்புப் படிமங்களும், கற்சிலைகளும், புராதனமான இந்தியக் கலாசாரக் கருவூலங்களும் நம் நாட்டிற்கு மீளும் வாய்ப்பு உண்டாகியுள்ளது என்று இரா. நாகசாமி நமது நிருபரிடம் கூறினார். (பத்திரிகையில் வந்த செய்தி)



# 48. வாதியா வினை

ஸ்ரீலஸ்ரீ தருமை குருமகாசந்நிதானம் அவர்களின் அருளாசியால் சென்னை தருமபுரம் ஆதீனம் சமயப் பிரச்சார நிலையத்தில் 20-7-98 அன்று நடந்த வைத்தீஸ்வரன்கோயில் சந்தனக் குழம்பு பிரசாதம் வழங்கும் விழாவில் பங்கு பெறும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. பலபெரியோர்கள் வந்திருந்தனர். இளைஞர்கள் வந்திருந்தனர். பெண்கள் பலர் வந்திருந்தனர். திரளாக வந்திருந்த சிவனடியார்களைக் காண மனம் மகிழ்வுற்றது. குறிப்பாக நான் சில நாட்களுக்கு முன்னர் தான் வைத்தீஸ்வரன் கோயில் குட நீராட்டுப்பெருவிழாவை ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் அன்பால் காணும் பேறு பெற்றேன். அதோடு சென்னையில் சந்தனக் குழம்பு பிரசாதம் விழாவிலும் பங்குபெறும் வாய்ப்பு கிட்டியது என்றால் அது குரு அருள் அன்றி வேறு எதுவாக இருக்கமுடியும்? இது புள்ளிருக்குவேளூர் பெருமானின் பேரருள் என்ற எண்ணத்துடன் பங்கு கொண்டேன். விழாவில் ஸ்ரீசெல்வமுத்துக்குமாரசுவாமிக்கு சத்ருசம்ஹார திரிசதி அர்ச்சனை நடைபெற்றது. அது முடிந்ததும் புள்ளிருக்குவேளூர் திருப்பதிகங்கள் ஓதப்பெற்றன. நிலைய ஓதுவா மூர்த்திகள் சாமி தண்டபாணி, புலவர் சோமசுந்தரதேசிகர், திரு.முத்துக்குமாரசாமி ஆகியோர் இன்னிசையுடன் பாடினர். மிகவும் அற்புதமாக இசைத்த பாடல்கள் அனைவரையும் தெய்வீக உணர்ச்சியில் திளைக்க வைத்தன. தேவாரப்பதிகங்களைப் கேட்டுக்கொண்டே இருக்கலாம் போல இருந்தது. அனைவரும் மெய்மறந்து கேட்டுக் கொண்டிருந்தனர்.

அப்பர் பெருமான் புள்ளிருக்கு வேளூர் பதிகத்தில்,

*“பத்திமையால் பணிந்து அடியேன் தன்னை*
*பலநாள் பாமாலைபாட பணிவித்தவன்”*

என்று பாடியுள்ளார் அல்லவா? அந்தப்பாடலை ஓதுவாமூர்த்திகள் ஓதியபோது அப்பர் பெருமானின் வரலாறே கண்முன் வந்து நின்றது.

சிவலோக நெறி அறிய சிந்தை தந்த அருளாளன்’

என்று அல்லவா பாடுகிறார். புள்ளிருக்குவேளூர் பெருமானை அனைத்துப் பிணிகளையும் போக்கவல்ல வைத்தீஸ்வரனாகத்தானே நாம் வணங்குகிறோம். அதை அப்பர் பெருமானே பாடியுள்ளார்.

*"மந்திரமும் தந்திரமும் மருந்தும் ஆகி*
*தீராத நோய் தீர்த்து அருளவல்லான் தன்னை"*

என்கிறார் அல்லவா? வேத காலத்தில் பிஷக்கு என்று ஒருசொல் உண்டு. அதற்கு மருத்துவன் என்று பொருள். வேதமந்திரங்கள் எல்லாம் சிவபரனை மருத்துவர்களுக்கெல்லாம் மருத்துவனாக் உன்னைப் போற்றுகிறேன் என்று கூறுகின்றன. 'பிஷக்தமம் த்வா பிஷஜாம் ச்ருணோமி' என்பது அம்மந்திரம். மிக அருமையாக தேவாரப் பதிகங்களைப் பாடும் போது மனத்தில் உள்ள துன்பங்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. அந்நிலையில்தான் அன்று அங்கு வந்திருந்த அனைவரும் இருந்தனர். இதையே ஞானசம்பந்தப் பெருமான் ஒரு பாடலில் பாடுகிறார்.

*"மாது ஒரு கூறனை வலஞ்சுழி மேவிய மருந்தினை வயல்காழி*
*நாதன்வேதியன் ஞானசம்பந்தன் வாய்நவிற்றிய தமிழ்மாலை*
*ஆதரித்து இசை கற்று வல்லார் சொலக்கேட்டு உகந்தவர் தம்மை*
*வாதியா வினை மறுமைக்கும் இம்மைக்கும் வருத்தம் வந்து*
*அடையாவே"*

(வாதியா என்றால் பாதிக்காது என்று பொருள். பாதித்தல் என்ற வடசொல்லின் திரிபு) அன்று சென்னையில் அப்பதிகங்களைக் கேட்டவர்கள் அனைவரும் மனம் உகந்தனர். அவர்களை வினைகள் வந்து தீண்டா என்று சொல்லவும் வேண்டுமா! சென்னையில் இப்பணி கடந்த 45 ஆண்டுகளாக தொடர்ந்து நிகழ்ந்து வருவதாக வரவேற்பு நிகழ்த்திய சாமி. தண்டபாணி அவர்கள் கூறினார். இது வியக்கத்தகும் தொடர் நிகழ்ச்சி, நம் குருமகா சந்நிதானம் அவர்களின் அருளாலும் ஆக்கபூர்வச் செயலாலும் நடைபெறும் பெருநிகழ்ச்சி. இதுபோல் ஒவ்வொரு ஊரிலும் திருப்பதிகங்களை இசைகற்று பாடவல்லார் பாடவும் லயித்து கேட்டு உய்யவும் தானே நம் கோயில்கள் உள்ளன. இதைக் காட்டிலும் மருந்தும் உளதோ?



# 49. கள்ளுக்கடை கல்வெட்டு

தமிழக அரசு தொல்பொருள் ஆராய்ச்சித்துறை ஆரம்பித்த காலத்திலிருந்தே அத்துறையின் இயக்குனராக இருந்து, ஓய்வு பெற்றவர் கலைமாமணி டாக்டர் இரா. நாகசாமி. நாற்பது ஆண்டுகளாக, தமிழக வரலாற்றுக்கு அடிப்படையாக உள்ள கல்வெட்டு ஆராய்ச்சிகளிலும், பட்டயம், சிற்பம், படிமம், கட்டடம், ஓவியம், இலக்கியம் முதலான கலைகளில் கருத்தூன்றி, பல விதமான சான்றுகளை வெளிப்படுத்தியவர். தஞ்சை மாவட்டத்திலுள்ள குடவாசல் பகுதியில் புதைந்திருந்த நடராஜர் சிலையொன்று களவாடப்பட்டு, பல கைகள் மாறி லண்டனில் சுமார் 30 லட்சம் ரூபாய்க்கு விலை போனதும், அந்தச் சிலை நம் தமிழ்நாட்டைச் சேர்ந்தது என்பதற்கான பலவிதமான சான்றுகளைக் காட்டி லண்டன் உயர்நீதிமன்றத்தில் வாதாடி, வெற்றியும் பெற்றவர், சிலை மீட்ட செம்மல் நாகசாமி அவர்கள்.

அவரைச் சந்திக்கச் சென்றோம்.

அந்த அறையில் நான்கு, ஐந்து கண்ணாடி பீரோக்கள் இருந்தன. எல்லாவற்றிலும் புத்தகங்கள், புத்தகங்கள்...

பீரோக்களின் மேலேயும் பலவித அளவுகளில் புத்தகங்கள் அடுக்கிவைக்கப்பட்டிருந்தன. சிரித்துக் கொண்டே வரவேற்றார்.

மெதுவாகப் பேச ஆரம்பித்தோம்.

“தொல்பொருள் ஆராய்ச்சித் துறையின் டைரக்டராகப் பல ஆண்டுகள் அரசுப்பணி செய்திக்கிறீர்கள். பல இடங்களுக்கு, காடுகளுக்கு, கோயில்களுக்குப் போயிருப்பீர்கள். அவற்றில் உங்கள் அனுபவங்கள் பற்றி...”

“ம்.... சுமார் 40 வருடமாகவே இதேதான் செய்து கொண்டிருக்கிறேன். நான் மட்டும் அல்ல, என்னுடன் பணி செய்தவர்களும் உடன் வந்திருக்கிறார்கள். சாதாரணமாகவே ஒரு வீடுபற்றி டாகுமெண்ட்டு இருந்தால்தான், அந்த வீட்டு வரலாறு தெரியும். அதுபோலத்தான் இந்தக் கல்வெட்டு விஷயங்களும், கல்வெட்டு என்பதும் பதிவுப் பத்திரம் மாதிரிதான்! ஒவ்வொரு கல்வெட்டும் அந்நாட்டினுடைய வரலாற்றின் ஏதாவது ஒரு அம்சத்தை

நமக்குத் தெரிவிக்கும். சொத்துக்கள் என்ன, அதற்கு உரிமையாளர்கள் யார், தான தருமம் செய்வது எப்படி, எந்த விகிதத்தில் செய்வது என்பதுபோன்ற விஷயங்களை, அப்போது வழக்கிலிருந்த எழுத்துகளால் கல்லில் செதுக்கப்பட்டிருக்கும். எல்லா விஷயங்களிலும் கவனம் செலுத்தினால், இத்தகைய ஆராய்ச்சியின்போது பழங்கால நாணயங்கள், பாத்திரங்கள், ஆயுதக் கருவிகள், ஓவியங்கள், சிற்பங்கள் என்று பட்டியல் நீண்டுகொண்டே போகும் அளவிற்குப் பொருட்கள் கிடைக்கும். பிறகு அந்தப் பொருட்களை வைத்து ஆராய்ச்சி செய்து, எந்த நூற்றாண்டைச் சேர்ந்தது, எந்த அரசன் காலத்துக்குப் பொருத்தமாக அமைந்தது என்றெல்லாம் சொல்லமுடியும்."

(சற்று நிறுத்தினார். தொடர்ந்தார்.)

"மேலும், எந்த நாட்டுச் சரித்திரம் எழுதினாலும், அதைச் சான்றோடு எழுத வேண்டும் - பத்திரங்களில் எழுதுவது போல. 2000 வருடத்துக்கான கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. ஒரு நாட்டின் சமுதாய அமைப்பு, வாழ்க்கைமுறை எல்லாவற்றிற்கும் சான்றுகள் உள்ளன. பல கல்வெட்டுகளில் அரசன் பெற்ற வெற்றிகள் மட்டுமல்ல, நீதிமுறை, தண்டனை வகைகள், நிர்வாக முறை பற்றிய செய்திகளும் ஆதாரத்துடன் கிடைத்துள்ளன. ஒரு நாட்டின் நீர்ப்பாசன முறைகள், ஏரிகளை ஆழப்படுத்தல் போன்ற விவரங்களும் கல்வெட்டுகளில் கிடைக்கின்றன.."

"சரி... கல்வெட்டு என்றால் பிரம்மாண்டமான கல்வெட்டு எவ்வளவு பார்த்திருப்பீர்கள்?"

"ம்... உத்தரமேரூரில் ஆராய்ச்சி செய்தபோது ஒரு மண்டபத்தில் அம்பது அடி நீளத்திற்கு, ஆறு, ஏழு வரிகள் இருந்தன! சில கல்வெட்டுகளில் சங்கீதம்பற்றிய விஷயங்களும் பாடும் வகைகளும் கூட எழுதப்படுள்ளன!"

"ஆராய்ச்சி என்பதால் குறைந்தபட்சமாக இரண்டு மூன்று மட்டுந் தான் போவீர்களா...?"

"சொன்னால் நம்ப மாட்டீர்கள்! கங்கை கொண்ட சோழபுரம் பகுதியில் ஆராய்ச்சி செய்யப்போனோம். பொட்டல் காடு. டீ கூட குடிக்க வகையில்லை. ஒரு ஐடியா செய்தோம். 'இரண்டு நாட்கள் சோழர் விழா' என்று ஏற்பாடு செய்தோம். மேடைகட்டி பத்மா சுப்ரமண்யம் நடனவிழா ஏற்பாடு செய்தோம். சுற்றஉ வட்டாரத்திலே இருந்து சுமார் 10,000 பேர் வந்துவிட்டனர்! நடனம் மிகச்சிறப்பாக நடந்து கொண்டிருந்தது. அவரோ மெய்மறந்து ஆடிக் கொண்டிருந்தார். ஆனால் எனக்கு அன்று ஒரே கிலியாகப் போய்விட்டது. ஆராய்ச்சி

செய்யப்போற இடத்திலே, அவர் நடனமாடும் ஸ்டேஜ்லே, அவர் காலருகே சுமார் முக்கால் அடி நீளத்திற்கு ஒரு நட்டுவாக்களி மேடையேறிவிட்டது! நெஞ்சு திக்திக் என்று அடித்துக் கொள்கிறது... நல்ல வேளையாக ஒரு தருணத்தில் அதைப் பிடித்துத் தூக்கிப் போட்டோம். மனசுக்கு நிம்மதி... அப்புறம் அந்த ஏரியாவில் அகழ்வாராய்ச்சி செய்தேன். பல விஷயங்கள் கிடைத்தன..."

"காடுகளுக்கு உள்ளே போய் கல்வெட்டு சமாச்சாரங்கள் ஆராய்ச்சி செய்தது உண்டா?"

"சொல்றேன். வீரமரணம் அடைந்த வீரர்களுக்கு எடுக்கப்பட்ட சிலைகள் உண்டு. இவை பெரும்பாலும் நடுகற்களாகக் காணப்படுகின்றன. சில சிற்பங்களில் அழகுணர்ச்சி இல்லாவிடினு, வீர உணர்ச்சி தெரியும் வகையில் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. நரசிங்கநல்லூர் என்ற இடத்தில் கிடைத்த சிம்ம விஷ்ணு காலத்திய நடுகல் ஒன்றில் வீரன் ஒருவனது உருவம் மிக அழகாக உள்ளது. இடது கரத்தில் கேடயத்தைத் தாங்கி, வலதுகரத்தில் வாளேந்தி வீசுகின்ற அந்த வீரன் 1400 ஆண்டுகளுக்குப் பின்னரும் இன்னும் உயிரோடு போர்புரிவது போலவே இருக்கிறது... அதேமாதிரி நடு கல் விஷயங்கள் செங்கம் பகுதியில் இருப்பதாக அறிந்தேன். அங்கு போய்விட்டு வந்த அனுபவம் மறக்க முடியாதது.."

சற்று நிறுத்தி கண்களை மூடிக்கொண்டார். அப்படியே பின்னோக்கி அவர் நினைவுகள் சென்றன போலும்!

"ம்... 27 வருஷங்கள் ஓடிவிட்டன. இப்போதுதான் நடந்ததுபோல் தோன்றுகிறது. செங்கம் பகுதியில் ஆராய்ச்சி செய்ய, என் துறை சம்பந்தப்பட்ட சிலருடன் ஜீப்பில் பயணம். செங்கம் பகுதி காடும், முள்ளும் மலையும் நிறைந்த பகுதி. ஊர்கள் அங்கும் இங்குமாகத்தான் இருக்கும். ஜனநடமாட்டம் அரிது. காலை எட்டு மணிமுதல் ஜீப்பில் போய்க் கொண்டேயிருக்கிறோம். சுமார் 10 மணிவரை ஒருவர் கூடத் தென்படவில்லை! யாரிடம் விசாரிப்பது? வெகு தொலைவில் ஒரு இளைஞர் நிற்பதுபோல் தெரிந்தது... அப்...பாடி! ஜீப் டிரைவர் நாராயணனிடம் அந்த வாலிபரை நோக்கி ஜீப்பை ஓட்டு என்றேன்! அவரும் ஓட்டினார்! அப்புறம்தான் வேடிக்கை. அந்த வாலிபர் ஜீப் சப்தம் கேட்டுவிட்டு, எதிர்ப்பக்கம் நடக்க ஆரம்பித்து விட்டார்!" என்று சொல்லிச் சிரித்தார் நாகசாமி.

"ஏன், என்ன ஆயிற்று?"

"கேளுங்க கதையை... சரியான கூத்து அது. கல்வெட்டு ஆராய்ச்சிக்குப் போன இடத்துலே இந்த மாதிரி அனுபவம் அப்புறம் கிடைக்கவேயில்லை!" என்று சொல்லித் தொடர்ந்தார்.

"ஜீப் தன்னை நோக்கி வருவது கண்ட அந்த வாலிபர் ஒரேயடியாக ஓட ஆரம்பித்துவிட்டார்! எனக்கோ பதற்றம். ஆளேயில்லாத ஊரிலே, ஒரு ஆசாமியைப் பார்த்து விட்டோம். அவரை விடுவதாவது? டிரைவரிடம், 'இன்னும் வேகமாய் போங்க அந்த ஆளைப் பிடிச்சே தீரணும்!" என்றேன். பாவம், டிரைவர்! என்ன வேகமாய் ஓட்டியும் பலனில்லை. ஒரு இடத்திற்கு மேல் ஜீப் போக முடியாதபடி இக்கட்டு. சரி. இறங்கி நடந்தோம். போதாக்குறைக்கு, 'நில்லுங்க, நில்லுங்க'ன்னு கத்திகிட்டே போனோம்.... அப்பத்தான் அந்தப் பெண்கள் வந்தார்கள்...!"

"என்னது, பெண்களா?"

"ஆமாம்! சில குடிசைகள் தெரிய ஆரம்பித்தன. அதிலேர்ந்து சில பெண்கள் வெளியே வந்தாங்க. உரக்கச் சிரித்தனர். அதவும் அந்த வாலிபன் இருந்த பக்கம் பார்த்து! எங்களுக்கு ஒரு மாதிரி ஆயிடுச்சி. அப்போ ஒரு பொண்ணு எங்களைப் பார்த்து, அரசாங்க அதிகாரிங்க மாதிரி தெரியுது.. எங்கே வந்தீங்க?" என்று தைரியமாகக் கேட்டாள்.

எங்களுக்கு ஒரே ஆச்சரியம். இளம் முறுக்கான வாலிபர் எங்களைப் பார்த்து ஓடுகிறார். ஒரு பெண் தைரியமாகப் பேசுகிறாளே!

"அம்மா... இங்கே பழைய கோயிலில் கல்லுலே எழுத்து ஏதாவது இருக்கான்னு பார்க்க வந்திருக்கோம்... வந்து... அந்த வாலிபர் எங்களைப் பார்த்து ஏன் ஓடறார்...?"

நான் சொன்னதைக் கேட்ட அப்பெண்கள் தங்களுக்குள் பார்வைகளைப் பரிமாறியபடி, 'அப்போ, நீங்க 'அதுக்கு' வரலியா?" என்றாள் அப்பெண்! கேட்டுவிட்டு, அந்த வாலிபர் பக்கம் மறைந்திருந்த இடத்தை நோக்கி கைதட்டி, உரக்கச் சிரித்துவிட்டாள்!

எனக்கு ஒரே குழப்பம் "ஏம்மா, அதுக்கு வரலியான்னு கேட்டே? எதுக்கு?" என்றேன்.

அந்தப்பெண் சொன்னதைக் கேட்டு நாங்களும் வாய்விட்டுச் சிரித்தோம்!

விஷயம் இதுதான்: அரசு அதிகாரிகள் 1970-1971ம் ஆண்டுகளில், கிராமங்களுக்குச் செல்வார்கள். குடும்பக் கட்டுப்பாடு செய்வதன் அவசியத்தைச் சொல்லி தீவிர பிரச்சாரம் செய்வார்கள். குறிப்பாக, ஆண்கள் குடும்பக் கட்டுப்பாடு அறுவை சிகிச்சை செய்து கொள்ளவேண்டும் என்று வலியுறுத்தி, இவ்வளவு ஆண்கள் குடும்பக் கட்டுப்பாடு அறுவை சிகிச்சை செய்து கொண்டாக்ள் என்று புள்ளி விவரங்களுடன் கணக்குக் காட்டுவதும் தொடங்கிய காலம்! அதனால் நாங்கள், அந்த வாலிபரைத் துரத்தியது அந்த மாதிரி 'ஆள்'

பிடிக்கத்தான் என்று பயந்து ஓடியிருக்கிறார்! அதுவும் திருமணமாகி சில மாதங்களே ஆகியிருந்த வாலிபர் என்று சொல்லி, அப்பெண் குறும்பாகச் சிரித்திருக்கிறார்! பிறகு அந்த வாலிபருக்குத் தைரியம் அளித்தாள் அப்பெண்!"

"நல்ல தமாஷ்தான்! சரி... நீங்கள் எப்படி அந்த செங்கம் பகுதியில் கல்வெட்டு கிடைக்கும் என்று நம்பிச் சென்றீர்கள்?"

"அந்தச் சமயத்தில், எங்களிடத்தில் கல்லூரி, பல்கலைக் கழக ஆசிரியர்கள் எல்லாம் கல்வெட்டு பற்றி கற்றுக் கொண்டிருந்தார்கள். நாகலிங்கம் என்ற ஆராய்ச்சி மாணவர், செங்கம் பகுதியிலிருந்து சில கல்வெட்டுக்களின் எழுத்துக்களைக் கொண்டுவந்து, இந்தப் பகுதியில் நீங்கள் நேரிலேயே வந்து பார்க்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அவர் காட்டிய எழுத்துக்கள் மிகவும் தொன்மையானவை. இறந்துவிட்ட வீரர்களுக்கு எடுத்த நடு கற்களில் காணப்பட்டவை. நடு கல் என்பது நாட்டுக்காகத் தன் உயிரைத் தியாகம் செய்த வீரனுக்கு, மக்கள் கல்நட்டு, பெயர் பொறித்து, உருவம் பொறித்து வழிபடும் சின்னம் ஆகும். சங்க காலத்தில் இம்மரபு சிறந்திருந்தது. அவ்வைக்கு நெல்லிக்கனி ஈந்து பெரும்புகழ் பெற்ற அதியமான் நெடுமான் அஞ்சி, போர்க்களத்தில் வீரமரணம் எய்தினான். அப்போது அவ்வையார் உடன் இருந்தாள். அவன் மார்பில் வேல் பாய்ந்து, இறந்து கிடந்ததைக் கண்டாள். 'அந்தோ, அதியா, உன் மார்பிலா வேல் தைத்தது? இல்லை இல்லை. உன்னிடத்தில் யாசித்தவரின் கைகளையல்லவா துளைத்தது, உன்னால் காக்கப்படுவோரின் கண்கள் நீர் சொரிய, அருந்தமிழ்ப் பாடும் புலவர்களின் நாவில் அல்லவா தைத்து நிற்கிறது? என்று பாடினள்! பிறகு அதியமானுக்கு ஒரு கல் நட்டனர். அதைபார்த்த அவ்வை, "உயிரோடு இருந்தபோது பெரிய மலையை உடைய நாட்டையே அவனுக்குக் கொடுத்தாலும் வாங்கிக் கொள்ள மாட்டான். ஆனால் இன்று ஒரு சிறிய நடு கல்லான இடத்தில், சிறு குவளையில் கள் கொண்டு, பனை நாரில் வடித்துத் தெளிக்கிறார்கள்.. அதையும் ஏற்றுக் கொள்ளும் ஒரு கல்லாகிவிட்டானே" என்று இரங்கிப்பாடுகிறார். இதுபோன்ற சங்ககால நடுகற்கள் கிடைக்குமோ என்றுதான் அந்தப் பகுதியில் போனபோது இப்படி நிகழ்ந்தது! கல்வெட்டுக்கும் கள்ளுக்கும் சம்பந்தம் உண்டா என்பதற்கு எங்களுக்கு அடுத்த அனுபவத்தில் புரிந்தது!" என்று புதிர் போட்டார் நாகசாமி.

"கள்ளுக்கும், கல்வெட்டுக்குமா?"

"அது இன்னொரு அனுபவம். அதுவும் செங்கம் பகுதியில் ஆராய்ச்சியின்போதுதான்! ஜீப்பிலேயே ஒருமணி நேரம் மறுபடியும் பயணம். ஒரு குடிசை தெரிந்தது. சந்தோஷமாக ஜீப்பை,

அக்குடிசையின் வாசலில் நிறுத்தினோம். குடிசையிலிருந்து வெளியே ஓடி வந்த ஆசாமியைப் பார்த்துத் திடுக்கிட்டோம்...

சஸ்பென்ஸ் கொடுத்துப் பேசினார்.

"ஒரு முரட்டு ஆசாமி. கையில் தடி. முகத்தில் நீண்ட தாடி. குடிசையிலிருந்து ஓடி வந்தான்... 'டிரைவர், வண்டி எடு, ஓடிப்போயிடலாம்'னு சொல்லி முடித்து எல்லோரும் வண்டிக்குள் ஏறுவதற்குள், தாடிக்காரன் எங்கள் அருகே வந்துவிட்டான். குப்பென்ற கள் நாற்றம் வாட்டசாட்டமாயிருந்தான். 'எங்கே வந்தீங்க? யாரு நீங்க?' கனமான குரல்.. குடியினால் தடுமாற்றமான குரல்!

நாங்கள் சற்றுத் தயங்கினோம்.

அவனே பேசினான். 'என் பேர் முருகன். இது கள்ளுக்கடை. உங்களுக்கு என்ன வேணும்?'

சற்று தைரியத்துடன், "வந்து... இங்கே ஏதாவது கல்வெட்டு... அதாம்பா கல்லிலே எளுத்து எளுதியிருக்கா? பாத்திருக்கயா?" என்று கேட்டேன்.

"ஹ்ம்... வா காட்றேன்!" என்று சொன்னவாறே ஜீப்பில் முன் இருக்கையில் என் பக்கம் உட்கார்ந்து விட்டான்! பயங்கரமான நாற்றம். ம்.. கள் எழுத்தா, கல் எழுத்தா? எல்லாம் என் தலையெழுத்து... மனதுக்குள் சபித்துக் கொண்டே, டிரைவருக்கு ஆணையிட்டேன்.

அந்த முருகன் வழிகாட்டியபடியே, ஜீப் பள்ளத்திலும், மேட்டிலும் இறங்கி, ஏறியது. என் டிரைவர் முனகினான். ஆனால் முருகனின் அதட்டுக் குரல் கேட்டுப் பணிந்தான். கடைசியில் ஒரு வகையாக, பெரிய ஏரிக்கரையில் வண்டி வந்து நின்றது. எல்லோரும் குதித்தோம், வண்டியில் இருந்து! அந்த ஏரிக்கரையில் ஒரு கல் இருந்தது. அதனருகே போய் நின்றான் முருகன்! நாங்களும் அருகே சென்று பார்த்தோம். ஆஹா... ஆஹா... என்று குதிக்காத குறை. நடுகல் வீரன்! உருவம் பொறித்த நடுகல்! தமிழும், வட்டெழுத்தும் கலந்து எழுதப்பட்டிருந்தது. என் அனுபவத்தின் காரணமாக, விரைவில் அது பல்லவ மன்னன் மகேந்திரவர்மன் காலத்திய கல்வெட்டு என்று புரிந்து போயிற்று! எங்கள் குழுவிற்கு உற்சாகம். முருகனை மறந்தோம். டிரைவரை மறந்தோம். 1300 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்து உயிர்த்தியாகம் செய்த ஒரு மாபெரும் வீரன் புகழோடு உயிர்பெற்று வருவது போலிருந்தது. மாபெரும் வீரனின் வரலாறு கிடைத்துவிட்டது என்று இறுமாப்பு!... அக்கல்லை படி எடுத்துக் கொண்டோம். ஜீப்பில் ஏறிக்கொண்டோம். முருகன் மெதுவாகக் கேட்டான். "ஏங்க, இந்தக் கல்லைப் பார்த்தீங்களே, உங்க அதிகாரி உங்களை மெச்சிப்பாங்களா?"

அதற்கு என் உடன் வந்தவர்கள், "இவர்தாணப்பா மேலதிகாரி" என்று சொல்லிச் சிரித்தனர்.

ஜீப்பைவிட்டு, இறங்கும் முன்பு, முருகனிடம் நான் கேட்டேன்.. "உனக்கு என்னப்பா வேண்டும்?"

"ஐயா, போதை கொஞ்சம் தெளிஞ்சு போச்சு. மறுபடியும் ஒரு மொந்தை போடணும்!" அவனுக்கு ஐந்து ரூபாய் எடுத்துக்கொடுத்தேன்.

ஆனால் அவனோ, "ஒரு மொந்தை ஒண்ணரை ரூபாய்தான்" என்று சொல்லி அதற்குமேல் வாங்க மறந்துவிட்டான்!

"முருகா, இது மாதிரி ஏதாவது கல்வெட்டு இருக்கா? வழி காண்பிக்கிறாயா? உன் அட்ரஸ் என்ன?" என்று கேட்டேன்.

'ம்... என் அட்ரஸா? கேர் ஆஃப் கள்ளுக்கடை' என்று சொல்லிவிட்டு குடிசைக்குள் ஓடிவிட்டான் முருகன்!"

சொல்லி நிறுத்தினார் நாகசாமி.

"இப்பத்தான் புரியுது, கள்ளுக்கடைக்கும் கல்வெட்டுக்கும் சம்பந்தம்! சரி, உங்களோடு வரும் குழுவில், யாராவது தனியே வேறு வழியில் சென்று ஏதாவது கண்டுபிடித்துச் சொல்லியிருக்கிறார்களா?"

"ஓ! அதுவே ஒரு வேடிக்கை நிகழ்ச்சி. இன்னொரு பார்ட்டியிலே சந்தரமூர்த்தி என்பவர், வேறொரு வழியில் சென்றார். அவருக்கு வழிகாட்டியாயிருந்தவன், இதோ கூப்பிடு தூரம்... என்று சொல்லியே ரொம்ப தூரம் நடத்தியே அழைத்துச் சென்றுவிட்டான்! காலையிலே நடக்க ஆரம்பித்து சுமார் மூன்று மணி நேரம் நடந்து போயிருக்கிறார்கள்! அப்புறம் ஒரு இடத்தில் ஒரு கல்லைக் கண்டார்கள். சந்தோஷம் தாங்க முடியவில்லை. அவர்கள் கண்டது! கல் என்பது சரி. பூமியில் புதைக்கப்பட்டிருந்ததும் சரி. ஆனால் நடுகல் இல்லை, நட்ட கல். அதாவது சாதாரண இந்தக் காலத்து மைல்கல்! உற்சாகம் வடிந்து விட்டது! என்ன செய்வது? இது மாதிரியும் அனுபவம் உண்டு. என் அனுபவத்தில், முதல் நூற்றாண்டு முதல் 20ம் நூற்றாண்டு வரை கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன!"

கல்வெட்டு, தொல்பொருள் ஆராய்ச்சி பற்றி இந்த 68 வயதுக்காரரிடம் பேசியபோது ஓர் இளைஞனின் உற்சாகம் பளிச்சிட்டது.

*1998ம் ஆண்டு குங்குமம் மாத இதழில் வெளியான கட்டுரை*





## நூலாசிரியர்

வித்யாவசஸ்பதி டாக்டர் இரா. நாகசாமி அவர்கள் கோவை மாவட்டம், ஊஞ்சலூரில் 1930ல் பிறந்தவர். சம்ஸ்கிருத மொழியில் எம்.ஏ. பட்டப் படிப்பும், தொல்லியலில் டாக்டர் பட்டமும் பெற்றவர். சங்க இலக்கியம் முதல் அண்மைக் கால இலக்கியம் வரை தமிழில் ஆழ்ந்த புலமை பெற்றவர். குறிப்பாக சைவ இலக்கியங்களில் சிறப்பாக ஈடுபட்டு பல நூல்களை இயற்றியவர். இவரது கட்டுரைகள் யுனெஸ்கோ நிறுவனத்தால் 20க்கும் மேற்பட்ட உலக மொழிகளில் வெளியிடப்பட்டுள்ளன. தமிழக தொல்லியல் துறையின் முதல் இயக்குநராக பொறுப்பேற்ற இவரது 22 ஆண்டு காலப் பணியில் தமிழகம் முழுவதிலும் கல்வெட்டிலும், கலைகளிலும், பெரும் விழிப்புணர்ச்சி ஏற்படுத்தியவர். தொல்லியல், காசுகள், கலைகள், கோயில் வழிபாடு, சிற்பம், ஓவியம், இசை, நாட்டியம் ஆகிய பல துறைகளிலும் வல்லுநர். கர்நாடக இசைப் பாடல்கள் பல இயற்றியவர். இராஜராஜவிஜயம், ஞானக்குழந்தை, அப்பர் சரிதம், மணிமேகலை முதலிய பத்துக்கும் மேற்பட்ட நாட்டிய நாடகங்களை இயற்றியவர். பண்முறையிலேயே பாடல்களைப் பாடி நாட்டியம் அமைத்தவர். இவரது நாட்டிய நாடகங்கள் ஸ்வீடன், ஜெர்மனி, இங்கிலாந்து, அமெரிக்கா, கானடா ஆகிய உலக நாடுகளில் மிகவும் சிறப்பாக நடிக்கப்பெற்று புகழ் பெற்றன. பத்தூரில் கிடைத்த நடராஜர் சிலை வழக்கில் இந்திய அரசின் சார்பில் லண்டன் உயர்நீதிமன்றத்தில் சிறப்பாக சாட்சியம் அளித்து நீதிபதிகளின் பாராட்டுகளைப் பெற்றதோடு வெளிநாடு சென்ற சிலையை இந்தியாவுக்கு மீட்டுத் தந்தவர். சிலை மீட்ட செல்வர் என பொள்ளாச்சி வள்ளல் நா. மகாலிங்கம் அவர்களால் பட்டம் அளித்து சிறப்பிக்கப்பட்டவர். இவரது தொல்லியல் கலை சேவையைப் பாராட்டி தமிழக அரசு ''கலைமாமணி'' பட்டம் அளித்து சிறப்பித்துள்ளது.